# "இது மெய்...

## ...நீங்களும் லக்ஸ் டாய்லட் சோப் உபயோகித்து அதிக அழகைப் பெறலாம்"

என்று கூறுகிறார்

சாவித்திரி



நிச்சய பலனைத்தரும் ஒரு ஒழுங்கான அழகு பராமரிப்பு இதோ! சாவித்திரி கூறுவதாவது: "நான் லக்ஸ் டாய்லட் சோப்பின் நறுமணம் கொண்ட வெண்மையான நுரையை சருமத்தின் மேல் நன்றாகத் தேய்க்கிறேன் பிறகு கழுவி, மிருதுவான துண்டினால் துடைக்கிறேன். சருமம் புது அழகைப் பெறுகிறது."




## லக்ஸ் டாய்லட் சோப்

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 377-X30 TM

# கல்கி பொருளடக்கம்

மலர் 12 இதழ் 48 | 1953 ஜூன் 28 | விஜய ஆனி 14உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

★  ★

தஞ்சை ஜில்லா போர்டு தலைவர் ஸ்ரீ வி. நாடிமுத்து பிள்ளை எம். எல். ஏ. அவர்களின் மைத்துனரும் குளிக்கரை ஸ்ரீ வைத்திலிங்கம் பிள்ளையின் குமாரருமான செஞ்சிவி சாமியப்பன் B.Sc.க்கும் ஸ்ரீ சுந்தரேசம் பிள்ளையின் புதல்வி சௌபாக்யவதி பிரேமநாவுக்கும் சென்ற 5-6-53 அன்று பட்டுக்கோட்டை "சந்திர விலாஸ்" பங்களாவில் திருமணம் வெகு விமரிசையாக நடைபெற்றது. திருமணத்திற்கு நண்பர்களும் உறவினர்களும் நகர பிரமுகர்கள் பலரும் விஜயம் செய்து மணமக்களுக்கு ஆசி கூறினர். தம்பதிகளுக்கு ஏரான மான வாழ்த்துச் செய்திகள் வந்து குவிந்தன. அன்று மாலையில் இன்னிசைக் கச்சேரி நடைபெற்றது. திருமணத்திற்கு விஜயம் செய்தவர்களுக்கும், வாழ்த்துச் செய்திகள் அனுப்பியவர்களுக்கும் ஸ்ரீ வி. நாடிமுத்து பிள்ளை அவர்கள் தனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறார்.




மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 48

# பழங் கணக்குப் படலம்

பணம் இழந்தவன் பழைய கணக்குப் பார்ப்பது வழக்கம்; இது அவசியமானதுதான். காரியத்தில் வெற்றி காணாதவன் ஆத்ம சோதனையில் இறங்குவதுண்டு; இதுவும் அவசியமானதே யாகும். அப்போதுதானே பழைய தவறுகளை மீண்டும் செய்யாமல் வெற்றி காணும் உபாயங்களைத் தேடலாம்?

அகில இந்திய பிரஜா—சோஷலிஸ்ட் கட்சியின் மகாசபை சென்ற வாரத்தில் பேதல் என்ற இடத்தில் நடந்தது. அங்கத்தினர்கள் பழங் கணக்குப் பார்த்தார்கள். ஆத்ம சோதனையும் செய்து கொண்டார்கள். ஒருவர்மீது ஒருவர் குற்றம் சுமத்தினார்கள். மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்கள். ராஜீனாமாக்கள் வெளி வந்தன; மறுபடியும் உள்ளே போயின! முடிவில் ஆற அமர யோசித்து முடிவு செய்யலாம் என்ற முடிவுக்கு வந்தார்கள்!

தலைமை வகித்த ஆசாரிய கிருபளானி வழக்கம்போல் விகடகவி வேஷம் பூண்டு நடித்தார். காங்கிரஸ் தலைவர்களின் தவறுகளை எடுத்துக் கூறி வெளுத்து வாங்கினார்! அப்படி வெளுத்து வாங்கியபோது அவருடைய சாயமும் கொஞ்சம் வெளுத்தது!

"காங்கிரஸ் தலைவர்களை இவ்வளவு திட்டுத் திட்டுகிறீர்களே! அவ்வளவு மோசமானவர்களிடம் 'எனக்குப் போட்டியாக அபேட்சகரை நிறுத்த வேண்டாம்' என்று விண்ணப்பம் ஏன் போட்டீர்கள்?" என்னும் தர்ம சங்கடமான கேள்வியைச் சில அங்கத்தினர்கள் கேட்டு வைத்தார்கள். இதிலிருந்துதான் ஆசாரிய கிருபளானிக்காக அப்படி ஒரு விண்ணப்பம் ஸ்ரீமதி ஸுசேதா கிருபளானி போட்டார் என்பது வெளியாயிற்று. (இதைக் காங்கிரஸ் நிர்வாகிகள் வெளிப்படுத்திப் பிரமாதப் படுத்தாததைப் பாராட்ட வேண்டும்.)

மேற்படி கேள்வி எழுந்த பிறகு ஆசாரிய கிருபளானி 'நான் செய்தது தவறுதான்' என்று ஒப்புக் கொண்டார். அதை அங்கீகரித்து மற்றப் பிரதிநிதிகள் மன்னிப்புக் கொடுத்து விட்டார்கள்.

நம்முடைய அபிப்பிராயத்தில், ஆசாரிய கிருபளானி தமக்கு ஒரு ஸ்தானத்தை விட்டுக் கொடுக்கும்படி காங்கிரஸ் தலைவர்களைக் கேட்டுக் கொண்டதில் தவறு ஒன்றும் இல்லை. காங்கிரஸ் தலைவர்கள் விட்டுக் கொடுக்க முன் வந்ததிலும் வியப்பு ஒன்றும் இல்லை. பார்க்கப்போனால், ஆசாரிய கிருபளானி மூன்று வருஷங்களுக்கு முன்புவரை காங்கிரஸ்வாதியாய் இருந்தவர். இன்றைக்குக் காங்கிரஸுக்கு அடுத்தபடியாக தேசத்தில் உள்ள பெரிய அரசியல் கட்சிக்குத் தலைவராக விளங்குகிறார். அவர் விட்டுக் கொடுக்கும்படி கேட்டதிலும் குற்றமில்லை; காங்கிரஸ் தலைவர்கள் பெருந்தன்மையாய் விட்டுக் கொடுத்ததிலும் குற்றமில்லை.

ஆனால் ஏதோ செய்யத் தகாத காரியம் செய்து விட்டதுபோல் எண்ணி மறைத்து வைத்ததும், பிறகு குற்றத்தை ஒப்புக் கொண்டு பச்சாதாபப் பட்டதுந்தான் அர்த்தமற்ற காரியங்கள்.

பணம் இழந்தவன் பழைய கணக்குப் பார்ப்பது வழக்கம்; இது அவசியமானதுதான். காரியத்தில் வெற்றி காணாதவன் ஆத்ம சோதனையில் இறங்குவதுண்டு; இதுவும் அவசியமானதே யாகும். அப்போதுதானே பழைய தவறுகளை மீண்டும் செய்யாமல் வெற்றி காணும் உபாயங்களைத் தேடலாம்?

அகில இந்திய பிரஜா—சோஷலிஸ்ட் கட்சியின் மகாசபை சென்ற வாரத்தில் பேதல் என்ற இடத்தில் நடந்தது. அங்கத்தினர்கள் பழங் கணக்குப் பார்த்தார்கள். ஆத்ம சோதனையும் செய்து கொண்டார்கள். ஒருவர்மீது ஒருவர் குற்றம் சுமத்தினார்கள். மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்கள். ராஜீனாமாக்கள் வெளி வந்தன; மறுபடியும் உள்ளே போயின! முடிவில் ஆற அமர யோசித்து முடிவு செய்யலாம் என்ற முடிவுக்கு வந்தார்கள்!

தலைமை வகித்த ஆசாரிய கிருபளானி வழக்கம்போல் விகடகவி வேஷம் பூண்டு

ராஜிநாமாக்கள் ஒப்புக் கொள்ளப் பட்டிருந்தால் பேதல் மகாநாடு " கத்தப் பேத்தல் மகாநாடு " என்று பெயர் பெற்றிருக்கும்.

அரசியல் கட்சிகள் பலமும் செல்வாக்கும் பெறுவது முக்கியமாக அந்தந்தக் கட்சியின் தலைவர்களைப் பொறுத்தது தான்.

நேருஜி ஒருவர் இல்லாவிட்டால் காங்கிரஸ் இதற்குள் அடியோடு செல்வாக்கு அற்றுப் போயிருக்கக் கூடும்.

அதுபோலவே ஸ்ரீ ஜெயப்பிரகாஷும் ஸ்ரீ அசோக் மேத்தாவும் விட்டு விட்டுப் போனால் சோஷலிஸ்டுக் கட்சி இப்போது உள்ள செல்வாக்கையும் இழந்துவிடும் என்பது நிச்சயம். அவ்விதம் ஒன்றும் நேராதது சோஷலிஸ்டுக் கட்சியின் நல்ல காலத்துக்கு அறிகுறி.

பிரஜா சோஷலிஸ்டுகள் பழங் கணக்குப் பார்த்ததும் ஆத்மசோதனை செய்து கொண்டதும் ஒருவர் மேல் ஒருவர் குற்றம் சுமத்திப் பிறகு சமாதானமாகப் போனதும் நன்மையே ஆகும். வருங்காலத்தில் கட்சி வளர்ந்து பலம் பெறுவதற்கு இவை உதவியாக இருக்கும்.

சென்ற பொதுத் தேர்தலில் காங்கிரஸுக்கு அடுத்த படியாகத் தேசத்தில் சோஷலிஸ்டுக் கட்சியே மொத்தத்தில் அதிக ஓட்டுகளைப் பெற்றது. இதிலிருந்து சோஷலிஸ்டுக் கட்சிக்கும் அதன் கொள்கைகளுக்கும் தேசத்தில் கணிசமான செல்வாக்கு உண்டு என்பது வெளியாயிற்று. ஆனால் கட்சியின் தலைவர்கள் அந்தச் செல்வாக்கை நல்ல முறையில் உபயோகப் படுத்திக் கொள்ளவில்லை.

எல்லா இடங்களிலும் தேர்தலுக்கு நின்று சக்தியைச் சிதற விடாமல் சில இடங்களில் முயன்று வேலை செய்திருந்தால், பார்லிமெண்டிலும் சட்ட சபைகளிலும் சோஷலிஸ்டுக் கட்சிக்கு ஓரளவு ஸ்தானங்கள் கிடைத்திருக்கும்.

அவ்விதம் கிடைக்காத காரணத்தினால் கட்சிக்குள்ளே மனச்சோர்வும் தோல்வி மனப்பான்மையும் மிகுந்து விட்டன. இதன் அறிகுறிகளே பேதல் மகாநாட்டில் வெளியாயின.

சோஷலிஸ்டுகள் மனச்சோர்வு அடைவதற்கோ தோல்வி மனப்பான்மை கொள்வதற்கோ உண்மையில் காரணம் கிடையாது. நாட்டில் அவர்களுக்கு உள்ள செல்வாக்கை ஸ்திரப்படுத்திக் கொண்டு மேலும் வளர்ப்பதற்கு வழி வகைகளைத் தேடவேண்டும்.

நேருஜியின் அழைப்புக்குச் சோஷலிஸ்டுத் தலைவர்கள் நிபந்தனை போடாமல் இணங்கி இருந்தால் அவர்களுடைய பலம் வளர்ந்திருக்கும். ஸ்ரீ ஜயப்பிரகாஷ் போன்றவர்கள் மத்திய மந்திரி சபையில் சேர்ந்து நேரு சர்க்காரின் வேலைத் திட்டங்களைச் சோஷலிஸ்டுப் பாதையில் திருப்பியிருந்தால் அதை ஒரு மாபெரும் வெற்றியாகக் கொண்டாடியிருக்கலாம். அப்படி முடிக்கிரா விட்டால், எந்த நேரத்திலும் ராஜிநாமா செய்து வெளி வந்திருக்கலாம். இந்த இரண்டு விதத்திலும் சோஷலிஸ்டுக் கட்சியின் பலம் அபிவிருத்தி அடைந்திருக்கும்.

" தும்பை விட்டு விட்டு வாலைப் பிடிப்பது " என்பது அரசியலில் மிக்க கேட்டை விளைவிக்கக் கூடியது. நேருஜி சர்க்காருடன் சோஷலிஸ்ட் கட்சியார் ஒத்துழைக்க மறுத்துவிட்டு, மாகாணங்களிலே உள்ள காங்கிரஸ் மந்திரி சபைகளுடன் ஒத்துழைக்க முன்வருவது வெறும் பைத்தியக்காரத்தனமாக முடியும்.

## தள்ளு குப்பையை !




ஜெனரல் நாஜீப் எகிப்தைக் குடியரசு நாடு என்று பிரகடனம் செய்து தாமே ஜனாதிபதியாகவும், பிரதம மந்திரியாகவு மிருக்கப் போவதாகத் தெரிவித்திருக்கிறார்.

புதிய ஆந்திர மாகாணத்தில் அப்படி நடக்கக் கூடும் என்பதை ஆசாரிய கிருபளானி சூசகமாக வெளியிட்டார். "காங்கிரஸுடன் எப்போதுமே ஒத்துழைப்பதில்லை என்று வைத்துக் கொள்ள முடியுமா! அப்படி வைத்துக் கொண்டால் ஆந்திர மாகாணத்தில் என்ன நடந்துவிடும் தெரியுமா!" என்று ஒரு கேள்வியைப் போட்டுப் பயமுறுத்தினார்.

ஆந்திர மாகாணத்தில் காங்கிரஸ் என்ற பெயர் எவ்வளவு அபகீர்த்திக்கு ஆளாகியிருக்கிறது என்பதைத் தென்னாட்டிலுள்ள நாம் அறிவோம். சமீபத்திலும் அதற்கு அத்தாட்சி கிடைத்தது. கர்நூல் தொகுதியிலிருந்து பார்லிமெண்டுக்கு நடந்த உபதேர்தலில் காங்கிரஸ் அபேட்சகரான ஸ்ரீ சீதாராம ரெட்டி படுதோல்வி அடைந்தார். தமிழருக்கு விரோதமாக ஸ்ரீ சஞ்சீவி ரெட்டி கோஷ்டியார் நடத்திய அத்தனை துவேஷப் பிரசாரமும் பயன்படவில்லை. காங்கிரஸை எதிர்த்த பிரஜா சோஷலிஸ்டு அபேட்சகர் நாற்பதினாயிரம் அதிக வோட்டுகளைப் பெற்று வெற்றியடைந்தார். இந்தப் பெருந்தோல்வியைக் குறித்து ஸ்ரீ சஞ்சீவி ரெட்டி "அதிக நம்பிக்கையினால் அசட்டையாக இருந்துவிட்டோம்" என்று காரணம் சொல்வது பெரிதும் நகைப்புக் கிடமானது. அதிக நம்பிக்கை கொள்வானேன்! அசட்டையா யிருப்பானேன்!

உலகமெங்கும் புகழ் ஓங்க மத்திய அரசாங்கத்தை நடத்தும் நேருஜியுடன் ஒத்துழைக்க மறுத்தவர்கள், ஆந்திர மாகாணத்தில் அபகீர்த்தி பெற்றவர்களுடன் ஒத்துழைக்க முன் வந்தால் இந்தியா தேசமே சிரிக்கக்கூடிய வேடிக்கையாக இருக்கும். ஆந்திர மாகாணத்தில் காங்கிரஸின் நிலைமைக்குப் பிரஜா சோஷலிஸ்டுகளும் சீக்கிரத்தில் வந்து விடுவார்கள்.

ஆந்திர மாகாணம் ஏற்பட்டதும் புதிய பொதுத் தேர்தல் நடத்த வேண்டும் என்று பிரஜா சோஷலிஸ்டுகள் வற்புறுத்தினால், அந்த மாகாணத்தில் அவர்களே பெரும்பான்மையாக வருவதற்கு ஏதுக்கள் இருக்கின்றன. ஒரு மாகாணத்திலாவது சோஷலிஸ்டு வேலைத் திட்டத்தைப் பூரணமாக அமுல் நடத்திக் காட்டலாம்.

அவ்வாறின்றி ஆந்திர சட்டசபையில் இப்போது சிறிய தொகையினராக உள்ள பிரஜா-சோஷலிஸ்டுகள் அதிக தொகையினரான காங்கிரஸ்காரருடன் சேர்ந்து ஆட்சி நடத்தினால் ஆந்திர கேசரி டி. பிரகாசம் முதல் மந்திரியானார் என்ற ஒரு திருப்தியைத்தான் அடையலாம். சோஷலிஸ்டுக் கட்சிக்கோ அல்லது அதன் திட்டங்களுக்கோ எவ்வித நன்மையும் ஏற்படாது. அத்தகைய மந்திரி சபை வெகுகாலம் நீடித்து நடக்கவும் முடியாது. கம்யூனிஸ்டுகளின் செல்வாக்கு மேலும் பெருகுவதற்கே சாதகமாயிருக்கும்.

மொத்தத்தில் தேசமெங்கும் உள்ள சோஷலிஸ்டுகள் ஆத்ம சோதனையில் இறங்கியிருப்பதும், சோஷலிஸ்ட் கட்சிக்குப் புத்துயிர் அளிப்பது பற்றி யோசித்து வருவதும் மகிழ்ச்சிக்குரியதாகும். கூடிய சீக்கிரத்தில் சோஷலிஸ்ட் தலைவர்கள் அதற்குரிய வழி வகைகளை நல்ல முறையில் வகுப்பார்கள் என்று நம்புகிறோம்.

# கன்னார் மகன் கலெக்டர் ஆகலாம்! வண்ணார் மகன் வக்கீல் ஆகலாம்!

சில காலத்துக்கு முன்பு நாடெங்கும் அரசியல் மேடைகளில் "கிராமங்களுக்குத் திரும்புங்கள்!" என்ற கோஷம் ஒன்று கேட்பதுண்டு. இப்போதெல்லாம் அந்த கோஷம் அவ்வளவாகக் காதில் விழுவதில்லை. "கிராமங்கள் ஒழிக!" என்று கோஷமிடும் அளவுக்கு இன்னும் நம்மவர்கள் முன்னேறவில்லையென்பதைக் குறித்து மகிழ்ச்சி அடைய வேண்டும்.

நல்லது; கிராமங்களில் நிரந்தரமாய் வசிப்பதற்குத் திரும்பிப் போக வேண்டாம். கிராமங்களின் நிலைமையைப் பரிசீலனை செய்வதற்காக இரண்டொரு நாள் போய் வரலாம் அல்லவா! கலியாணங்கள், கிராமக் 'கலியாண' நிகழ்ச்சிகள் சம்பந்தமாகவாவது போகலாம் அல்லவா! அப்போது கிராமங்களிலே வாழும் பள்ளிக்கூடம் போகும் பிராயத்துக் குழந்தைகளைப் பற்றிக் கொஞ்சம் கணக்கு எடுத்து ஆராய்ச்சி செய்யுங்கள். எடுத்துக் கொண்ட காரியத்தை முன்னிட்டு, சாதி-வகுப்பு-தொழில் வாரியாகவே கணக்கு எடுத்துப் பாருங்கள். ஆறு வயது முதல் பன்னிரண்டு வயது வரை உள்ள பிள்ளைகளில் எந்தெந்த சாதி, வகுப்பினர், எந்தெந்தத் தொழில் செய்வோரின் குழந்தைகள் பள்ளிக்கூடம் போகிறார்கள், யார் யார் போகாமல் இருக்கிறார்கள் என்று பாருங்கள்.

கிராமத்துக் குழந்தைகளில் ஏறக்குறையப் பாதிப்பேர் பள்ளிக்கூடம் போவார்கள். பிராமணக் குழந்தைகள் எல்லாரும் பள்ளிக்கூடங்களுக்குப் போவார்கள். முதலியார் குழந்தைகள் எல்லாரும் பள்ளிக்கூடம் போவார்கள். பிள்ளைமார்களின் குழந்தைகள், ரெட்டிமார்களின் குழந்தைகள், செட்டிமார்களின் குழந்தைகள், நாயுடுமார்களின் குழந்தைகள் எல்லாரையும் பள்ளிக்கூடங்களில் காணலாம். வாத்தியார்களின் குழந்தைகள், வியாபாரிகளின் குழந்தைகள், மிராசுதார்களின் குழந்தைகள், உத்தியோகஸ்தர்களின் குழந்தைகள் அனைவரும் பள்ளிக் கூடங்களில் சேர்ந்து படிப்பார்கள்.

பள்ளிக்கூடம் போகாமலிருக்கும் குழந்தைகள் எந்தெந்த சாதி, வகுப்பு, தொழில் வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் என்று பாருங்கள்.

வன்னியர்களின் குழந்தைகள், முக்குலத்தாரின் குழந்தைகள், ஹரிஜனக் குழந்தைகள், கன்னார்களின் குழந்தைகள், கோனார்களின் குழந்தைகள், வண்ணாரின் குழந்தைகள், குலாலர்களின் குழந்தைகள், நெசவாளரின் குழந்தைகள், உழவர்களின் குழந்தைகள், இவர்கள்தான் பள்ளிக்கூடங்களுக்குப் போகாமல் இருப்பார்கள். பத்து வயதாகியும் எழுத்தறிவில்லாமலே இருப்பார்கள்.

இவ்வாறு இச் சென்னை மாகாணத்தில் ஐந்து வயது முதல் பன்னிரண்டு வயதுள்ள குழந்தைகளில் நாற்பது லட்சம் பேர் (அதாவது மொத்தமுள்ள குழந்தைகளில் பாதிப்பேர்) பள்ளிக்கூடம் போகாமலும் எழுத்தறிவு பெறாமலும் இருந்து வருகிறார்கள். இந்தியா தேசம் சுதந்திரமடைந்து ஐந்து வருஷம் ஆகியும், காங்கிரஸ் ஆட்சி மாகாணங்களில் ஏற்பட்டு ஏழு வருஷம் ஆகியும் பள்ளிக்கூடம் போகும் குழந்தைகளின் சத விகிதம் அபிவிருத்தி அடையவில்லை.

ஆரம்பப் பள்ளிக்கூடங்களுக்காகச் சர்க்காரும் மற்ற ஸ்தல ஸ்தாபனங்களும் செய்யும் செலவு ஐந்து கோடியிலிருந்து பன்னிரண்டு கோடியாகப் பெருகி விட்டது. (ஒட்டிக்கு இரட்டிக்கு மேல் ஆகி விட்டது.) ஆனால் பள்ளிக்கூடம் போகும் குழந்தைகளின் சத விகிதம் மட்டும் அப்படியே தான் இருந்து வருகிறது.

ஏற்கெனவே எழுத்தறிவில்லாத சாதிகளையும் வகுப்புகளையும் பாட்டாளி இனங்களையும் சேர்ந்த குழந்தைகள் இன்னமும் பள்ளிக்கூடம் போகாமலும் படிப்பில்லாமலும் வளர்ந்து வருகிறார்கள்.

இவர்களில் சில குழந்தைகள் பள்ளிக்கூடங்களில் சேர்ந்து படிக்கத் தொடங்கினாலும், ஒரு வருஷம் அல்லது இரண்டு வருஷம் படித்து விட்டு நின்று விடுகிறார்கள். அப்படி நின்றவர்களுக்குப் பள்ளிக்கூடம் போனதின் பயன் கிட்டுவதில்லை. இரண்டு வருஷத்தில் கற்றுக் கொண்டதை அடுத்த இரண்டு வருஷத்தில் மறந்து விட்டு நிரட்சர குட்சிகளாகவே வளர்ந்து வருகிறார்கள்.

ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் சேர்ந்து படிக்கும் குழந்தைகளில் 100க்கு 62 குழந்தைகள் வீதம் ஐந்தாவது வகுப்பு வரையில் வராமல் நடுவில் நின்றுவிடுகிறார்கள் என்று கல்வி இலாகா புள்ளி விவரங்கள் தெரிவிக்கின்றன.

இவ்வாறு நடுவில் நின்று, கற்றதையும் மறந்து விடுகிற குழந்தைகள், எந்தெந்த சாதி வகுப்பு தொழில் இனங்களைச் சேர்ந்தவர்கள் என்று கணக்கு எடுத்துப் பாருங்கள்.

உழவர்கள், நெசவாளிகள், தச்சர்கள், கன்னார்கள், வண்ணார்கள், குலாலர்கள் முதலிய பாட்டாளிக் குடும்பங்களைச் சேர்ந்தவர்களாகவே இருப்பார்கள். வன்னியர்கள், முக்குலத்தோர், ஹரிஜனங்கள் முதலிய பிற்பட்ட சாதி வகுப்புகளைச் சேர்ந்தவர்களாகவே இருப்பார்கள்.

* * *

இன்னும் ஒரு விஷயத்தையும் அவகாசம் உள்ளவர்கள் கவனிக்கலாம். கிராமங்களில் நடக்கும் ஆரம்பப் பள்ளிக் கூடங்களுக்குச் சென்று பாருங்கள். ஆஜர்ப்பட்டியலில் அறுபது பிள்ளைகளின் பெயர்கள் இருக்கும். அந்த அறுபது பிள்ளைகளுக்கும் சர்க்கார் கிரான்டு வாங்கிக் கொண்டிருப்பார்கள். (இன்ஸ்பெக்டர்கள் சோதனைக்கு வரும்போது எப்படியோ தேடிப் பிடித்து இந்த அறுபது பிள்ளைகளையும் பள்ளிக் கூடங்களில் கொண்டு வந்து சேர்த்துக் காட்டி விடுவார்கள்.) ஆனால் சாதாரண நாட்களில் திடீரென்று போய்ப் பார்த்தால், ஆஜர்ப் பட்டியில் உள்ள அறுபது பிள்ளைகளில் முப்பது பிள்ளைகள் தான் பள்ளிக்கூடத்தில் இருப்பார்கள். அவர்கள் பிராமணக் குழந்தைகள், பிள்ளைமார் குழந்தைகள், முதலியார்களின் குழந்தைகள், ரெட்டியார்களின் குழந்தைகள், செட்டிமார்களின் குழந்தைகளாக இருப்பார்கள். பிற்பட்ட சாதி வகுப்புகளையும், உழவு நெசவு தச்சு சலவை முதலிய உழைப்பாளி இனங்களையும் சேர்ந்த குழந்தைகள் பள்ளிக்கூடங்களுக்கு வந்திருக்க மாட்டார்கள்.

இது சென்ற வருஷம் வரையில் அமுல் நடந்து வந்த பழைய கல்வித் திட்டத்தின் கீழ் இருந்த நிலைமையாகும். ஆகவே, பழைய கல்வித் திட்டமானது வண்ணார்களின் பிள்ளைகளை வண்ணார்களாகவும், கன்னார்களின் குழந்தைகளைக் கன்னார்களாகவுமே வைத்து வந்தது.

பழைய கல்வித்திட்டத்தின் கீழ் எந்தக் கன்னார் வகுப்புக் குழந்தையாவது படித்து முன்னேறிக் கலெக்டர் உத்தியோகம் பார்த்ததுண்டா! எந்த வண்ணாரின் மகனாவது வக்கீல் ஆகி அட்வகேட் ஜெனரல் ஆனதுண்டா! இல்லவே இல்லை!

ஏன்! பழைய கல்வித் திட்டத்தின் கீழ், குழந்தைகளைப் பகற் பொழுது முழுதும் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பவேண்டியிருந்தது. ஆகையால் உழைப்பாளிக் குடும்பத்தினர் தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்கூடம் அனுப்ப முடியவில்லை.

சுகவாசிகளாக வாழ்க்கை நடத்திய சாதி வகுப்புகளைச் சேர்ந்தவர்கள் தான் அவ்விதம் முழு நேரமும் தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்கூடம் அனுப்புவது சாத்தியமாயிற்று. இந்த சுகவாசிக் குடும்பத்துப் பிள்ளைகள்தான் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் ஆறு வருஷம் பூர்த்தி செய்து, பிறகு உயர்தரப் பள்ளிக்கூடங்களிலும் காலேஜுகளிலும் சேர்ந்து படித்தார்கள். பழைய காலத்தில் இப்படிப் படித்துத் தேறி வந்தவர்களுக்கு உத்தியோகங்கள் ஏராளமாகக் கிடைத்து வந்தன. அந்தக் காலம் இப்போது போய்விட்டது. ஏட்டுக் கல்வி பயில்பவர்களுக்கெல்லாம் கொடுப்பதற்கு வேண்டிய குமாஸ்தா உத்தியோகங்கள் இல்லை. ஆகையால், செய்வதறியாது தவித்துக் கொண்டிருக்கிறார்கள். போகப் போக இந்தத் தவிப்பு அதிகமாகப் போகிறதென்பது நிச்சயமாயிற்று.

இவ்விதமாக, மெக்காலே பரம்பரையில் வந்த பழைய கல்வித் திட்டமானது, தேசத்தின் பாதிக் குழந்தைகளைப் படிப்பில்லாதவர்களாகவே வைத்துக் கொண்டிருந்தது; பிற்பட்ட வகுப்பார்கள் பிற்பட்ட வகுப்பாராகவே இருப்பதற்கு உதவி செய்து வந்தது; வண்ணார்களின் குழந்தைகளை வண்ணார்களாகவும் கன்னார்களின் குழந்தைகளைக் கன்னார்களாகவும் வைத்திருப்பதற்குச் சாதனமாயிருந்து வந்தது.

மற்றமேல் வகுப்புகளைச் சேர்ந்த குழந்தைகளை ஆயிரம் பதினாயிரம் லட்சக்கணக்கில் குமாஸ்தா உத்தியோக வர்க்கத்துக்குப் பழைய கல்வி முறை தயார் செய்து வந்தது. குமாஸ்தா உத்தியோகம் பெற்றவர்கள் "ஐயோ! இந்த வேலைக்கு வந்தோமே!" என்று ஏங்கச் செய்தது. அந்த உத்தியோகமும் கிடைக்காதவர்கள் "ஒன்றுக்கும் உபயோக மற்றுப் போனோமே!" என்று வாழ்க்கையில் வெறுப்புக் கொள்ளச் செய்தது.

* * *

இனி, சென்னை சர்க்கார் இந்த ஆண்டில்அமுலுக்குக் கொண்டு வந்திருக்கும் புதிய கல்வித் திட்டத்தைப் பற்றிச் சற்று கவனம் செலுத்தலாம்.

இந்தப் புதிய திட்டத்தின் கீழ், பிற்பட்ட வகுப்புகளைச் சேர்ந்தவர்களும் உழைப்பாளிகளுமான குடும்பங்களைச் சேர்ந்த குழந்தைகள் நாற்பது லட்சம் பேர் ஆரம்பப் பள்ளிக்கூடங்களுக்குப் புதிதாக வருவார்கள்.

இதுவரையில் அவர்கள் பள்ளிக்கூடம் வராமலிருந்ததின் காரணம் என்ன!

ஏழை உழைப்பாளிகளின் குடும்பங்களில் ஆண்களும் பெண்களும் வேலைக்குப் போய்விடுகிறார்கள். அவர்களில் பலருக்குத் தங்கள் குழந்தைகளின் உதவி வீட்டு வேலைக்குத் தேவையாயிருக்கிறது.

உழவர்கள் வயல்களுக்கு வேலை செய்யப் போனால், வீட்டு வேலைகளைச் செய்வதற்கும் தங்களைவிடச் சின்னக் குழந்தைகளைப் பார்த்துக் கொள்வதற்கும் பெரிய குழந்தைகள் உபயோகமாயிருக்கிறார்கள். வயல்களுக்குச் சோறு கொண்டு போகவும் தோட்டங்களில் ஆடு மாடுகள் மேயா

மல் பார்த்துக் கொள்வதற்கும் சில குழந்தைகள் உபயோகப் பட்டு வருகிறார்கள்.

கைத்தறிக்காரர்கள், கொல்லர்கள், தச்சர்கள், வண்ணார்கள் முதலியவர்களின் குழந்தைகள் அந்தந்தத் தொழில்களில் சிறிய உதவிகள் செய்வதற்கு உபயோகமா யிருக்கிறார்கள்.

ஆகவே, குழந்தைகளை முழு நேரமும் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்ப ஏழை உழைப்பாளிக் குடும்பத்தாரால் இயலுவதில்லை.

புதிய திட்டத்தின் கீழ் ஒரு வேளை பள்ளிக்கூடம் அனுப்புவதென்றால், உழைப்பாளிக் குடும்பத்தார் எல்லாருமே தங்கள் குழந்தைகளை ஆரம்பப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்ப முடியும். ஒரு வீட்டில் நாலு குழந்தைகள் இருந்தால், இரண்டுகுழந்தைகளைக்காலையிலும் இரண்டு குழந்தைகளைமாலையிலும் அனுப்பி வைப்பார்கள்.

இரண்டொரு வருஷம் பள்ளிக்கூடம் அனுப்பி விட்டு நிறுத்தி விட மாட்டார்கள். ஐந்தாறு வருஷம் தொடர்ந்து பள்ளிக்கு அனுப்புவார்கள்.

அப்படி அனுப்ப வேண்டும் என்று சர்க்கார் கட்டாயப் படுத்தவும் செய்யலாம்.




கொரியா யுத்த ஆரம்பத்தில் அமெரிக்காவின் விருப்பத்தின்படியெல்லாம் பணிந்து நடந்து வந்த ஸிங் மன் ரீ இப்போது அமெரிக்காவுக்குப் பெரிதும் தொல்லை கொடுத்து வருகிறார்!

கட்டாயக் கல்விச் சட்டம் இப்போதுகூட இம் மாகாணத்தில் சில இடங்களில் பெயரளவில் அமுல் நடந்து வருகிறது. ஆனால் உண்மையில் சரியாக அமுல் நடத்த முடியவில்லை. எப்படி அமுல் நடத்துவது! பள்ளிக்கூடத்துக்குக் குழந்தைகளை அனுப்பாத பெற்றோர்களுக்குக் கட்டாயக் கல்விச் சட்டத்தின்படி அபராதம் விதிக்கலாம்! ஏற்கெனவே ஏழ்மையினால் கஷ்டப்படும் உழைப்பாளிக் குடும்பத்துக்கு அபராதம் விதிக்க எந்த அதிகாரிதான் துணிவு கொள்ள முடியும்!—பழைய கல்வித் திட்டத்தின்படி கட்டாயக் கல்வி முறையை அமுல் நடத்துவது காரிய சாத்தியமில்லை. ஏழைப் பெற்றோர்களுக்கு அபராதம் விதிக்கவும் முடியாது. அப்படி ஹிட்லர் தர்பார் நடத்திக் குழந்தைகளைக் கட்டாயப் படுத்துவதா யிருந்தாலும், அவர்கள் எல்லாரும் சேர்ந்து படிப்பதற்கு வேண்டிய பள்ளிக்கூடங்களும் இல்லை; உபாத்தியாயர்களும் இல்லை. ஆகையினாலேயே கட்டாயக் கல்வி முறையை இதுவரை சரிவர அமுல் நடத்த முடியவில்லை.

புதிய கல்வித் திட்டத்தின் கீழ் மேற்கூறிய குறைகள் எல்லாம் நிவர்த்தியாகி விடும்.

அரை நாள் மட்டும் பள்ளிக்கூடம் என்றால், ஏழைகளான உழைப்பாளிக் குடும்பத்தாரும் தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்கூடங்களுக்கு விருப்பத்துடன் அனுப்புவார்கள்.

ஓரளவு கட்டாயப் படுத்தி அனுப்பும்படியும் செய்யலாம். "அரை நாள் உங்கள் உதவிக்குப் பிள்ளைகளை வைத்துக் கொள்ளுங்கள்; மற்ற அரை நாள் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புங்கள்" என்று வற்புறுத்தலாம்.

இப்போது பள்ளிக்கூடத்தையே எட்டிப் பாராமலிருக்கும் நாற்பது லட்சம் குழந்தைகளையும் அடுத்த இரண்டு மூன்று வருஷத்தில் பள்ளிக்கூடங்களில் வந்து சேரும்படி செய்யலாம். அவ்வளவு பேருக்கும் பள்ளிக்கூடங்களில் இடம் ஏற்படுத்தியும் கொடுக்கலாம்.

பள்ளிக்கூடத்தில் சேரும் குழந்தைகள் ஒரு வருஷம் இரண்டு வருஷத்திற்குள் நின்று போய் விடாமல் ஐந்தாறு வருஷம் தொடர்ந்து படிக்கும்படியும் செய்யலாம்.

பழைய திட்டத்திலுள்ள முக்கியமான அம்சங்களான எழுத்தறிவு, கணக்கறிவு, பூகோளம், சரித்திரம், சுகாதாரம் எல்லாம் புதிய கல்வித் திட்டத்திலும் உண்டு.

ஆகையினால் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் ஆறு வருஷம் படித்த குழந்தைகளில் இஷ்டப்பட்டவர்கள் எல்லாரும் ஹைஸ்கூல்களிலும் காலேஜுகளிலும் சேர்ந்து படிக்கலாம்.

உழவர்களிலும், தறிகாரர்களிலும், கன்னார்களிலும், வண்ணார்களிலும் எழுத்தறிவில் ஊக்கமுள்ள பிள்ளைகள் ஹைஸ்கூல்களில் சேர்வார்கள். இத்தகைய பிற்பட்ட வகுப்புகளைச் சேர்ந்த குழந்தைகளுக்கு ஹைஸ்கூல் படிப்புக்கும் காலேஜு படிப்புக்கும் விசேஷ உபகாரச் சம்பளங்கள் வழங்கப்படுகின்றன.

ஆதலின் புதிய கல்வித் திட்டத்தின் கீழ் கன்னார்களின் பிள்ளைகள் கலெக்டர்கள் ஆகலாம்: மாகாண கவர்னர்களாகவும் ஆகலாம். வண்ணார்களின் பிள்ளைகள் வக்கீல்களாகலாம்; அட்வகேட் ஜெனரல்களாகவும் ஹைகோர்ட்டு ஜட்ஜுகளாகவும் ஆகலாம்.

உயர்தரக் கல்வியில் தேர்ச்சி பெற்றுப் பெரிய பதவிகளை அடைய முடியாதவர்கள் தங்கள் கைத்தொழில் திறமையை அடியோடு இழந்திருக்க மாட்டார்கள். "ஒன்றுக்கும் உதவாதவர்கள் ஆனோமே!" என்று ஏங்க மாட்டார்கள். தங்களுக்கு விருப்பமான கைத் தொழில் செய்து கௌரவமாக ஜீவனம் நடத்துவார்கள்.

பழைய கல்வித் திட்டத்தின் கீழ் கன்னார்களின் புதல்வர்கள் எல்லாரும் கன்னார்களாகவே இருந்து வந்தார்கள். உழவர்களின் மக்கள் எல்லாரும் உழவர்களாகவே இருக்க நேர்ந்தது. கைத்தறி நெசவாளர்களின் குடும்பங்களைப் பற்றிச்

சென்ற வாரத்தில் காங்கிரஸ் பொதுக் காரியதரிசி ஸ்ரீ அகர்வால் வெளியிட்டிருக்கும் அறிக்கையைப் பாருங்கள் :—

"தென்னிந்தியாவில் மனைவி, கணவன், சிறு குழந்தைகள் அடங்கிய ஒரு நெசவாளிக் குடும்பம் பூராவும் நாளெல்லாம் உழைத்து எட்டணாக் கூலி பெறும் அக்கிரமத்தைக் கண்டேன். ஆச்சர்யமுற்றேன். பள்ளிகள் சென்று பயிலும் சந்தர்ப்பம் அந்த நெசவாளிகளின் சந்ததிகளுக்கு இல்லவே இல்லை. மத்தியப் பிரதேச நெசவாளிகளின் கதையும் இதுதான்."

பழைய கல்வித் திட்டந்தான் இந்த இலட்சணத்தோடு இருந்து வந்தது. அதன்படி ஏழைப் பாட்டாளி மக்களின் குழந்தைகள் நாற்பது லட்சம் பேர் எழுத்தறிவும் எண்ணறிவும் கூடப் பெற முடியாமல் வளர்ந்து வந்தார்கள்.

புதிய கல்வித் திட்டத்தின்படி இம் மாகாணத்தில் பிறந்து வளரும் எல்லாக் குழந்தைகளும் பன்னிரண்டு பிராயம் வரையில் ஆரம்பக் கல்வி பயில்வதற்குச் சமய சந்தர்ப்பம் பெறுவார்கள். ஆறாவது வகுப்பு வரையில் இன்று படிக்கப்படும் எழுத்தறிவும் எண்ணறிவும் கட்டாயம் அடைந்தே தீர்வார்கள்.

ஒவ்வொரு சாதி வகுப்பிலும் ஒவ்வொரு தொழிலாளி வர்க்கத்திலும் சில குழந்தைகள் ஏட்டுக் கல்வியில் சிறந்த தேர்ச்சி பெறுவதற்கு ஏற்றவர்களாக இருப்பார்கள். அத்தகையவர்கள் சுதந்திர இந்தியாவில் மகோன்னதமான எந்தப் பதவியையும் அடைவதற்குத் தடை ஒன்று மிராது; எல்லா வசதிகளும் அளிக்கப்பட்டு வரும்.

இத்தகைய புதிய கல்வித் திட்டத்தை எதிர்ப்பவர்கள் யார்! உத்தியோக பதவிகள் எல்லாம் சில வகுப்பாரின் ஏகபோக உரிமையாயிருக்க வேண்டுமென்று விரும்புகிறவர்கள் தான்!

உழவர்களும் நெசவாளிகளும் மற்றும் பல கைத்தொழில்கள் செய்யும் பாட்டாளிகளும் இவர்களுடைய நலன்களை உண்மையில் விரும்புகிற தேசபக்தர்களும் சமூக ஊழியர்களும் புதிய கல்வித் திட்டத்தை மனமுவந்து வரவேற்பார்கள்.

தமிழ்நாடெங்கும் ஆசிரியர் சமூகம் புதிய கல்வித் திட்டத்தின் மேன்மையை நன்கு உணர்ந்து அதை நிறைவேற்றி வைக்க ஒத்துழைக்கத் தொடங்கி விட்டார்கள் என்பதைக் கண்டு மகிழ்ச்சி அடைகிறோம். கல்வி இலாகா அதிகாரிகளும் ஆங்காங்கு புதிய கல்வித் திட்டத்தின் உயர்வை மக்களுக்கு எடுத்துச் சொல்லி அரிய தொண்டு புரிந்து வருகிறார்கள்.

புதிய கல்வித் திட்டத்தின் வெற்றிக்கு ஒரு சிறந்த அறிகுறியான செய்தி தஞ்சை ஜில்லாவிலிருந்து வந்திருக்கிறது.

அந்த ஜில்லாவில் புதிய கல்வித் திட்டம் அமுலுக்கு வந்தவுடனேயே, மற்றும் பல புதிய ஆரம்பப் பள்ளிக்கூடங்கள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றைச் சர்க்கார் அங்கீகரிக்க வேண்டுமென்று கோரிக்கைகள் வந்திருக்கின்றன.

புதிய ஆரம்பத் திட்டம் எவ்வளவு பயன் அளிக்கக் கூடியது என்பதை நிரூபிக்க வேறு என்ன அத்தாட்சி வேண்டும்!

புதிய கல்வித் திட்டம் மூன்று வருஷம் தொடர்ந்து நடந்த தென்றால், இன்றைய தினம் சந்தேகப்படுகிறவர்கள் எல்லாரும் வியந்துகொண்டாடும்படியான வெற்றியை அடைந்து, கல்வித் துறையிலேயே ஒரு மகத்தான சாதனையாகும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

# பழம் பெருச்சாளியின் வேலை!

தென் கொரியா சர்க்கார் தலைவர் ஸிங்மென் ரீயை, கொரியாக் கடுக்காய் என்றும் கொரியாப் பெருச்சாளி என்றும் கொரியா மக்கள் வர்ணிப்பது உண்டாம்.

பெருச்சாளி என்ற பெயர் தமக்கு முற்றிலும் தகும் என்பதை ரீ சில தினங்களுக்கு முன் உலகம் அறிய நிரூபித்து விட்டார். கொரியாப் போர் சங்கர்தமாகச் சமீபத்தில் ஐக்கிய நாடுகளுக்கும் சீனக் கம்யூனிஸ்டுகளுக்கும் ஏற்பட்ட ஒப்பந்தத்தின் அஸ்திவாரத்தைக் குடைந்து, ஒப்பந்த மாளிகை தகர்ந்து விடக்கூடிய நிலைமையை உண்டு பண்ணி விட்டார்.

கொரியாப் போரை நிறுத்துவதற்காகப் பான் முன்ஜாம் நகரில் ஆரம்பமான சமரசப் பேச்சு வார்த்தைகள், யுத்தக் கைதிகள் பிரச்னை தீராததால் முறிந்து போயின.

கடைசியாக, இப்போது இந்தியாவின் தலைமையில் நடுநிலைமைக் கமிஷன் ஒன்றை நியமித்தார்கள். யுத்தக் கைதிகள் பிரச்னையை மேற்படி கமிஷனின் பரிசீலனைக்கு விடுவதென்று முடிவு செய்தார்கள்.

அந்த ஒப்பந்தத்தின்படி யுத்தக் கைதிகளை நடுநிலைமைக் கமிஷனிடம் ஒப்படைக்க வேண்டும் அல்லவா! ஆனால் அவ்வாறு செய்யாமல் ஸிங்மென் ரீ மேற்படி கைதிகளை விடுதலை செய்துவிட்டார். ரீயின் செய்கையால் மிகவும் விபரீதமான நிலைமை ஏற்பட்டு விட்டது. யுத்தக் கைதிகள் விடுதலையடைந்ததற்கு அமெரிக்காவும் ஐக்கிய நாடுகளும் உடந்தையாக இருந்திருக்க வேண்டும் என்று கம்யூனிஸ்டுகள் குற்றம் சாட்டுகிறார்கள்.

வட கொரியாவையும் தென் கொரியாவையும் ஐக்கியப் படுத்தி ஒரே நாடாகச் செய்யாத எந்த ஒப்பந்தத்தையும் ஆதரிக்க முடியாது என்பதே ரீயின் வாதமாகும்.

யுத்தக் கைதிகள் பிரச்னை தீர்ந்ததன் மூலம் சமாதான ஒப்பந்தம் பூர்த்தியாகி விட்டதாகக் கருதுவதற்கில்லை. மற்ற விஷயங்களை ஒட்டிப் பேச்சு வார்த்தைகள் நடைபெறும் போது கொரியா ஐக்கியம் அடைய வேண்டும் என்று ரீ வற்புறுத்தி யிருக்கலாம்.

அதை விடுத்து, இப்போது ஏற்பட்டுள்ள சமரச ஒப்பந்தத்துக்கு விரோதமாக யுத்தக் கைதிகளை விடுதலை செய்ததன் மூலம் ஸிங்மென் ரீ ஏற்கெனவே பெரும் பகுதி அழிந்து போன கொரியாவுக்கு மேற்கொண்டு பாதகம் ஏற்படும்படி செய்துள்ளார்; தமக்கு உதவியாகப் போரில் ஈடுபட்ட ஐக்கிய நாடுகளுக்குத் துரோகம் இழைத்துள்ளார்; உலக சமாதானத்துக்கு அபாயம் விளைவித்துள்ளார் என்று சொல்வதும் மிகையாகாது.

சில சமயம் சின்ன மனிதர்களாலும் பெரிய விபரீதங்கள் ஏற்படலாம் என்பதற்குச் ஸிங்மென் ரீ உதாரண புருஷராக இருக்கிறார்.

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 25

## கோட்டை வாசலில்

மந்திராலோசனை நடந்த இடத்திலிருந்து வெளிவந்த பூதிவிக்கிரம கேசரி, அங்கேயிருந்த குதிரை மேல் தாவி ஏறினார். தஞ்சைக் கோட்டையின் வடக்கு வாசலை நோக்கி விரைந்து சென்றார். அதே சமயத்தில் யானை ஒன்று வடக்கு வாசலை நெருங்கி வந்து கொண்டிருந்ததைப் பார்த்தார். யானையின் மேல் யானைப்பாகன் ஒருவனும் இரண்டு ஸ்திரீகளும் இருந்தார்கள். யானைப் பாகன் தன் கையில் வைத்திருந்த கொம்பை வாயில் வைத்துச் சிறிது நேரம் முழக்கினான். பின்னர், கிரீச் என்று உச்ச ஸ்தாயியில் ஒலித்த குரலில், கணீர் என்றும், தெளிவாகவும் அவன் கூறியதாவது:—"ஈழத்துப்பட்ட பராந்தகன் சிறிய வேளாரின் செல்வப் புதல்வி, கொடும்பாளூர்ப் பெரிய வேளார் சேநாதிபதி பூதி விக்கிரம கேசரியின் வளர்ப்புக் குமாரி, பழையாறை இளைய பிராட்டி குந்தவை தேவியின் அருமைத் தோழியரான வானதி தேவியார் வருகிறார்! பராக்! பராக்! வழி விடுங்கள்!"

கோட்டை வாசலுக்குச் சமீபத்தில் அகழிக் கரையை அடைந்ததும் அவன் மறுபடியும் ஒரு முறை கொம்பை வாயில் வைத்து ஊதினான். அதன் எதிரொலி நிற்பதற்குள்ளே மறுபடியும் அவன் முன்போன்ற கிரீச்சுக் குரலில் கூறியதாவது:— "கொடும்பாளூர் இளவரசி வானதிதேவியார் இளைய பிராட்டியிடமிருந்து சக்கரவர்த்திக்குச் செய்தி கொண்டு வருகிறார். பெரிய பழுவேட்டரையரிடமிருந்து சின்னப் பழுவேட்டரையருக்கு முக்கியமான செய்தி கொண்டு வருகிறார்! கோட்டைக் கதவைத் திறவுங்கள்! பராக்! பராக்! கொடும்பாளூர் இளவரசிக்கும் அவருடைய தோழி பூங்குழலி அம்மைக்கும் உடனே வழி விடுங்கள்! கோட்டைக் கதவைத் திறந்து விடுங்கள்!"

இவ்வாறு யானைப்பாகன் கூவியதைக் கேட்டுச் சேநாதிபதி பூதி விக்கிரம கேசரி அடைந்த வியப்பு இவ்வளவு என்று சொல்ல முடியாது. அந்த யானைப் பாகன் குரலை எங்கேயோ எப்போதோ கேட்டது போலிருக்கிறதே? அவன் யார்? யானைப் பாகன் யாராயிருந்தால் என்ன? யானை மேல் இருப்பது வானதிதானா என்பதையல்லவா முதலில் பார்த்துத் தெரிந்து கொள்ள வேண்டும்? அவள் கோட்டைக்குள் போகாமல் தடுத்து நிறுத்த வேண்டுமே? வானதியாயிருந்தால் மிக்க நல்லதாய்ப் போயிற்று! இந்தச் சிக்கல்கள் எல்லாம் தீரும் வரையில் குழந்தை நம்மிடத்தில்

இருப்பதே நல்லது! ......இவ்வாறு எண்ணிக் கொண்டே சேநாதிபதி குதிரையைத் தட்டி விட்டுக் கொண்டு போய் யானையின் சமீபத்தை அடைந்தார். அவர் பின்னோடு விரைந்து வந்த வீரர்களில் ஒரு வீரன் தீவர்த்தி கொண்டு வந்தான். அதன் வெளிச்சத்தில் யானை மீதிருந்தவர்களைப் பார்த்தபோது பெண்கள் இருவரும் சிறிய வேளாரின் புதல்வி வானதியும் பூங்குழலியுந்தான் என்று தெரியவந்தது.



"குழந்தாய்! வானதி!" என்று அவர் ஏதோ சொல்வதற்குள் யானைப்பாகன் மறுபடியும் கொம்பு ஊதத் தொடங்கினான். அவனை எப்படி நிறுத்தச்செய்வது?

நல்ல வேளையாக இதற்குள் யானை மேலிருந்த பெண்கள் தங்களை நெருங்கி வந்த குதிரை மேல் இருப்பவர் யார் என்று உற்றுப் பார்த்தார்கள்.

உடனே, வானதி, யானைப் பாகனிடம் ஏதோ சொல்லி அவன் கொம்பு முழக்கத்தை நிறுத்தி விட்டு, "பெரியப்பா! தாங்கள் தானா? நான் கேள்விப்பட்டது உண்மைதான்!" என்றாள்.

"ஆம், குழந்தாய்! நான்தான்! ஆனால் இது என்ன விசித்திரம்? செய்தி கொண்டு வருவதற்கு நீதானா அகப்பட்டாய்? இளைய பிராட்டிக்கு வேறு யாரும் அகப்படாமலா போய் விட்டார்கள்! அதிலும் இப்பேர்ப்பட்ட நிலைமையில்!" என்றார் சேநாதிபதி.

"ஆம், பெரியப்பா! இப்பேர்ப்பட்ட நிலைமையாயிருப்பதினாலேதான் என்னைச் செய்தி கொண்டு போக அனுப்பினார். தாங்கள் சைன்யத்துடன் வந்து தஞ்சைக் கோட்டையைச் சூழ்ந்து கொண்டிருப்பதாகச் செய்தி கிடைத்தது. வேறு யாரையாவது அனுப்பினால் ஒரு வேளை தங்கள் படை வீரர்கள் தடுத்து நிறுத்திவிடக் கூடும். தாங்கள் அநுமதித்தாலும் கோட்டைக்குள்ளே இருப்பவர்கள் கதவைத் திறந்துவிட மறுத்து விடலாம். என்னை அனுப்பி வைத்தால் இரண்டு காரியத்துக்கும் அநுகூலமாயிருக்கலாம் என்று அனுப்பியுள்ளார்கள். துணைக்குப் பூங்குழலியையும் அனுப்பினார்கள்......"

"ஆமாம், ஆமாம்! இந்த ஓடக்காரப் பெண் வெகு கெட்டிக்காரி. அது முன்னமே எனக்குத் தெரிந்த விஷயந்தான். ஆனால் நீ அப்படி என்ன செய்தி கொண்டு வந்தாய்? இரவுக்கிரவே தூது அனுப்ப வேண்டிய அவ்வளவு அவசரமான செய்தி என்ன?"

"அவசரமான செய்திதான், பெரியப்பா! பொன்னியின் செல்வரைப் பற்றிச் சக்கரவர்த்திக்குச் செய்தி கொண்டு வந்திருக்கிறேன்."

"ஆகா! பொன்னியின் செல்வரைப் பற்றியா? அவரைப் பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா?"

"ஏன்? எவ்வளவோ தெரியும். அவர் வீராதி வீரர், சூராதி சூரர், காவேரியில் அமுங்காதவர், கடலில் விழுந்தாலும் முழுகாதவர், அண்டினோரைக் கைவிடாதவர், ஆபத்தில் உதவி செய்த



வர்களிடம் நன்றி மறவாதவர், அன்னை தந்தையிடம் பக்தி உள்ளவர், தமக்கையார் சொல்லைத் தட்டாதவர், இராஜ்யத்தில் ஆசையில்லாதவர்...''

"போதும், போதும்! அதையெல்லாம் நான் கேட்கவில்லை. இளவரசர் சௌக்கியமாயிருக்கிறாரா? இப்போது அவர் எங்கேயிருக்கிறார் என்று உனக்குத் தெரியுமா?"

"சௌக்கியமாக இருக்கிறார், பெரியப்பா! இப்போது எங்கேயிருக்கிறார் என்றும் தெரியும். ஆனால் அதைத் தங்களிடம் கூற முடியாது!"

"என்ன? சொல்ல முடியாதா? என்னிடம் கூடவா சொல்ல முடியாது? நீதானா பேசுகிறாய், வானதி?"

"ஆம், பெரியப்பா! நான்தான் பேசுகிறேன். இளவரசர் இருக்குமிடத்தை ஒருவரிடமும் சொல்வதில்லையென்று வாக்களித்திருக்கிறேன்."

சேனாதிபதி பூதி விக்கிரமகேசரிக்கு ஆக்கிரோஷம் பொங்கி ஆத்திரம் பொத்துக் கொண்டு வந்தது.

"பெண்ணே! இளையபிராட்டியிடம் அனுப்பினால் உன்னை நல்ல முறையில் வளர்ப்பாள் என்று நம்பினேன். இவ்வளவு பிடிவாதக் காரியாக வளர்த்து விட்டாளே? போதும், போதும்! நீ பழையாறையில் இருந்தது போதும். கீழே இறங்கு! உன்னைக் கொடும்பாளூருக்கு அனுப்பி விட்டு மறு காரியம் பார்க்கிறேன்" என்றார்.

"பெரியப்பா! எனக்கும் இந்தத் தஞ்சாவூர் மண்ணை மிதிக்கவே இஷ்டமில்லை. ஆகையினால்தான் யானைமேல் ஏறி உட்கார்ந்திருக்கிறேன். இந்த யானைக்கு அடிக்கடி மதம் பிடித்து விடுகிறது. இன்று காலையில் ஒருவனைத் தூக்கி எறிந்து விட்டது. ஆகையினால், அருகில் ரொம்ப நெருங்கி வராதீர்கள். நான் கொண்டு வந்திருக்கும் செய்திகளைச் சொன்ன பிறகு நானே தங்களிடம் வந்து விடுகிறேன். என்னைக் கொடும்பாளூருக்கு அனுப்புங்கள்; அல்லது என் தந்தையிருக்குமிடத்துக்கே அனுப்பினாலும் அனுப்பி விடுங்கள். இப்போது மட்டும், என்னைத் தடுத்து நிறுத்தாதீர்கள்!" என்றாள் வானதி.

பூதி விக்கிரமகேசரி சிறிது யோசித்து விட்டு, "சரி, மகளே! நான் உன்னைத் தடுத்து நிறுத்தாமல் விட்டு விடுகிறேன். கோட்டைக் கதவு திறக்கா விட்டால் என்ன செய்வாய்?" என்றார்.

"பெரியப்பா! நீங்கள் இவ்வளவு பெரிய படைகளுடன் வந்திருக்கிறீர்களே? எதற்காக? கோட்டைக் கதவு திறக்கா விட்டால், உங்கள் படைகளை ஏவிக் கதவை உடைத்துத் திறந்து விடச் செய்யுங்கள்!" என்றாள் வானதி.

பூதிவிக்கிரமகேசரி இதைக் கேட்டுப் பெருமிதம் அடைந்தார். "மகளே! கொடும்பாளூர்க் கோமகள் பேச வேண்டிய வாறு பேசினாய். அவசியம் ஏற்பட்டால் அவ்விதமே செய்வேன். ஆனால் அதற்கு அவசியம் ஏற்படாது. இளைய பிராட்டியிடமிருந்து சக்கரவர்த்திக்குச் செய்தி கொண்டு வந்திருக்கும் உன்னைத் தடுத்து நிறுத்த இந்தச் சின்னப் பழுவேட்டரையன் யார்? அவ்விதம் அவன் ஒருநாளும் செய்ய மாட்டான். ஆனால் எனக்காகவும் சின்னப் பழுவேட்டரையனிடம் ஒரு செய்தியைச் சொல்! நீ கோட்டைக்குள் இருக்கும்போது உனக்கு ஏதாவது சிறிய தீங்கு நேர்ந்தாலும் அவனுடைய குலத்தைப் பூண்டோடு அழித்து விடுவேன் என்று சொல்! நானும் என்னுடைய துணைவர்களும் சக்கரவர்த்தியை நேரில் பார்த்து அவருடைய விருப்பத்தை அவருடைய வாய்மொழியாகத் தெரிந்து கொள்ள வந்திருக்கிறோம் என்றும் சொல்! நாளைப் பகல் பொழுது போவதற்குள் சக்கரவர்த்தியை நாங்கள் தரிசிக்க அவன் வகை செய்யாவிட்டால், கோட்டையைத் தாக்கத் தொடங்கி விடுவோம் என்றும் தெரியப்படுத்து!" என்றார்.

"அப்படியே ஆகட்டும், பெரியப்பா!" என்றாள் வானதி.

மறுபடியும் யானைப் பாகன் கொம்பு முழக்கினான்.

"கொடும்பாளூர் இளவரசிக்கு வழி விடுங்கள்! கோட்டைக் கதவைத் திறந்து விடுங்கள்!" என்று கூவினான்.

## அத்தியாயம் 26

# வானதியின் பிரவேசம்

கோட்டைக்குள்ளே சின்னப் பழுவேட்டரையர் பெரும் மனக் கலக்கத்துக்கு உள்ளாகியிருந்தார். வீர தீரங்களில் அவர் யாருக்கும் சளைத்தவர் அல்ல. ஆனால் தமையனுடைய யோசனையைக் கேட்டே எந்தக் காரியமும் செய்து பழக்கப்பட்டவராதலால் இந்த நெருக்கடியான நிலைமையில் சிறகு இழந்த பறவையைப் போல் தவித்தார்.

அன்று காலை முதல் ஒன்றன் பின் ஒன்றாக விபரீதமான செய்திகள் அவர் காதுக்கு எட்டிக் கொண்டிருந்தன.

பெரிய பழுவேட்டரையர் கடம்பூர் சம்புவரையர் மாளிகையிலிருந்து தஞ்சைக்குப் புறப்பட்டு இரண்டு தினங்களுக்கு மேலாயின என்று ஒரு செய்தி கிடைத்தது. புயல் அடித்த அன்று கொள்ளிட நதியைக் கடந்து கொண்

டிருந்த படகுகள் பல மூழ்கிப் போயின என்றும் அவருக்குத் தெரிந்திருந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் பெரிய பழுவேட்டரையரின் படகில் இருந்த ஒருவனே வந்து சேர்ந்தான். அவர் வந்த படகும் மூழ்கிப் போயிற்று என்றும், தான் திணறித் திண்டாடிக் கரை ஏறி வந்து சேர்ந்ததாகவும் கூறினான்.

இளவரசர் அருள்மொழிவர்மர் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் மறைந்திருந்து வெளிப்பட்டார் என்றும், பெரும் ஜனத்திரளுடன் தஞ்சையை நோக்கி வந்து கொண்டிருக்கிறார் என்றும் இன்னொரு ஒற்றன் வந்து கூறினான். இரவு திருவாரூரில் அவர் தங்கியதாகவும், தான் இரவுக்கு இரவே பிரயாணம் செய்து வெள்ளக் காடாயிருந்த பிரதேசங்களையெல்லாம் தாண்டி வந்ததாகவும் தெரிவித்தான்.

இன்னும் சற்று நேரத்துக்கெல்லாம் சம்புவரையர் அனுப்பிய ஆள் ஒருவனே வந்து சேர்ந்தான். திருக்கோவலூர் மலையமான் பெரும் படை திரட்டிக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது என்றும், ஆதித்த கரிகாலரின் வெறி அதிகமாகி வருகிறது என்றும், ஆகையால் பெரிய பழுவேட்டரையரை உடனே புறப்பட்டு வரும்படி சம்புவரையர் செய்தி அனுப்பியதாகவும் கூறினான்.

பெரிய பழுவேட்டரையரோ தஞ்சைக்கு இன்னும் வந்து சேரவே இல்லை. அவர் உடனே புறப்பட்டுச் செல்வது எப்படி? யமனும் அருகில் வருவதற்கு அஞ்சக்கூடிய அந்த வீரக் கிழவரை ஒருவேளை கொள்ளிடத்து வெள்ளம் கொள்ளை கொண்டிருக்குமோ?—என்று சின்னப் பழுவேட்டரையர் கலங்கினார்.

இதற்கு அடுத்தபடியாக எல்லாவற்றிலும் பெரிய இடிபோன்ற செய்தியைத் தெற்கேயிருந்து ஒற்றர்கள் ஓடிவந்து தெரிவித்தார்கள். தென் திசையிலிருந்து தஞ்சைக்கு வந்த மூன்று பெரிய சாலைகளிலும் சேனா வீரர்கள் சாரிசாரியாக வந்து கொண்டிருப்பதாகவும், கொடும்பாளூர் பூதி விக்கிரம கேசரியும் வருவதாகவும் அவர்கள் கூறினார்கள்.

இதைக் கேட்டவுடனே தான் சின்னப் பழுவேட்டரையர் கோட்டைக் கதவுகளையெல்லாம் சாத்தி விடும்படி உத்தரவு போட்டார். உள்ளிருந்து யாரும் வெளியேறுவதையும் வெளியிலிருந்து உள்ளே வருவதையும் கண்டிப்பாகத் தடைசெய்து விட்டார்.

வழக்கம்போல் அன்று கோட்டைக்குள் வந்த வேளக்காரப் படையினரைச் சக்கரவர்த்தியின் அரண்மனையைச் சுற்றிக் காவலுக்கு அமைத்து விட்டு, தம்முடைய சொந்தப் படை வீரர்களைக் கோட்டைக் காவலுக்கு நியமித்தார்.

இந்த விவரங்களையெல்லாம் சக்கரவர்த்திக்கும் தெரிவித்துவிட வேண்டும் என்று எண்ணினார். அதற்கு முன்னால், முதன் மந்திரி அநிருத்தரைக் கலந்து கொள்ள வேண்டும் என்று விரும்பினார். அநிருத்தரிடம் அவருக்கு அவ்வளவாக நம்பிக்கை கிடையாதுதான். என்றாலும், அச்சமயம் அவர் கோட்டைக்கு வெளியில் இல்லாமல் உள்ளேயிருப்பது நல்லது. தம்மை அறியாமல் அவர் எதுவும் செய்ய முடியாதல்லவா? அவரிடம் யோசனை கேட்டுக்கொண்டு காரியங்கள் செய்வதாகப் பாவனை பண்ணுவதும் நல்லது. பின்னால் ஏதாவது தவறாகப் போனால் தம் மீது மட்டும் குற்றம் சுமராமல் இருக்கும்.

சக்கரவர்த்தியிடம் தாமே நேரில் சொல்வதைக் காட்டிலும் அநிருத்தரையும் அழைத்துக் கொண்டு போய்ச் சொல்வது சுலபமாயிருக்கும்.

இளவரசன் அருள்மொழி வர்மனும் அவனுக்குப் பெண் கொடுத்துச் சம்பந்தம் செய்து கொள்ள விரும்பிய பூதிவிக்கிரம கேசரியும் சேர்ந்து சதியாலோசனை செய்து தஞ்சாவூரைக் கைப்பற்றுவதற்காகவே இரு பக்கமிருந்தும் வருவதாகச் சின்னப் பழுவேட்டரையர் நம்பினார். இதைப் பற்றித் தாம் தனிப்படக் கூறினால் சக்கரவர்த்தி நம்புவது கூடக் கடினமாயிருக்கும். முதன் மந்திரி அநிருத்தரும் சேர்ந்து சொன்னால் நம்பியே தீர வேண்டும் அல்லவா?

முதன் மந்திரி அநிருத்தரும் ஓரளவு கலக்கம் அடைந்துதானிருந்தார். இளைய பிராட்டி குந்தவை அன்று காலை தஞ்சையை விட்டுப் போனதையே அவர் அவ்வளவாக விரும்பவில்லை. ஈழத்துராணியும் பூங்குழலியும் காலையில் காணமற் போனது அவருடைய உள்ளத்தின் அமைதியை ஓரளவு குலைத்திருந்தது. "எங்கே போயிருப்பார்கள்? எப்படிப் போயிருப்பார்கள்? எதற்காக?" என்றெல்லாம் எவ்வளவோ சிந்தித்தும் ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. பூதிவிக்கிரம கேசரி சைன்யத்துடன் வருகிறார் என்னும் செய்தி அவருக்குப் பெருங் கலக்கத்தையே உண்டு பண்ணி விட்டது.

ஆனாலும் இதை யெல்லாம் உடனே சக்கரவர்த்தியிடம் தெரிவிக்க வேண்டிய அவசியமில்லை என்று சின்னப் பழுவேட்டரையருக்கு அவர் யோசனை சொன்னார்.

"சக்கரவர்த்தியின் மனக் குழப்பம் இன்று அதிகமாகி யிருப்பதாகக் கேள்விப் படுகிறேன். மகாராணியின் அந்தரங்கச் சேடி வந்து தெரிவித்து விட்டுப் போனாள். இந்த நிலையில் பூதிவிக்கிரம கேசரியைப் பற்றிச் சொன்னால், சக்கரவர்த்தியின் மூளையிலுள்ள இரத்தநாளம் வெடித்து உயிருக்கே ஆபத்து உண்டானாலும் உண்டாகி விடும். ஏற்கெனவே, தஞ்சை நகரத்தில் சக்கரவர்த்தி காலமாகி விட்டார் என்றவதந்தி பரவியிருக்கிறதாம். உண்மையாகவே அப்படி நேர்ந்து விட்டால் எத்தனை விபரீதம் ஆகும் என்று யோசித்துப் பாருங்கள். சக்கரவர்த்தியை நீங்களே கொன்று விட்டதாக வதந்தி உண்டாகி விடும். உங்கள் விரோதிகளுக்கு மிகவும் சௌகரியமாகப் போய் விடும். ஆகையால், பொறுத்துப் பார்த்து முடிவு செய்யலாம். பூதிவிக்கிரம கேசரியின் உத்தேசம் இன்னதென்று முதலில் தெரிந்து கொள்ளலாம். பெரிய பழுவேட்டரையரைப் பற்றியும் பொன்னியின் செல்வரைப் பற்றியும் அதற்குள் ஏதேனும் நிச்சயமான செய்தி கிடைக்கக் கூடும். அது வரையில் பொறுமையாக இருங்கள்" என்று முதன் மந்திரி அநிருத்தர் கூறியது காலாந்தக கண்டருக்கும் உசிதமாகவே தோன்றியது.

"அப்படியானால், சக்கரவர்த்தியிடம் சமயம் பார்த்துச் சொல்ல வேண்டிய காரியத்தைத் தங்களிடமே விட்டு விடுகிறேன். கோட்டைப் பாதுகாப்புக் காரியங்களை நான் கவனிக்கிறேன்" என்று சொல்லி விட்டுச் சின்னப் பழுவேட்டரையர் முதன் மந்திரியிடம் விடை பெற்றுக் கொண்டார்.

அது முதல் கோட்டை மதிள் ஓரமாகச் சுற்றி வந்து கோட்டைப் பாதுகாப்புக்கு வேண்டிய முன் ஏற்பாடுகளைச் செய்து வந்தார். பல நாள் முற்றுகைக்கும் கோட்டையை ஆயத்தமாகச் செய்ய வேண்டும்; கொடும்பாளூர்ப் படைகள் கோட்டைக் கதவைத் தகர்த்தும் மதிள் மேல் ஏறிக் குதித்தும் கைப்பற்ற முயன்றால், அந்த முயற்சியைத் தோற்கடிக்கவும் சித்தமா யிருக்க வேண்டும். இதன் பொருட்டு அவருக்கு நம்பிக்கையான வீரர்களை அங்கங்கே நிறுத்தி வைக்க வேண்டும். கோட்டை மதிள் எங்கேயாவது பலவீனப் பட்டிருந்தால், அதைச் செப்பனிட்டுப் பலப்படுத்த வேண்டும்.

இந்த ஏற்பாடுகளில் சின்னப் பழுவேட்டரையர் கவனம் செலுத்திக் கொண்டிருந்த போதே, வெளியில் இருந்து செய்திகள் அறிவதற்கு வழி என்ன என்பது பற்றியும் அவருடைய உள்ளம் சிந்தித்துக் கொண்டிருந்தது.

தஞ்சைக் கோட்டைக்கு இரகசியச் சுரங்க வழிகள் இரண்டுதான் உண்டு. ஒன்று பெரிய பழுவேட்டரையரின் மாளிகையிலிருந்து பொக்கிஷ நிலவறை வழியாக வெளியே சென்றது. இந்த வழியைச் சில நாள் யாரும் உபயோகிக்க முடியாது. ஏனென்றால், அந்த வழி வெளியே திறக்க வேண்டிய இடத்தில் வடவாற்றின் வெள்ளம் அலை மோதிக் கொண்டு சென்றது. அந்த வழியை அப்போது திறந்தால் வெள்ளம் நிலவறைக்குள்ளேயே புகுந்து விடும்.

இன்னொரு சுரங்க வழி முதன் மந்திரி அநிருத்தரின் அரண்மனைக்குள்ளே இருந்து புறப்பட்டது. ஆனால் அதன் வழியாகச் சின்னப் பழுவேட்டரையர் அறியாமல் யாரும் வெளியே போகவோ, உள்ளே வரவோ முடியாது. அந்த வழி கோட்டைச் சுவரைக் கடந்து செல்லும் இடத்தில் சின்னப் பழுவேட்டரையரின் காவல் இருந்தது. இரவு இரண்டாம் ஜாமத்துக்கு மேலே அந்தச் சுரங்க வழியாக வெளியே அந்தரங்கமான ஆட்களை அனுப்ப வேணுமென்று சின்னப் பழுவேட்டரையர் எண்ணமிட்டுக் கொண்டிருந்தார். கடம்பூருக்கும் பழையாறைக்கும் ஆட்களை அனுப்பிப் பெரிய பழுவேட்டரையரைப் பற்றியும் பொன்னியின் செல்வரைப் பற்றியும் நிச்சயமான தகவல் அறிந்து வரச் செய்ய வேண்டும்.

இம்மாதிரி காலாந்தக கண்டர் முடிவு செய்திருந்த சமயத்திலேதான் ஒரு வீரன் விரைந்து வந்து, வடக்கு வாசலில் ஒரு யானையின்மேல் இரு பெண்கள் வந்திருப்பதைப் பற்றியும், அவர்களுக்காகக் கதவைத் திறக்கும்படி யானைப் பாகன் கூவுவதைப் பற்றியும் தெரிவித்தான். வந்திருக்கும் பெண்களில் ஒருத்தி வானதி என்று தெரிந்ததும் சின்னப் பழுவேட்டரையர் பெரிதும் ஆச்சரியம் அடைந்தார். வானதியின் பெரியப்பன் சைன்யத்துடன் வந்து கோட்டையைச் சுற்றி முற்றுகை யிட்டிருக்கும்போது, அந்தப் பெண் கோட்டைக்குள் தன்னை விடும்படி கேட்பதற்கு எவ்வளவு துணிச்சல்

வேண்டும்? முதலில் "கண்டிப்பாகக் கதவைத் திறக்க முடியாது" என்று சொல்லிவிட வேண்டுமென்றே எண்ணினார். வடக்குக் கோட்டை வாசலுக்குப் போய்ச் சேருவதற்குள் அவருடைய எண்ணம் மாறி விட்டது.

"கேவலம் ஒரு சிறு பெண்ணுக்குப் பயந்து கோட்டைக் கதவைத் திறக்க மறுப்பதா? இது என் வீர தீரத்துக்கு இழுக்கு ஆகாதா?" என்று எண்ணினார். அப்படி எதற்காகத்தான் அந்தப் பெண் கோட்டைக்குள் வர விரும்புகிறாள் என்பதை அறிந்து கொள்ளவும் அவருக்கு ஆவல் உண்டாயிற்று.

கோட்டை வாசலின் மேல் மாடியில் ஏறி நின்று பார்த்தார். யானைமீது யானைப்பாகனைத் தவிர இரு பெண்கள் தான் இருந்தார்கள் என்பது நன்றாகத் தெரிந்தது. அவர்களில் ஒருத்தி வானதி தான் என்பதையும் தெரிந்து கொண்டார். அச்சமயம் கொடும்பாளூர்ப் பெரிய வேளார் அவர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். அந்தச் சம்பாஷணையில் ஒரு பகுதியும் அவர் காதில் விழுந்தது. பெரிய வேளார் வானதியைக் கோட்டைக்குள் போக வேண்டாம் என்று சொல்வதையும் வானதி அதை மறுத்து உள்ளே போவேன் என்று பிடிவாதம் பிடிப்பதையும் அறிந்து கொண்டார். எனவே, வானதிக்குக் கதவைத் திறந்து விடலாம் என்ற எண்ணம் உறுதிப்பட்டது.

பெரிய வேளார் அப்பால் அகன்று சென்றதும், யானை மேலும் சில அடிகள் எடுத்து வைத்து அகழ் ஓரத்தில் வந்து நிற்பதைக் கண்டார்.

யானைப்பாகன் கொம்பை எடுத்து ஊதிவிட்டு முன்போலவே, "கொடும்பாளூர் இளவரசிக்குக் கோட்டைக் கதவைத் திறந்து விடுங்கள்! பெரிய பழுவேட்டரையரிடமிருந்து சின்னப் பழுவேட்டரையருக்கும் இளையபிராட்டியிடமிருந்து சக்கரவர்த்திக்கும் செய்தி கொண்டுவரும் வானதிதேவிக்கு உடனே வழி விடுங்கள்!" என்று கூவினான்.

இதைக் கேட்டதும் சின்னப் பழுவேட்டரையரின் மனதில் கொஞ்ச நஞ்சமிருந்த சந்தேகமும் தயக்கமும் நீங்கி விட்டன. பெரிய பழுவேட்டரையர் வானதியின் மூலமாகத் தமக்குச் செய்தி அனுப்புவது விசித்திர மானதுதான். ஆனாலும் இதில் ஏதாவது சூழ்ச்சியோ, தந்திரமோ இருக்கக் கூடும். இருந்தால், அதைத் தம்மால் கண்டு பிடிக்க முடியாதா? இந்தச் சிறு பெண் தம்மை ஏமாற்றி விட்டுத் தப்பிப் பிழைக்க முடியுமா?—பார்த்துக் கொள்ளலாம்!

யானைப்பாகன் ஊதிய கொம்பின் முழக்கத்துக்குப் பதில் முழக்கம் கோட்டை வாசல் மேல் மாடியிலிருந்து கேட்டது. தீவர்த்தி வெளிச்சம் தெரிந்தது. அந்த வெளிச்சத்தில் வேல்களின் முனைகள் ஒளி வீசித் திகழ்ந்தன. வளைத்து நாணேற்றப்பட்டிருந்த விற்களில் அம்புகள் பூட்டப்பட்டுப் புறப்படச் சித்தமாயிருந்தன. அவற்றுக்கு மத்தியில் ஒரு மனித உருவம் வெளிப்பட்டு வந்தது.

"கொடும்பாளூர் இளவரசியாருக்குக் கோட்டைக் கதவு திறந்து விடப்படும். யானையையும் யானைமீது உள்ளவர்களையுந் தவிர வேறு யாரேனும் பின் தொடர முயன்றால் உடனே யமனுலகம் சேர்வார்கள்!" என்று அந்த மனித உருவம் இடி முழக்கம் போன்ற குரலில் கர்ஜனை செய்தது.

இதைக் கேட்டதும் பூதி விக்கிரம கேசரியும் அவருடன் வந்த ஆட்களும் இன்னும் சிறிது அப்பால் சென்றார்கள்.

கோட்டைக் கதவுகள் திறக்கப்பட்டன. அகழியின் பாலம் இறக்கப்பட்டது. யானை பாலத்தின் மேல் நடந்து சென்றபோது, பாலம் அதிர்ந்தது. வானதிக்குச் சிறிது அச்சம் உண்டாயிற்று. ஆனால் ஆபத்து ஒன்றும் ஏற்படவில்லை. யானை அகழியின் அக்கரையை அடைந்தது. திறந்திருந்த கதவுகளின் வழியாகக் கோட்டைக்குள் பிரவேசித்தது. மறு நிமிடமே பாலம் மறுபடியும் தூக்கப்பட்டது. கோட்டை வாசற் கதவுகளும் சாத்தப்பட்டன.

வானதி ஏறியிருந்த யானைக்கு அருகில் சின்னப் பழுவேட்டரையரின் யானை வந்து நின்றது.

"இளவரசி! வரவேண்டும்! வரவேண்டும்! தங்கள் பெரிய தந்தை தடுத்தும் கேளாமல் தாங்கள் என் விருந்தாளியாக வர இசைந்தது பற்றி மிக்க மகிழ்ச்சி அடைந்தேன்! தங்களுக்கு இங்கே எந்த விதமான தீங்கேனும் நேருமோ என்று அஞ்ச வேண்டாம்!" என்று சின்னப் பழுவேட்டரையர் கம்பீரமான குரலில் கூறினார்.

"ஐயா! எனக்கு அத்தகைய அச்சம் சிறிதும் இல்லை. நான் சொல்ல வந்த செய்திகளைச் சொன்ன பிறகு என்னைத் தாங்கள் பாதாளச் சிறையிலே அடைத்தாலும் கவலையில்லை!" என்றாள் வானதி.

எங்கும்... எந்நேரமும்...

# ப்ரூக் பாண்ட் தேயிலை




நித்தமும் வேகமே
வருவதால் புத்தம் புதியது

# டெலிபோன் வந்தது!

சோமாஸ்

கலகலவென்று கைவளைகள் குலுங்க, வாய் ஒரு ஹிந்துஸ்தானிப் பாட்டை மெல்லிய குரலில் பாட, "இந்திரப் பிரஸ்தம்" பங்களாவில் ஒரு பூங்கொடி நடமாடுவதைப் பார்த்தால் அவள் யமுனாதான் என்று தீர்மானம் செய்து கொள்ளலாம்.

அழகி யமுனாவும் அவள் தம்பி போக்கிரி மணியும் டாக்டர் கிருஷ்ணனின் அருமைக் குழந்தைகள். சின்ன வயதில் தாயை இழந்த அவர்களை, அவர்கள் தகப்பனார் டாக்டர் கிருஷ்ணன் மிகவும் அருமையாக வளர்த்து வந்தார். அவர் குழந்தைகளிடம் காட்டிய அன்பு, பதினேழு வயதுப் பெண்ணான குமாரி யமுனாவை இன்னும் சின்னக் குழந்தை என்றே நினைக்கும்படி செய்தது. நாகரிக ஜார்ஜெட் புடவையும், நாசுக்கான மஸ்லின் ரவிக்கையும் அணிந்து தன் ரோஜாக் கன்னங்களுக்குப் பவுடர் பூசி, இன்னும் கொஞ்சம் சிவப்பேற்றிக்கொண்டு, அவளுக்கென்று அவள் தகப்பனார் வாங்கிக் கொடுத்திருந்த 'பேபி ஆஸ்டின்' காரில் ஏறித் தானே 'டிரைவ்' பண்ணிக் கொண்டு யமுனா கலாசாலைக்குப் போவாள். அந்தக் காட்சி எத்தனையோ மாணவர்களைத் திக்குமுக்காடச் செய்திருக்கிறது.

ஆனால் யமுனாவின் கவர்ச்சி நிறைந்த வளர்ச்சி அவள் தகப்பனார் டாக்டர் கிருஷ்ணனின் கண்களில் படவேயில்லை. அவரைப் பொறுத்தவரையில், யமுனா இன்னும் குழந்தையாகத்தான் இருந்தாள். "குழந்தை காலேஜுக்குப் போய் விட்டாளா?" என்றுதான் அவர் கேட்பார்.

மணிப் பயலும் அப்பாவின் அன்பு காரணமாகப் படு போக்கிரியாக விளங்கினான். துருதுருவென்று சதா விஷமம் செய்து கொண்டிருப்பதுதான் அவன் வேலை.

"குழந்தை காலேஜுக்குப் போக வேண்டும். சின்னக் குழந்தை பள்ளிக்கூடத்துக்குப் போக வேண்டும். சமையல் ஆகிவிட்டதா?" என்று சமையற்காரனை விசாரிப்பான் மணி. அவன் தகப்பனார் இதைக் கேட்டுப் பூரித்துப் போவார்.

யமுனாவும் களங்கமற்ற குழந்தையாகத்தான் இருந்தாள். நினைத்தபடி 'டிரஸ்' பண்ணிக்கொண்டு எப்பொழுதும் புன்னகை ததும்பும் வதனத்துடன் உற்சாகமாக இருப்பாள் யமுனா.

வீட்டில் மணிக்கு, முக்கியமான பொழுது போக்குச் சாதனமாக விளங்கியது டெலிபோன்தான். டாக்டர் கிருஷ்ணன் டிஸ்பென்ஸரியிலிருந்து வந்த பிறகு வீட்டுக்கு வரும் டெலிபோன் செய்திகளையெல்லாம் மணி தான் கேட்டுக் குறித்து வைத்துக்கொண்டு அப்பாவிடம் சொல்லுவது வழக்கம்.

அன்று சனிக்கிழமை. டாக்டர் கிருஷ்ணனின் டிஸ்பென்ஸரி அன்று அரை நாள்தான் திறந்திருக்கும். பகல் ஒரு மணிக்கு மேல் டாக்டர் வீட்டில் இருப்பார். ஆகவே, டெலிபோன் மணி சனிக்கிழமைகளில் அதிகமாக ஒலிக்கும். அன்று என்னவோ மணிக்கு வழக்கம்போல் டெலிபோனில் பேசி, ஒழுங்காகக் குறிப்பெடுத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கப் பிடிக்கவில்லை. காரணம் தெரியாமல் கோபம் கோபமாக வந்தது. அதற்கு ஏற்றாற்போல் யமுனா ஒரு மணி நேரத்துக்குள் பத்து நிறுசுப் புடவைகளைக் கட்டி மாற்றிவிட்டாள். கடைசியில் ஒரு புடவையைத் தேர்ந்தெடுத்து உடுத்திக் கொண்டு எங்கேயோ புறப்படத் தயாரானாள்.

மணிக்குத் தானும் யமுனாவுடன் காரில் போக வேண்டும் என்று ஆசையாயிருந்தது. அவன் அப்பாவுக்கு எப்படித்தான் அது தெரிந்ததோ தெரியவில்லை.

"மணி, நீ எங்கேயும் வெளியே போக வேண்டாம். டெலிபோன் செய்தி வரும், யாராவது அவசரமாகக் கூப்பிடுவார்கள். கொஞ்சம் கவனித்துக் கொண்டிரு!" என்று உத்தரவு போட்டார் டாக்டர் கிருஷ்ணன்.

மணிக்கு அப்பா சொன்னதில் கூட அவ்வளவு கோபம் வரவில்லை. யமுனா சொன்னதுதான் மிகவும் கஷ்டமாயிருந்தது.

"டேய், மணி! அங்கே இங்கே ஓடி, விஷமம் பண்ணிக் கொண்டிருக்காதே. எனக்கு அவசரமாக டெலிபோன் வரும். வந்ததும் என்னைக் கூப்பிடு. நீ ஒன்றும் பேச வேண்டாம். தெரிகிறதா?" என்றாள் யமுனா மிகவும் பரபரப்புடன்.

"ஏன் அக்கா, நீதான் டெலிபோனுக்கு அருகில் கொஞ்ச நேரம் உட்கார்ந்து அந்த அவசர அழைப்பு வரும்போது கேட்டு விடேன்!" என்றான் மணி.

"தெரியுமே, போக்கிரி! எனக்கு அவகாசமே இல்லை. நான் முதலில் வேறு உடை மாற்றிக் கொள்ளனும். எங்கேயாவது போய் விடாதே. அப்புறம் உன் காது பத்திரம்!" என்றாள் யமுனா.

மணியின் பாடு தர்மசங்கடமாய்ப் போய் விட்டது. டெலிபோனை விட்டு நகர முடியவில்லை. ஆனால் அவன் மனசு மட்டும் யமுனாவுக்கு எப்படியாவது பாடம் கற்பிக்க வேண்டும் என்ற நினைப்பிலேயே இருந்தது.

"டிர் ரிங்! டிர் ரிங்!"

டெலிபோன் அடுத்தடுத்து அலறிக் கொண்டிருந்தது. மணி அப்பாவுக்கு வந்த செய்திகளை யெல்லாம் கேட்டு அவரிடம் சொல்லிக் கொண்டிருந்தான். டெலிபோன் மணி அடித்த ஒவ்வொரு தடவையும் யமுனா மணியை அழைத்து யார் கூப்பிட்டது என்று கேட்டுக் கொண்டே யிருந்தாள்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் மணி உற்சாகத்துடன் யமுனாவிடம் ஓடினான்.

"அக்கா, உனக்கு டெலிபோன் வந்தது. நானே பேசிவிட்டேன்......!"

"முட்டாள், நான் உனக்கு என்ன சொன்னேன்? உடனே என்னையல்லவா கூப்பிட வேண்டும்? அதிகப் பிரசங்கித்தனமாக நீ ஏன் பேசினாய்?"

"சமாசாரத்தைத் தெரிந்து கொள்ளாமலே கோபித்துக் கொள்ளுகிறாயே! டெலிபோனில் பேசியவர் 'ரொம்ப அவசரம். அயோத்தியா, நுங்கம்பாக்கம் என்ற விலாசத்துக்கு உடனே வரச் சொல்லவும்' என்று சொன்னார்" என்று கூறியதும் யமுனாவின் முகம் மாறுதலை யடைந்தது.

'ஒரு வேளை நுங்கம்பாக்கத்தில் அவர் மாமா வீட்டில் இருக்கிறாரோ! அப்படித் தான் இருக்கும்' என்று மெதுவாக யமுனா தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள்.

அவளையே கவனித்துக் கொண்டிருந்த மணி மிகவும் குழைந்த தோற்றத்துடன், "அக்கா, இனிமேல் என்னைக் கோபித்துக் கொள்ளமாட்டாயே? உடனே அவர் டெலிபோனை வைத்து விட்டார். நான் என்ன செய்யட்டும்?" என்றான்.

"சரி. நான் உடனே போக வேண்டும்" என்று சொல்லி விட்டு யமுனா வேகமாகக் கார் ஷெட்டுக்குப் போய்த் தன் காரை எடுத்துக் கொண்டு புறப்பட்டாள்.

மணி உடனே அப்பாவிடம் போய், "அப்பா, உங்களை ஒருவர் டெலிபோனில் அழைத்தார். ரொம்ப அவசரக் கேஸாம். நீங்கள் போகாவிட்டால் உயிர் போய்விடுமாம். இதோ, அவர் விலாசம்!" என்றான்.

டாக்டர் கிருஷ்ணன் அந்த விலாசத்தை வாங்கிப் பையில் போட்டுக் கொண்டு மறு நிமிஷம் காரில் ஏறிப் புறப்பட்டுவிட்டார்.

* * *

சற்று நேரத்துக் கெல்லாம் யமுனாவின் கார் "இந்திரப்பிரஸ்த"த்துக்குள் நுழைந்தது. காரை நிறுத்தி விட்டு யமுனா ரொம்ப அவசரமாக இறங்கி, ஓரே துள்ளாகத் துள்ளிக் கூடத்துக்கு வந்து, "மணி!" என்று பலமாக அழைத்தாள்.

மணி மிகவும் சாதுவாக டெலிபோனுக்கு அருகில் உட்கார்ந்து பேப்பர் பார்த்துக்

கொண்டிருந்தாள். அக்காளைக் கண்டதும் கொஞ்சம் திகிலுடன் எழுந்தான்.

"என்னடா விழிக்கிறாய்? யாரோ நோயாளிக்கு உடம்பு ரொம்ப அதிகமாயிருந்திருக்கிறது. அப்பாவை உடனே வரச்சொல்லி டெலிபோனில் பேசியிருக்கிறார்கள். அதை நீ என்னிடம் சொல்லி விட்டாய். நான் அங்கே போய்......போதும், போதும்! உனக்குத் தகுந்த தண்டனை கொடுக்க வேண்டும்!" என்று கூறி யமுனா மணியின் காதைப் பிடித்துக் கொண்டாள்.

அதே சமயத்தில், வாசலில் டாக்டர் கிருஷ்ணனின் கார் 'ஹாரன்' சத்தம் கேட்டது. மறு கணம், டாக்டர் கிருஷ்ணன் ரொம்ப வேகமாக உள்ளே வந்தார்.

"மணி, மணி!" என்று அழைத்தார் டாக்டர். மணியும் யமுனாவும் முன் புறத் தாழ்வாரத்துக்கு ஓடி வந்தார்கள்.

"ஏண்டா, போக்கிரி! டெலிபோனில் அவசரமாக யாரோ என்னை அழைத்ததாகச் சொன்னாயே? அவர் நோயாளியில்லை...... உம்......யமுனா! உன் வகுப்பு மாணவன் முரளீதரன், உனக்கு டெலிபோன் பண்ணுவதாகச் சொல்லி யிருந்தானாம். அவன் உன்னை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந் திருக்கிறான். அந்தச் சமயம் 'ஸ்டெதாஸ்கோப்பும்' கையுமாக நான் போய்ச் சேர்ந்தால் அவனுக்கு எப்படி யிருக்கும்? மணி! டெலிபோனில் அவன் என்ன சொன்னான்?" என்று கேட்டார் அப்பா.

"அப்பா, அவர் சொன்னதை நான் அப்படியே சொல்லி விடுகிறேன். 'யமுனா, உடனே நீ வராவிட்டால் என் உயிர் போய் விடும்' என்றார். உயிருக்கு ஒருவருக்கு அபத்து என்றால் டாக்டரைத் தானே கூப்பிட வேண்டும்? அதற்காக உங்களிடம் சொன்னேன், அப்பா!" என்றான் மணி.

இதற்குள் யமுனா அவன் காதைப் பிடித்துக் கொள்ளவே, "அக்கா! இல்லை, இனிமேல் இப்படிப் பண்ணவில்லை! காதை விட்டு விடு!" என்று கத்தினான்.

மணியின் காது நன்றாய்ச் சிவந்து விட்டது. அதைவிட யமுனாவின் முகம்தான் அதிகமாகச் சிவந்திருந்தது. அவளால் நிமிர்ந்து அப்பாவைப் பார்க்கவே முடியவில்லை. அப்பா உடையை மாற்ற மாடிக்குப் போனார்.

"டிர்ரிங்! டிர்ரிங்!"

இந்தத் தடவை யமுனா மான்குட்டி மாதிரி துள்ளிக் குதித்துக் கொண்டு ஓடி டெலிபோனை எடுத்தாள்.

"மிஸ்டர் முரளீதரனா?......எதிர்பாராத விதமாக அப்பா...அங்கு வந்து விட்டார்...... நீங்கள் சொல்லுவது வாஸ்தவம். அப்பாவுடன் பேசுவதற்கு உங்களுக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. இவ்வளவு சுலபமாக... அப்பாவுக்கு நமது விஷயத்தைத் தெரிவிக்க முடியும் என்று நான் நம்பவேயில்லை. அவரிடம் எப்படித் தெரிவிப்பது என்று நான் யோசித்துக் கொண்டிருந்தேன். நல்ல வேளையாக என் தம்பி மணி பெரிய உதவி செய்தான். உங்கள் தகப்பனாரிடமே இதைப் பற்றிப் பேசி முடித்து விட்டாரா? நாளைக் காலையில் சந்திக்கலாம்!" என்று கூறி யமுனா களிப்புடன் டெலிபோன் ரிஸீவரை வைத்தாள்.

போக்கிரி மணி டெலிபோனில் யமுனா பேசுவதை ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்து விட்டு ஒன்றும் அறியாதவன் போல், இன்னும் என்ன விஷமம் செய்யலாம் என்று யோசிக்க ஆரம்பித்தான்.

அடுத்த நிமிஷம் யமுனா, மணியின் கைகளைப் பிடித்துக் கொண்டு கரகரவென்று 'மத்துச்' சுற்றினாள். அவன் செய்த எதிர்பாராத உதவிக்கு யமுனா எப்படித் தன் சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொள்வாள்!

## சோஷலிஸக் கட்டுரைக்கு நூறு ரூபாய் பரிசு

"சோஷலிஸம் ஏன் வேண்டும்!" என்னும் தலைப்பில் எழுதப்படும் கட்டுரைகளில் சிறந்தது என்று ஆசிரியர் கருதும் கட்டுரைக்கு ரூபாய் நூறு பரிசு வழங்கப்படும். கட்டுரை, வாசகர்கள் ரஸித்துச் சுவையுடன் படிக்குமாறு எளிய தமிழில் அமைந்திருக்க வேண்டும்.

சோஷலிஸ இயக்கத்தின் அடிப்படைத் தத்துவங்கள், சோஷலிஸத்தினால் பாரத தேசம் அடையக் கூடிய நன்மைகள், இந்திய சோஷலிஸ்ட் கட்சியின் முன்னணி வேலைத் திட்டம், அக் கட்சியின் தற்போதைய நிலை, கட்சியை வலுப் படுத்துவதற்குரிய யோசனைகள், சோஷலிஸ்ட் இலட்சியத்தையும் வேலைத் திட்டத்தையும் மக்களிடையே பரப்புவதற்குச் சிறந்த வழிகள்,—இவை யெல்லாம் போட்டிக் கட்டுரைக்கு விஷயமாக அமையலாம். இவற்றில் ஏதேனும் சில அம்சங்களைப் பற்றியும் எழுதலாம்.

கட்டுரை, "கல்கி" இதழில் நாலு பக்கங்களுக்குக் குறையாமலும் எட்டுப் பக்கங்களுக்கு மேற்படாமலும் இருக்க வேண்டும்.

பரிசு பெறும் கட்டுரையைத் தவிர, பிரசுரத்துக்கு எடுத்துக் கொள்ளப்படும் நல்ல கட்டுரைகளுக்கு உசிதம் போல் சன்மானம் வழங்கப்படும்.

சகல எழுத்தாளர்களுக்கும் அதிக அவகாசம் அளிக்கவேண்டும் என்பதற்காகவே, கட்டுரைகளை அனுப்பும் முடிவு தேதியை ஜூன் 30உ லிருந்து ஜூலை 31-ம் தேதிக்கு ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறது.

# வீரச் சுவர்க்கம் அடைந்த வங்கத் தலைவர்

**வ**ங்கம் தந்த தலைசிறந்த தலைவர்களில் ஒருவரான டாக்டர் சியாமப் பிரசாத் முகர்ஜியின் அகால மரணம் பாரத நாடு முழுவதையும் திடுக்கிடச் செய்து துக்கத்தில் ஆழ்த்தியிருக்கிறது. ஐம்பத்திரண்டு வயதான டாக்டர் முகர்ஜி தமது வாழ்க்கையின் பெரும் பகுதியைத் தேசத் தொண்டிற்காக அர்ப்பணம் செய்தார்.

வங்கப் புலியும் அகில இந்தியாவிலும் கீர்த்தியைநிலைநாட்டியவருமான ஹைகோர்ட் நீதிபதி சர் அஷுதோஷ் முகர்ஜியின் புதல்வர்தான் டாக்டர் சியாமப் பிரசாத் முகர்ஜி.

இளைஞராக இருந்தபோது கலாசாலைப் படிப்பில் இணையற்ற சூரராகத் திகழ்ந்த சியாமப் பிரசாத் வாழ்க்கையிலும் வீர தீரராக விளங்கி வந்தார். தம்முடைய இருபத்தெட்டாவது வயதில் டாக்டர் முகர்ஜி சட்ட சபை அங்கத்தினர் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு, அதைத் திறம்பட வகித்தாரெனில் அவரது மேதையை ஊகித்துக் கொள்ளலாம்.

கட்சியை முக்கியமாகக் கருதாமல் தமது மனச் சாட்சிக்கு நியாயம் என்று தோன்றியதைச் செய்ய அவர் என்றும் தயங்கியதில்லை. உதாரணமாக, 1929-ல் காங்கிரஸ் மகா சபை சட்ட சபைகளைப் பகிஷ்காரம் செய்தபோது டாக்டர் முகர்ஜி வங்க சட்ட சபை அங்கத்தினர் பதவியையும், வங்காளப் பஞ்சத்தின் போது முஸ்லிம் லீக் மந்திரி சபையில் வகித்த மந்திரி பதவியையும் உதறித் தள்ளச் சிறிதும் தயங்கவில்லை.

மகாத்மா காந்தியின் மறைவினால் மனம் துடித்து, டாக்டர் முகர்ஜி காங்கிரஸில் சேர்ந்தார். முதலாவது இந்திய சுதந்திர சர்க்காரில் கைத்தொழில் மந்திரி பதவி ஏற்றுத் திறம்பட நிர்வாகத்தை நடத்தினார்.

பிறகு, நேருஜி—லியாகத் அலிகான் சமரச ஒப்பந்தம் ஏற்பட்ட போது, அதைக் கண்டித்து டாக்டர் முகர்ஜி தமது மந்திரி பதவியை ராஜிநாமா செய்தார். எதிர்க் கட்சித் தலைவராக இருந்து பற்பலப் பிரச்னைகளை ஒட்டியும் தமக்கு நியாயம் என்று தோன்றிய வழியில் இடைவிடாது தீவிரமாகப் போராடி வந்தார்.

டாக்டர் சியாமப் பிரசாத் முகர்ஜி ஹிந்து தர்மத்தில் மிகுந்த பற்றுதல் உள்ளவர். ஹிந்து தர்மம் இந்தியாவின் இன்னல்களை மாத்திரமல்ல, உலக நாடுகளின் கஷ்டங்களையே தீர்க்க வல்லது என்ற திடமான நம்பிக்கை ஸ்ரீ முகர்ஜிக்கு உண்டு.

பாகிஸ்தான் பிரிவினையின் விளைவாக ஹிந்துக்கள் பட்ட சகிக்க முடியாத கஷ்ட நஷ்டங்கள் டாக்டர் முகர்ஜியின் ஹிருதயத்தைச் சொல்லொணா வேதனைக்கு உள்ளாக்கி விட்டன. ஹிந்துக்களின் சார்பில் அவர் இறுதி வரையில் போராடி வந்ததற்கு அது தான் காரணம்.

ஸ்ரீ முகர்ஜி கல்கத்தா சர்வகலாசாலை உப அத்தியக்ஷகராக இருந்து மேற்படி சர்வகலாசாலையின் மதிப்பை உயர்த்தினார். அவர் சில ஆண்டுகள் வரையில் ஹிந்து மகாசபையின் தலைவராகவும் இருந்தார்.

பாரதிய ஜனசங்கத் தலைவர் என்ற ஹோதாவில் அவருக்கும் பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கும் பார்லிமெண்டில் காஷ்மீர் பிரச்னை சம்பந்தமாக அடிக்கடி கடுமையான வாக்குவாதங்கள் நிகழ்ந்தது உண்டு.

ஜனசங்கத்தின் ஆதரவில் காஷ்மீர் சர்க்காருக்கு எதிராக நடந்த போராட்டத்தில் பங்கு எடுத்துக் கொள்வதற்காக டாக்டர் முகர்ஜி சென்ற மே மாதம் காஷ்மீருக்குச் சென்றார். சர்க்கார் அனுமதி பெறாமல் அவர் காஷ்மீருக்குள் பிரவேசித்ததாக அவரைக் காஷ்மீர் அதிகாரிகள் கைதுசெய்து ஒரு பங்களாவிலே காவலில் வைத்தனர். அங்கு எதிர்பாராத விதமாகத் திடீரென்று ஏற்பட்ட நோயினால் அவர் காலமாகும்படி நேர்ந்தது நாடெங்கும் மிகுந்த அதிர்ச்சியையும் துக்கத்தையும் கொடுத்திருக்கிறது. தமது கொள்கைக்காகப் போராடிய வண்ணம் வீரச் சுவர்க்கம் அடைந்துள்ள டாக்டர் முகர்ஜியின் வயோதிகரான தாயாருக்கும் குடும்பத்தினருக்கும் தேச மக்களின் அநுதாபம் உரித்தாகுக.

## கல்கத்தாவில் கல்கி விநியோகம்

இதுவரை கல்கத்தாவில் கல்கி விநியோகத்தைக் கவனித்து வந்த ஸ்ரீ எஸ். கே. ராமசேஷன் (10, தேசபிரியா பார்க் ரோட், காளிகாட்) அவர்களுக்குப் பதிலாக இனி கல்கத்தாவில் கல்கி விநியோகத் [redacted]



குடந்தை நகரில் ஜூன் மீ 13,14உ களில் அன்னதான வெள்ளிவிழா அமோகமான உற்சாகத்துடன் நடைபெற்றது. 1. எட்டுக் 'கியூ' வரிசைகளில் நின்று மக்கள் அன்னதானம் பெற்றுச் சென்றார்கள். 2. அன்னதானத்துக் கென்று பிரம்மாண்டமான பந்தல் அமைத்துக்கொடுத்தவர்கள். 3. பாக்கு மரப் பட்டைகளில் அன்னம் வழங்கப்பட்டது. 4. அன்னதான வெள்ளிவிழாவின் பொதுக் கூட்டம் பிரார்த்தனையுடன் ஆரம்பமாயிற்று. 5. அன்னதானம் ஆரம்பமாகும் சமயத்தில் கூடியிருந்த கூட்டம். 6. விழாவின் வரவேற்பு சபைத் தலைவரான குடந்தை சேர்மன் ஸ்ரீ வி. எஸ். குஞ்சிதபாதம் செட்டியார் அவர்களையும்,



நிதி மந்திரி ஸ்ரீ சி. சுப்பிரமணியம், தலைமை வகித்த ஸ்ரீ எம். பக்தவத்சலம், விழாக் கமிட்டியின் பொக்கிஷதார் டாக்டர் வி. ஆர். மூர்த்தி ஆகியவர்களையும் காண்க. 7. சாப்பாடு வாங்கிக் கொண்டுபோனவர்கள் குளக்கரையில் 'கியூ' வரிசையில் உட்கார்ந்து சாப்பிடும் காட்சி. 8. பெரிய அண்டாக்களில் சாம்பார் தயாராகிறது. 9. பெண்மணிகளின் கூட்டம் ஸ்ரீமதி 'குகப்ரியை' அவர்களின் தலைமையில் நடைபெற்றது. கஸ்தூரிபா மாதர் சங்கத்தைச் சேர்ந்த ஸ்ரீமதி நாகராஜன் அறிக்கை படிக்கிறார்.

போட்டோ: எம். டி.

# வட்ட மேஜை

## புதிய கல்வித் திட்டம்

ஆரம்பப் பள்ளிகளில், கிராமங்களிலே இருபது ஆண்டுகளுக்கு மேல் ஆசிரியப் பணி புரிந்த நான், புதிய கல்வித் திட்டத்தைப் பற்றிச் சில வரிகள் எழுதுவது தவருகாது என்று எண்ணி இந்தக் கடிதம் எழுதுகிறேன்.

"பள்ளிகளில் பிள்ளைகளின் ஆஜர் குறைந்தால் அதற்கு ஆசிரியரே பொறுப்பாளி; அவர் பள்ளிக்கூடக் கிராமத்திலேயே குடியிருந்தும் பெற்றோர்களுடன் தொடர்பு கொண்டும், பிள்ளைகளை வீடு சென்று அழைத்து வந்தும் ஆஜரை விருத்தி செய்து கொள்ளல் வேண்டும்" என்பது ஆசிரியர்களுக்கு அதிகாரிகளால் இடப்படும் கட்டளை. அந்தக் கட்டளைக் கிணங்கி ஆசிரியர் அதிகாலையில் சுற்றுப்புற ஊர்களுக்குச் சென்று பிள்ளைகளை அழைத்து வர சுமார் நாலு அல்லது ஐந்து மைல்கூடச் சுற்ற வேண்டி யிருக்கும். இவ்வளவு தூரம் சுற்றிய பின் வந்தால் பள்ளிக்கூடத்தில் எப்படி வேலை செய்ய இயலும்!

இத்தனைத் தொல்லைகள் பட்டாலும் தந்தையாருடனே பிறருடனே வயலுக்கும், தொழில் செய்யுமிடங்களுக்கும் செல்வோரைக் கட்டுப் படுத்தவே வழி தெரியவில்லை. இந்த நிலைமைகளை எண்ணி யெண்ணி நல்ல போதனை முறையுள்ள ஆசிரியரும் கூடச் சோர்ந்து விடுகிருர். ஏதோ பெரிய நிலச்சுவான் தார்களுள்ள ஊர்களிலே வேலை செய்வோர் மட்டுமே நற்பெயரெடுக்க முடிந்தது.

இந்த நிலையிலே நம் ஒப்பற்ற தலைவர் ராஜாஜி அவர்கள் கொண்டு வந்துள்ள திட்டந்தான் இத்தகைய இன்னல்களை அறவே ஒழித்து நாட்டின் கல்வி வறுமையைப் போக்கும். அதோடு கூட ஆசிரியர் பற்றாக்குறையும் போகும் என்று கூறுவது வெறும் புனைந்துரையே யல்ல. இந்தப் புதிய கல்வித் திட்டத்தினுல் விளையும் நன்மைகளை ஒரு சில வருஷங்களிலே கண்கூடாகக் காணலாம்.

விழுப்புரம்
6—6—53

க. பா. வேல்முருகன்



"தினமணி"ப் பத்திரிகையின் துணை ஆசிரியர் ஸ்ரீ ஏ. ஜி. வெங்கடாச்சாரி அவர்களின் புதல்வி சௌபாக்கியவதி ஏ. வி. பத்மா, பி. ஏ.க்கும் அண்ணுமலைச் சர்வகலாசாலை கணிதப் பேராசிரியர் எஸ். ரங்காச்சாரி, பி. ஏ. (ஆனர்ஸ்) அவர்களுக்கும் சென்னையில் சென்ற 17-6-53 அன்று வெகு சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் மணமக்களுக்கு ஆசிச் செய்திகள் வந்திருந்தன.

வாழ்க மணமக்கள்!

●

## ராஜாஜியின் தலைமை

ராஜாஜியின் தலைமை ஆந்திரா சேர்ந்திருந்த போது தேவை யென்றால் பிரிந்த பின்பும் அத் தேவை மேலும் அவசியமாகிறது. ஆந்திரர்கள் ஆந்திர நாட்டைப் பிரித்துக் கொண்டு போனுர்களேயன்றித் தமிழ்நாட்டின் தலைவர்களையல்லவே! தமிழன் தலைமையில் ஆந்திரர்கள் இருக்க விரும்பவில்லை; பிரிந்து விட்டார்கள். அதனுல் நமக்கென்ன! ஆந்திரத் தலைவர்கள் ஒன்ருயிருந்து உருப்படியான நன்மையைச் செய்ய முடியாமல் கூச்சலிட்டுக் குளறுபடி செய்து வந்தனர். இனி நம் தேவையை நாமே ஒன்றுபட்டு ராஜாஜியின் தலைமையில் தேடிக் கொள்வோமாக.

"ராஜாஜியின் தலைமை ஆந்திரா பிரிந்த பின்பும் தேவை" என்ற பொருள் பற்றிப் பல இடங்களில் தீர்மானித்ததாகச் செய்தித் தாளில் பார்க்கிறேன்.

ராஜாஜியின் தலைமை இனித் தேவையில்லை யென்று யார் சொன்னது! சொன்னதுமில்லை, சொல்லப் போவதுமில்லை. இதைப்பற்றித் தீர்மானிப்பதைவிட ராஜாஜியின் திட்டங்களை எடுத்துக் கொண்டு நம் நாடு முன்னேற்ற மடைய வழி கோலுவோமாக.

நாடு செழிப்படைய விரும்பாதாரே ராஜாஜியின் தலைமையை விரும்பாதவராவார்.

ஆலவேலி
11—6—53

மு. வைத்தியநாதன்

●

## யோசித்திருப்பார்களா?

சென்ற முதல் தேதி வெளி வந்த எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை முடிவுகளில் வராமலிருந்த நம்பர்களில் என்னுடையதும் ஒன்று. நான் இதைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. இரண்டு தினங்கள் முன்பு நான் என்னுடைய பள்ளியில் சென்று என் மார்க்குப் புத்தகத்தை வாங்கிப் பார்த்தேன். அதில் நான் ஆங்கிலத்தில் ஒரு மார்க்குக் குறைவாக வாங்கியதனுல் பெயிலாகி யிருந்ததைப் பார்த்தேன். இதர பாடங்களில் ஜில்லா சராசரி மார்க்கிற்குமேல் நல்ல மார்க்குகள் எடுத்திருந்தும் ஒரு வருஷம், ஒரு மார்க்குக் குறைவினுல் வீணுகி விட்டது. என்னுடன் படிக்கும் சக மாணவர்கள் என்னுடைய மொத்த மார்க்கை விடக் குறைவான மொத்த மார்க்குகள் எடுத்துப் பாஸாகி யிருக்கிருர்கள். இதை நினைக்கும்பொழுது என் நெஞ்சு கொதிக்கிறது.

திருத்துபவர்கள் இரக்கம் கொண்டு ஒரு மார்க்கு கூடப் போட்டுப் பாஸாக்கி யிருக்கலாம். அல்லது ஐந்து, ஆறு மார்க்குகள் குறைத்துப் போட்டிருந்தால், 'நாம் நன்றாகப் படிக்கவில்லை' என்று சமாதானமாகிலும் அடையலாம்.

ஒரு மார்க்குக் குறைவினால் ஒருவனைச் சோதிப்பது மிகவும் வருந்தத் தக்கது. அறிவாளிகளான, பரீட்சை திருத்துபவர்களோ, அல்லது முடிவு செய்பவர்களோ இவ்வாறு ஒரு மார்க்குக் குறைவினால் ஒரு மாணவனுக்கு ஒரு வருஷம் வீணாவதைப் பற்றிச் சிறிது யோசித்திருப்பார்களேயாயின், இவ்வாறு முடிவு செய்திருப்பார்களா!

சென்னை
13—6—53

ஒரு தேறாத மாணவன்.

●

## ஒரு நல்ல மருந்து!

நாட்டு நிலை நாளுக்கு நாள் மாறி வருகிறது. அதற்கேற்பக் கல்வி முறையும் மாற வேண்டும்; மாறியே தீரவேண்டும். இந்த ஆங்கிலக் கல்வி முறை மக்களிடம் சாதித்துள்ளதென்ன! அடிமை மனோபாவத்தைத்தான். ஆங்கிலக் கல்வியை அமுலுக்குக் கொண்டு வந்தபோது, மெக்காலே பிரபு கிழக்கிந்தியக் கம்பெனிக்குக் குமாஸ்தா பொறுக்கத்தானே கொண்டு வரப்பட்டுள்ளதாகக் கூறினர்.

அந்நிலை மாறுவதற்கு ராஜாஜி கொண்டு வந்துள்ள கல்வித் திட்டம் ஒரு நல்ல மருந்து!

இவ்வளவு நாட்களாக மக்களுக்குத் தொழிற் கல்வி மீது வெறுப்பிருந்தது. அடிமைக் குமாஸ்தா தொழிலிலிருந்த மோகம், தொழில்களை அவ்வளவு கீழாக எண்ணச் செய்தது

வேலை யில்லாத் திண்டாட்டத்தால் இன்று நம் நாடு பெரிதும் அவதி யுறுகிறது. வேலை தேடித் தரும் ஸ்தாபனங்களில் பதிந்து கொண்டுள்ள எஸ். எஸ். எல். ஸி. க்கள் மூன்று லட்சம் பேர்களாம்! அவர்களுக்காக எவ்வளவு குமாஸ்தா வேலைகளைச் சிருஷ்டிப்பது! இந்தப் பிரச்னையைப் புதிய கல்வித் திட்டம் ஓரளவாவது நீக்கும்.

ஆதலால் இத்திட்டம் ஒரு பெரும் வரப்பிரசாதம். நல்ல திட்டங்களுக்கு என்றும் எதிர்ப்புகள் இருந்தே தீரும். அதைப் பொருட்படுத்தாமல் நம்முடைய மதிப்புக்குரிய ராஜாஜி அவர்கள் இந்த சர்வ சங்கட நிவாரண திட்டத்தை நகரங்களுக்கும் விஸ்தரிக்க வேண்டுமென்பதே என் அவா.

விஜயபுரம்
17-6-53

க. குஞ்சப்ப சாது

●

## வாக்குப் பரிபாலனம்

நான் நீண்டகாலம் தேச சேவை செய்ததின் பயனாகச் சர்க்கார் எனக்கு, திருவள்ளூர் தாலுக்கா வேலம்பட்டு கிராமத்தில் சர்வே நெம்பர் 102, பட்டா நெம்பர் 146 உள்ள நிலத்தை ஜாரி செய்தார்கள். நான் இந்த நிலத்தை வினோபாஜியின் பூமி தான இயக்கத்துக்குக் கொடுத்துவிட உத்தேசித்து விசாரித்ததில், சர்க்கார் தியாகிகளுக்குக் கொடுத்த நிலத்தை நாம் யாருக்கும் கொடுக்கச் சட்டமில்லை என்று சொன்னதினாலும் ராஜாஜி அவர்கள் தியாகிகள் தியாகத்துக்குக் கூலி பெறக் கூடாது என்று வற்புறுத்தி வருவதாலும், நான் ஜூன் மாதம் ஆறும் தேதியன்று மேற்படி நிலத்தைச் சர்க்காருக்குத் திருப்பிக் கொடுத்து விட்டேன். நான், ராஜாஜி எப்பொழுது சினிமா பார்க்கக் கூடாது என்று சொன்னாரோ அதிலிருந்து இதுவரை சினிமாவுக்குப் போவதை நிறுத்தி விட்டேன். கைத்தறித் துணிகளை ஆதரிக்க வேண்டு மென்று அவர் சொன்னதிலிருந்து என் வீட்டிற்கு வேண்டிய துணிகளைக் கைத்தறித் துணிகளாகவே வாங்கிக் கொண்டு வருகிறேன்.

சென்னை
8—6—53

ஆர். டி. சுந்தரராஜன்

●

## தமிழ்நாட்டில் சோஷலிஸம்

தமிழ் நாட்டில் உள்ள பாமர ஜனங்களுக்கு இன்னும் 'சோஷலிஸம்' என்றால் என்ன என்பது தெரியாது. அவர்கள் சோஷலிஸம் என்பது ஒரு புலியோ அல்லது பிசாசோ என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இதற்குக் காரணம் சோஷலிஸ்ட் கட்சியைப் பற்றிய பொய்யான பிரசாரம்தான். "சோஷலிஸ்ட் கட்சி அதிகாரத்துக்கு வந்தால் உங்கள் வீடு, நிலம் முதலியவைகளைப் பிடுங்கிப்பங்கு வைத்துவிடுவார்கள்" என்று பாமர மக்களிடம் பொய்யான பிரசாரங்கள் செய்யப்படுகின்றன. இதனால் மிகக் குறைந்த அளவில் நிலம் வைத்து இருப்பவர்கள்கூட சோஷலிஸ்ட் கட்சியில் சேருவதற்குப் பயப்படுவதுடன் அதில்

# பிரபல திருமணம்



ஜார்ஜ் ஓக்ஸ் லிமிடெட்டின் டைரக்டரும், ஜெனரல் மானேஜருமான ஸ்ரீ கே. ஹரிஹரன் அவர்களின் புதல்வி சௌபாக்யவதி சங்கரிக்கும், சிரஞ்சீவி ஏ. நடராஜன், B.Sc (Engg.)க்கும் மயிலாப்பூரில் மணமகள் இல்லத்தில் சமீபத்தில் வெகு விமரிசையாக திருமணம் நடந்தேறியது. திருமணத்திற்கு ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் இன்னிசைக் கச்சேரி நடந்தேறியது.

வாழ்க, சங்கரி — நடராஜன் !

சேருகின்றவர்களையும் சேரவொட்டாமல் தடுக்கிறார்கள். சோஷலிஸத்தைப் பற்றி விளக்கமாக எடுத்துக் கூறத் தமிழ் நாட்டில் இதுவரை தகுந்த தலைவர்களோ, பத்திரிகைகளோ அல்லது தகுந்த சாதனங்களோ ஏற்படவில்லை.

வீரவநல்லூர் — ஏ. ராமகிருஷ்ணன்
13—6—53 — வி. ஏ. எஸ். மணி

●

## பொன்மொழியைப் பின்பற்றி...

சென்னையில் பிரபல வியாபாரியும், தேவகோட்டை வாசியும் தர்மசிந்தனையாளருமான ஜனாப் எம். ஈ முஹம்மது கனி ராவுத்தர் அவர்கள் ஈத் (27 பிறை) பண்டிகையை முன்னிட்டு ஏழைப் பெண்களுக்குச் சென்ற பன்னிரண்டு ஆண்டுகளாக மில் புடவைகள் இனாமாக வழங்கி வந்தார். கைத்தறிச் சேலைகளையே வாங்கி நெசவாளர்களை ஆதரிக்க வேண்டும் என்ற நமது முதன் மந்திரி ராஜாஜியின் பொன் மொழியைப் பின்பற்றி அதிகச் செலவையும் பாராமல் இவ்வாண்டு நடந்த ஈத் பண்டிகையின்போது ஜனாப் கனி ராவுத்தர் அவர்கள் அறுநூற்றைம்பது ஏழை முஸ்லிம் பெண்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கைத்தறிச் சேலையை வழங்கினார்.

தேவகோட்டை — ஒரு நிருபர்

●

## கலப்படம் வேண்டாம்!

காங்கிரஸ் மகா சபைக்குள்ளேயே 1948 வரையில் இடது சாரி கட்சியாக இயங்கி வந்த காங்கிரஸ் சோஷலிஸ்டுக் கட்சியானது காங்கிரஸில் ஊழல்களும் கோஷ்டி மனப்பான்மையும் பதவி மோகமும் மிகுந்துவிட்டதன் காரணமாகக் காங்கிரஸ் தனது அடிப்படை லட்சியத்திலிருந்து விலகிப் போய் விட்டது என்று சொல்லிக் கொண்டு அதிலிருந்து வெளியேறி இந்திய சோஷலிஸ்ட்டுக் கட்சி அமைத்துக் கொண்டது. அதைப் பின்பற்றிக் காங்கிரஸிலிருந்து வெளியேறிய பிரஜா கட்சியினர் சோஷலிஸ்ட்டுகளைப் போல் இலட்சிய வேறுபாடு காரணமாக வெளியேறியவர்கள் அல்ல. காங்கிரஸில் பதவி கிடைக்காததனாலும், காங்கிரஸ் கட்சித் தேர்தல்களில் போட்டியிட்டுத் தோல்வியடைந்ததாலும் ஏற்பட்ட ஏமாற்றத்தால் வெளியேறியவர்களைக் கொண்டு அமைக்கப்பட்டது பிரஜா கட்சி.

கட்சியின் லட்சியத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கின்ற சோஷலிஸ்டுகளும், பதவிக்காக எதையும் செய்யத் தயாராக இருக்கும் பிரஜா கட்சியினரும் இணைந்து வேலை செய்வதென்பது முடியாத காரியம்.

பிரஜா கட்சியினர் சமீபத்தில் ஐக்கிய முன்னணியில் சேர்ந்து பதவிக்காகச் செய்த தகிடுதத்தங்களை யாவரும் நன்கறிவர். ஆகையால் இந்த இணைப்பு நீடித்திருக்க முடியாது. அப்படியிருக்கக்கூடிய சொற்ப நாட்களிலும் இந்த இரண்டு கட்சிகளும் தாமரை இலையும் தண்ணீரும் போலவும் வேலை செய்து வருமே தவிர பாலும் நீரும் போல் இரண்டறக் கலந்து வேலை செய்வது அசாத்தியமே.

ஆகையால் சோஷலிஸக் கொள்கையிலும் திட்டங்களிலும் மிகுந்த மதிப்பு வைத்திருக்கும் என் போன்றவர்களைச் சோஷலிஸ்ட்டுத் தலைவர்களின் போக்கு வசீகரிக்காமல் போனதில் ஆச்சரியமில்லை. இந்தியாவில் சோஷலிஸம் வளர வேண்டுமானால், சோஷலிஸ்ட்டுகள் என்று தங்களைக் கூறிக்கொள்ளுபவர் வேறு கோஷ்டிகளுடன் சேராமல், பழைய சோஷலிஸ்டுக் கட்சியில் விசுவாசம் கொண்ட ஊழியர்களைக் கூட்டி மீண்டும் இந்திய சோஷலிஸ்டுக் கட்சியை அமைத்து வேலை செய்ய வேண்டும். அப்படி அமைத்து வேலை செய்தால், சோஷலிஸ்ட்டுக் கட்சி கூடிய விரைவில் பலமடைந்து, தேசத்தில் காங்கிரஸுக்கு அடுத்தபடியான சிறந்த கட்சியாக விளங்கும் என்பதில் ஐயமில்லை.

குடியாத்தம்
12—6—53 — ஏ. ஏ. கோவிந்தராஜன்




## 2. இளவரசனின் ஏக்கம்

மயக்கமுற்று விழுந்த இளவரசன் குலசேகரனை, சிவநேசர் அப்படியே தாங்கிக் கொண்டார். பலவித ராஜோபசாரங்களையும் செய்து, முதல்தரமான வைத்திய உதவியையும் அளித்து இளவரசனின் மூர்ச்சை தெளிவித்தார்.

சிவநேசர் மாத்திரம் இத்தனை நேரமும் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். இளவரசன் குலசேகரன் அவர் அருகில் வந்து அழைத்ததும்தான் அவருக்குத் தம்முடைய சுய நினைவு வந்தது.

"நண்பரே, இந்தப் பொன்னழகியின் சித்திரமே இவ்வளவு அழகாயிருக்கிறதே, அவள் நேரில் பார்ப்பதற்கு எத்தனை அழகாயிருப்பாள்! நீங்கள் இவளைப் பார்த்திருக்கிறீர்களா? இவளைப் பற்றி என் தகப்பனார் ஏதாவது உங்களிடம் சொன்னதுண்டா? நான் அவளைக் காண முடியுமா? என் ஆசை நிறைவேறுமா?" என்று கேட்டான் குலசேகரன்.

"இளவரசே, அது விஷயமாகத்தான் யோசித்துக்கொண்டிருக்கிறேன். பொன்னழகி இருக்கும் இடம், அவள் எப்படிப்பட்டவள், அவள் யாருடைய பெண் என்னும் விவரங்களெல்லாம் எனக்குத் தெரியாது. உன் தகப்பனார் என்னிடம் இவளைப் பற்றி ஒன்றும் சொன்னதில்லை. சுமார் இரண்டு வருஷங்களுக்கு முன்பு இந்தச் சித்திரத்தைத் திருவனந்தபுரம் ராஜ்யத்திலிருந்து மகாராஜா வாங்கிக் கொண்டு வந்தார். இந்தச் சித்திரத்தைப் பற்றி அவரும் விசாரித்த வண்ணம் இருந்தார். ஆனால் சரியான தகவல் ஒன்றும் கிடைக்கவில்லை. இப்பொழுது எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. நமது இரத்தின மாளிகையிலுள்ள அருமையான பொருள்களையும் பொன்னழகியின் சித்திரத்தையும் பார்ப்பதற்கு எல்லாத் தேசத்து மன்னர்களுக்கும் ஓலை யனுப்புவோம். பொன்னழகியைப் பற்றிய வரலாற்றையும் அவள் இருக்கும் தேசத்தையும்பற்றிச் சொல்லுகிறவர்களுக்கு ஒரு பரிசு அளிக்க ஏற்பாடு செய்வோம். அப்பொழுது யாராவது அவளைப் பற்றிச் சொல்லக் கூடும்!" என்றார் சிவநேசர்.

"நல்ல யோசனை! நல்ல யோசனை! அப்படியே செய்யலாம். இன்றே அந்தப் பொருட்காட்சிக்கு ஏற்பாடு செய்யுங்கள்!" என்றான் குலசேகரன்.

பிறகு இருவரும் இரத்தின மாளிகையை விட்டுப் புறப்பட்டனர்.

விரைவில் இரத்தின மாளிகையில் ஒரு பெரிய பொருட் காட்சி திறக்கப்பட்டது. தேச தேசத்து மன்னர்களெல்லாம் பொருட் காட்சியைக் காண வந்தனர்.

விதவிதமான பறவைகள், மிருகங்கள், தச்சு வேலைச் சாமான்கள், யானைத் தந்தத்தில் செய்யப்பட்ட சாமான்கள், விதவிதமான நகைகள், பலவித செடி கொடிகள் எல்லாவற்றையும் பார்த்து வெளிநாட்டு மன்னர்கள் அதிசயம் அடைந்தனர். இரத்



தின மாளிகையில் உள்ள ஒவ்வொரு பொருளும் அதிசயிக்கும்படிதான் இருந்தது.

எல்லா மன்னர்களுடைய கவனத்தையும் கவர்ந்தது பொன்னழகியின் வர்ண சித்திரம்தான். பார்த்தவர்கள், வைத்த கண் வாங்காமல் அந்தச் சித்திரத்தைப் பார்த்தபடியே அசைவற்று நின்றனர்; சித்திரப் பாவைகளாக மாறி விட்டார்களோ என்று எண்ணும்படியிருந்தது.

பொன்னிறமாக இருந்த பொன்னழகியின் சரீரத்தின் காந்தி எல்லோரையும் மயங்க வைத்தது. அவளுடைய கூந்தலின் கருமையும் பளபளப்பும் கண்ணைக் கவர்ந்தது. அதைச் சித்திரம் என்றே யாரும் நம்பவில்லை. அந்தச் சித்திரத்தின் பக்கத்தில், "இந்தப் பொன்னழகியின் ஊர், பெற்றோர்கள் பெயர் முதலிய விவரங்களையெல்லாம் வெளியிடுகிறவர்களுக்கு ஆயிரம் பவுன் பரிசாக அளிக்கப்படும். மேற்படி விவரங்கள் சரியானவையாயிருக்க வேண்டும். பொய்யான தகவல் கொடுப்பவர்கள் தண்டனைக்குள்ளாவார்கள்!" என்று கொட்டை எழுத்துக்களில் ஒரு பலகையில் எழுதி வைக்கப்பட்டிருந்தது.

அந்தப் பலகையில் கண்ட விஷயத்தை எல்லோரும் கவனமாகப் படித்தனர்.

தினந்தோறும் எத்தனையோ மன்னர்களும், மந்திரிகளும், சேனாபதிகளும், பிரபல பிரமுகர்களும், யாத்திரிகர்களுமாக வந்து இரத்தின மாளிகையைப் பார்வையிட்ட வண்ணம் இருந்தனர். ஆனால் ஒருவராவது பொன்னழகியைப் பற்றிய விவரங்களைத் தெரிவிக்கவில்லை.

நாள் ஆக, ஆகக் குலசேகரனுக்கு மனதில் ஏக்கம் பிடித்து விட்டது. "யாருக்குமே தெரியாதோ அவளைப் பற்றி, ஒருவேளை பொன்னழகி என்ற ஒரு பெண்மணியே கிடையாதோ!" என்றெல்லாம் நினைத்து உருக ஆரம்பித்தான்.

ஒரு நாள் ஒரு ஏழை யாத்திரிகன் இரத்தின மாளிகைக்கு வந்தான். அவன் நடை உடை பாவனைகளெல்லாம் பைத்தியக்காரனோ என்று நினைக்கத் தோன்றியது. ஆனால் அவன் பார்வையில் ஒரு கவர்ச்சி இருந்தது. அவன் எல்லாப் பொருள்களையும் பார்த்துக் கொண்டே வந்தான். பொன்னழகியின் சித்திரத்தைப் பார்த்ததும் அவன் அதிசயப் பட்டதோடு நில்லாமல், தனக்குள்ளாகவே பேசிக் கொண்டான். மாறு வேஷத்தில் இருந்த குலசேகரன் அதைக் கவனித்தான்.

"பொன்னழகியின் படம் அல்லவா இது! கடல் கடந்து வெகு தூரத்துக்கு அப்பாலிருக்கும் இவளைக் கண்டு பிடிப்பது சுலபமான காரியம் அல்லவே? அப்படியே அந்த நாட்டுக்குப் போனாலும் அவளைப் பார்க்க முடியாதே!" என்று பரதேசி சொன்னான்.

உடனே அரண்மனைக் காவலாளர்களைக் கொண்டு அந்தப் பரதேசியைக் கைது செய்யச் சொல்லிவிட்டுத் தன் அரண்மனைக்குச் சென்றான் குலசேகரன்.

சிவநேசரும் குலசேகரனும் தனியாக இருந்த சமயத்தில் அரண்மனைக் காவலாளர்கள் அந்தப் பரதேசியை அங்கு அழைத்து வந்தார்கள்.

"ஐயா, பொன்னழகியைப் பற்றி உங்களுக்குத் தெரியும் என்பது இரத்தின மாளிகையில் நீங்கள் மெதுவாக முணுமுணுத்துக்கொண்டதிலிருந்து தெரிகிறது. பொன்னழகியைப் பற்றி உங்களுக்குத் தெரிந்ததைச் சொல்லுங்கள்!" என்று மிகவும் அன்போடும் ஆதரவோடும் சிவநேசர் அவனைக் கேட்டார்.

அந்த யாத்திரிகன் ஒரு பெருமூச்சு விட்டு, பிறகு "உம், இந்தப் பைத்தியம் உங்கள் இளவரசனையும் பிடித்து விட்டதா? இந்தச் சதிகாரியின் சித்திரத்தைக் கண்டு எத்தனையோ இளவரசர்கள் தங்கள் மனதைப் பறிகொடுத்துப் பரிதவிக்கிறார்கள். நானும் அவள் அழகில் மயங்கித்தான் போனேன். அவளைக் காண்பதற்கு நான் பட்ட பாடு கொஞ்ச நஞ்சமல்ல. அவளது மோகன உருவம் என் மனதில் பதிந்து சதா காலமும் என் நினைவிலேயே இருந்தது!" என்று கூறித் தேசாந்திரி சிறிது நேரம் வான வெளியைப் பார்த்தான்.

"ஐயா, தயவு செய்து நீங்கள் அவளைப் பற்றிய விவரங்களை எனக்குச் சொல்ல வேண்டும்!" என்று குலசேகரன் ஆவலுடன் கேட்டான். (தொடரும்)

# தேய்ந்த சாம்ராஜ்யம்

ஜெயமணி

இரும்புத் திரைக்கு உட்பட்ட பால்கன் நாடுகளில் ஒன்றான ஹங்கேரியின் வரலாறு, கழுதை தேய்ந்து கட்டெறும்பான கதைக்கு ஒப்பாக இருக்கிறது. மத்திய ஐரோப்பாவில் இன்று ஒரு சிறிய நாடாகக் காட்சி அளிக்கும் ஹங்கேரி, ஒரு காலத்தில் ஆஸ்திரிய—ஹங்கேரி சாம்ராஜ்யமாக விளங்கியது. மேற்படி சாம்ராஜ்யம் தற்போதுள்ள ஹங்கேரியைப் போல் மூன்று மடங்கு பெரிதாக இருந்தது.

முதலாவது உலக மகா யுத்தத்துக்குப் பின் ஆஸ்திரிய-ஹங்கேரி சாம்ராஜ்யம் ஆஸ்திரியா என்றும் ஹங்கேரி என்றும் இரு நாடுகளாகப் பிரிக்கப்பட்டு விட்டது. ஹங்கேரிக்குச் சொந்தமான பல பிரதேசங்கள் செக்கோஸ்லவேகியா, யூகோஸ்லேவியா, ருமேனியா முதலிய நாடுகளுக்குச் சொந்தமாயின. ஹங்கேரிக்குச் சொந்தமாக இருந்த பியூம் என்ற ஒரே ஒரு துறைமுகத்தைக் கூட அது பறி கொடுக்கும்படி நேர்ந்தது.

சென்ற மகா யுத்தத்தின் ஆரம்பத்தில் ஹங்கேரி ஜெர்மனியின் பக்கம் சேர்ந்து கொண்டது. அதற்கு வெகுமதியாக ஹங்கேரிக்கு ருமேனியா, செக்கோஸ்லவேகியா, யூகோஸ்லேவியா முதலிய நாடுகளைச் சேர்ந்த பிரதேசங்கள் கிடைத்தன. ஆனால், யுத்தத்தின் முடிவில் ஜெர்மனி தோல்வியுற்றதால், ஹங்கேரியின் உருவம் மறுபடியும் முன் போல் சுருங்கி விட்டது.

* * *

ஒன்பதாம் நூற்றாண்டில், அதாவது சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் மாக்யார் என்ற ஒருவகை ஜாதியார், இப்போது ஹங்கேரி என்று வழங்கும் தேசத்தில் குடியேறி ஸ்தாபித்தனர். அக் காலத்தில் அவர்கள் நாகரிகமற்ற காட்டுமிராண்டிகளாக வாழ்ந்து வந்தார்கள் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

அவர்கள் பிறகு மத்திய டனூபப் பிரதேசத்தில் இருந்த ஸ்லேவியர்களை ஜெயித்ததுடன், ஜெர்மன் சாம்ராஜ்யத்தின் மீதும் படையெடுத்தார்கள்.

அதன் பின்னர்தான் அவர்களிடையே சிறிது சிறிதாக நாகரிக வாழ்க்கை பரவத் தொடங்கியது. அதிலிருந்து அவர்கள் கிறிஸ்துவ மதத்தைப் பின்பற்றத் தொடங்கினார்கள். கிறிஸ்துவ சகாப்தம் 1001-ம் வருஷத்தில் முடி சூட்டப்பட்ட அவர்களுடைய மன்னரான ஸ்டீபன் காலத்தில் அவர்கள் லத்தீன்-ஜெர்மன் கலாச்சார முறைகளை அனுஷ்டிக்க ஆரம்பித்தார்கள்.

1458-ல் மன்னராகப் பட்டத்துக்கு வந்த முதலாவது மாத்தியாஸ் காலத்தில் ஹங்கேரி மிகுந்த செல்வாக்குடன் ஒரு வல்லரசாகத் திகழ்ந்தது. 1490-ல் அவர் காலமான பின் பல ஆண்டுகள் வரையில் ஹங்கேரியை அராஜகமும் கலகங்களும் ஆட்கொண்டு அல்லல்படுத்தி வந்தன.

மேற்படி குழப்பமான நிலைமையைப் பயன்படுத்திக் கொள்ள விரும்பிய துருக்கியர்கள் ஹங்கேரிமீது படையெடுத்து வந்தார்கள்.

1526-ம் வருஷம் நடந்த போரில் ஹங்கேரியர்கள் தோல்வியடைந்தனர். அந்த யுத்தத்தில் ஹங்கேரி மன்னர்கள் உட்பட இருபதினாயிரம் வீரர்கள் பலியானார்கள்.

துருக்கியர்கள் ஆக்கிரமித்துக் கொள்ளாத, ஹங்கேரிக்குச் சொந்தமான பிரதேசங்களை ஆஸ்திரிய ஹாப்ஸ்பர்க் ராஜ குடும்பத்தினர் ஆக்கிரமித்துக் கொண்டார்கள். பல ஆண்டுகளுக்குப் பிறகு ஆஸ்திரியர்களின் உதவியால் தான் ஹங்கேரியிலிருந்து துருக்கியர்களை விரட்டுவது சாத்தியமாயிற்று.

அப்போது ஹங்கேரியர்கள் ஹாப்ஸ்பர்க் ராஜ குடும்பத்தினரைத் தங்களுடைய மன்னர்களாக அங்கீகரிக்க நேர்ந்தது. எனினும், ஹங்கேரியர்கள் தங்களுடைய சுதந்திரத்துக்காகக் கிளர்ச்சி செய்வதை நிறுத்தவில்லை.

ஹங்கேரியில் 1848-ல் ஒரு பெரும் புரட்சி உண்டாயிற்று. ஆனால் மேற்படி புரட்சியை அடக்க ருஷ்யச் சக்கரவர்த்தி ஆஸ்திரியாவுக்கு உதவி புரிந்தார். எனினும் 1866-ல் ப்ரஷ்யாவிடம் ஆஸ்திரியா தோல்வியுற்ற போது, ஹங்கேரி அன்னியரின் ஆதிக்கத்திலிருந்து மீண்டும் சுதந்திரம் பெற்றது.

1867-ல் ஏற்பட்ட ஒப்பந்தத்தின்படி ஆஸ்திரியா-ஹங்கேரி ஒரே சக்கரவர்த்தியின் கீழ் இருக்க வேண்டும் என்று முடிவாயிற்று. அதன்படி பிரான்ஸிஸ் ஜோசப் ஹங்கேரி மன்னராக முடிசூட்டப்பட்டார். ஹங்கேரிக்குத் தனியாகப் பார்லிமெண்டு இருந்த



தெனினும், வெளி நாட்டு விஷயங்களை யொட்டி மாத்திரம் ஆஸ்திரியா, ஹங்கேரி இரு நாடுகளும் சேர்ந்தேமுடிவுசெய்தன.

சக்கரவர்த்தி பிரான்சிஸ் ஜோசபின் ஆட்சிக் காலத்திலே ஹங்கேரியில் எத்தகைய குழப்பம் நிலவியது என்பதைக் கீழ்க்கண்ட சம்பவங்களிலிருந்து நன்றாகத்தெரிந்து கொள்ளலாம்.



ருமேனியப் பெண்மணி

ஹங்கேரி ஜெர்மனியுடன் உறவு கொள்ள வேண்டும் என்று பிரான்சிஸ் ஜோசப் தீர்மானித்த போது, ஹங்கேரி மக்களில் ஒரு சாரார் அதைக் கடுமையாக எதிர்த்தனர். மற்றொரு சாராரோவெனில் ஹங்கேரியர்களிடமிருந்து விடுதலை பெற வேண்டும் என்று கிளர்ச்சி செய்தனர்.

ஆஸ்திரிய - ஹங்கேரி சக்கரவர்த்தியின் பட்டத்துக்கு உரிய ஏக புதல்வன் 1889-ல் தற்கொலை செய்து கொண்டான். சக்கரவர்த்தினி எலிஸபெத் இத்தாலிப் புரட்சிக்காரன் ஒருவனால் கொலையுண்டார். மேற்படி சக்கரவர்த்தியின் மருகரான ஆர்ச் டியூக் பிரான்சிஸ் பர்டினண்ட் சரஜீவோ என்ற இடத்தில் ஒரு செர்பியனால் கொல்லப்பட்டார். முதலாவது உலக மகா யுத்தம் ஆரம்பமாவதற்கு மேற்படி சம்பவம்தான் காரணமாக அமைந்தது.

1916-ல் பிரான்சிஸ் ஜோசப் காலமான பிறகு அவரது மருகரான முதலாவது சார்லஸ் ஆஸ்திரிய - ஹங்கேரி சக்கரவர்த்தியானார். எனினும் முதலாவது மகா யுத்தத்தில் ஹங்கேரி தோல்வியுற்றதால், அவர் ஸ்விட்ஜர்லாந்தில் அடைக்கலம் புக நேர்ந்தது.

முதலாவது உலக மகா யுத்தத்துக்குப் பிறகு ஹங்கேரிப் புரட்சிக் கட்சியினர் சர்க்காரைக் கைப்பற்றினர்; ஹங்கேரியைக் குடியரசாகப் பிரகடனம் செய்தனர். எனினும் அன்னிய நாடுகளின் தலையீடு காரணமாக ஹங்கேரி மறுபடியும் முடியரசு ஆயிற்று.

* * *

ஜெர்மனியில் உருவான ஹிட்லரின் ஆட்சி ஹங்கேரியிலும் பல மாறுதல்கள் ஏற்படுவதற்குக் காரணமாக இருந்தது. ஹங்கேரி இழந்த பிரதேசங்களை அந்த நாடு மீண்டும் பெற வேண்டும் என்பது ஹிட்லர் திட்டத்தின் அம்சங்களில் ஒன்றாகும்.

அதற்கு இணங்க, ஹிட்லர் செக்கோஸ்லவேகியாவைக் கைப்பற்றியவுடன், இப்போது ருஷ்யாவுக்குச் சொந்தமாக உள்ள யுக்ரேன் பிரதேசத்தில் ஒரு பகுதியை ஹங்கேரிக்குக் கொடுத்தார். மற்றும் தெற்கு செக்கோஸ்லவேகியாவைச் சேர்ந்த எண்ணூறு சதுரமைல் பரப்புள்ள பிரதேசமும், திரான்சில்வேனியாவில் பாதியும் ஹங்கேரிக்குக் கிடைத்தன. திரான்சில்வேனியாப் பகுதி முதலாவது மகாயுத்தத்துக்குப் பிறகு ருமேனியா கைப்பற்றிக் கொண்ட பிரதேசமாகும்.

1941-ல் ஜெர்மனி ருஷ்யாமீது படையெடுத்தபோது, ஹங்கேரி ஜெர்மனியின் பக்கம் சேர்ந்து கொண்டது. யுத்தம் ஜெர்மனிக்கு விரோதமாக மாறியபின் ருஷ்யா ஹங்கேரிமீது படை யெடுத்தது.

ருஷ்யத் துருப்புக்கள் ஹங்கேரியை ஆக்கிரமித்துக் கொண்டதும் அங்கு தாற்காலிக சர்க்கார் ஒன்று அமைக்கப்பட்டது. ஐக்கிய நாடுகள்-ஹங்கேரி சமாதான ஒப்பந்தமும் கையெழுத்தாயிற்று.

அந்த ஒப்பந்தத்தின்படி ஹங்கேரி, 1938-ம் வருஷத்திலிருந்து தான் பெற்ற பிரதேசங்களையெல்லாம் விட்டுக் கொடுக்க இசைந்தது; நேசதேசங்களுக்கு நஷ்டஈடு கொடுக்க ஒத்துக்கொண்டது; நாஜியர்களை எதிர்த்துப் போராடுவதற்குத் துருப்புகளை அனுப்பவும் முன்வந்தது.



தெருவில் பாத்திரம் விற்கும் ருமேனியர்

1945-ல் நடந்த தேர்தல்களின் பலனாக ஏற்பட்ட ஹங்கேரி பார்லிமெண்டு, மூன்றாவது தடவையாக ஹங்கேரியைக் குடியரசாகப் பிரகடனம் செய்தது.

அதிலிருந்து அந்த நாட்டில் கம்யூனிஸ்டு சர்வாதிகார ஆட்சி உருவாகத் தொடங்கியது. நாளடைவில் ஹங்கேரியின் அரசியல், இராணுவ, பொருளாதாரத் துறைகளில் ருஷ்யாவின் ஆதிக்கம் வலுவடைந்தது.




"நீங்கள் கட்டாயம் கல்யாணத்திற்கு வர வேண்டும். இல்லாவிட்டால் எங்களுக்கு மனசுக்குக் கஷ்டமாக இருக்கும்" என்று அழைத்தாள் அமுதவல்லி.

காமகோடி அம்மாள் ஒன்றும் பதில் சொல்லாமல் சிரித்தாள். "இப்படியே சிரித்து மழுப்பி விட்டுப் பிறகு பெரியம்மா வராமலே இருந்து விடுவார்கள்!" என்று அமுதவல்லியின் மூத்த மகள் செல்லம் குறை கூறினாள்.

"அப்படியெல்லாம் செய்யக் கூடாது. உங்கள் குழந்தைக்குக் கல்யாணமென்றால் நீங்கள் வந்து ஆசீர்வாதம் செய்ய வேண்டாமா!" என்று அமுதம் மீண்டும் வற்புறுத்தி அழைத்தாள்.

"என்றைக்குக் கல்யாணம்!" என்று மறுபடியும் கேட்டாள் காமகோடி அம்மாள்.

"என்ன, பெரியம்மா! இதோடு மூன்று தடவை சொல்லி விட்டோம். நாங்கள் இங்கு இருக்கும்போதே அதற்குள் மறந்து விட்டீர்களே!" என்று சற்றுக் குறைப்பட்ட பாவனையில் கூறிச் சிரித்தாள் செல்லம்.

"அதற்குக் காரணம் இருக்கிறது. கல்யாணத்தன்று என்ன நட்சத்திரம் என்று சொன்னாய்!" என்று கேட்டாள் காமகோடி அம்மாள்.

"ஹஸ்த நட்சத்திரம்!" என்றாள் செல்லம்.

"என்னவோ நாம் ஒருவருக்கொருவர் இத்தனை வருஷம் அக்கா தங்கை போல பழகிவிட்டு, நீங்கள் ஒவ்வொரு கல்யாணத்தன்றும் வராமல் இருப்பது கேட்போருக்கே பதில் சொல்ல முடிவதில்லை. இந்தப் பெண்தானே என் கடைக்குட்டி! இதன் கல்யாணத்திற்கும் நீங்கள் வராமல் இருக்கலாமா!"

"வருகிறேன்!"

"என்ன பெரியம்மா, ஏதோ காரணம் இருக்கிறது என்றீர்களே!"

"அதுவா!" என்று கேட்டுவிட்டுச் சிரித்தாள் காமகோடி அம்மாள்.

"பரவாயில்லை, சொல்லுங்களேன்!' நாங்களும் சிரிக்கிறோம்!" என்றாள் செல்லம்.

"என் கல்யாணமும் இதேபோல் வைகாசி மாதம் பதினெட்டாம் தேதி ஞாயிற்றுக்கிழமை ஹஸ்த நட்சத்திரத்தில் நடந்தது. அதுதான் சிரித்துக் கொண்டேன்!" என்றாள் காமகோடி மிக்க சங்கோஜத்துடன், அதைக் கூற விரும்பாதவள்போல. வந்தவர்கள் போய்விட்டார்கள். காமகோடி சமையலறைக்குள் புகுந்தாள்.

அப்பொழுது காமகோடியின் இரண்டாவது பெண் ஜயா குளித்து விட்டு மாற்றுப் புடவையைக் கட்டிக் கொள்ளாமல் மேலாகச் சுற்றிக் கொண்டு அதன் தலைப்பினால் செவிகளில் படிந்த ஈரத்தைத் துடைத்தவாறே அங்கே வந்தாள்.

"அம்மா, காப்பி இருக்குமா!" என்று கேட்டுக் கொண்டே அம்மாவுக்கு அருகில் 'அப்பாடா' என்று உட்கார்ந்தாள்.

"காப்பி எதற்கு இப்பொழுது! சமையலே ஆகிவிட்டது" என்றாள் காமகோடி. அவள் கண்கள் பெண்ணைக் கனிவோடு பார்த்தன.

"போம்மா! இப்பொழுது என்னால் உட்கார்ந்து சாப்பிட முடியாது. காப்பி இருந்தால் கொடு. சற்று நேரம் படுத்துக்கொண்டு இருந்து விட்டுப் பிறகு சாப்பிட வருகிறேன்" என்றாள் ஜயா பிடிவாதமாக.

"வயசு பதினெட்டு ஆகிறது. இன்னமும் கொஞ்சுகிறாய்! பின்னைத்தாச்சிப் பெண் வேளை கெட்டு வேளை சாப்பிட்டால் எப்படி!" என்று கடிந்து கொண்டு காப்பியை டம்ளரில் விட்டு அவளிடம் கொடுத்து விட்டு, சமையல் வேலையைக் கவனிக்கலானாள்.

"அம்மா, அவர் கடிதம் போட்டிருக்கிறார்!" என்று கூறிக்கொண்டே மூத்த பெண் விஜயா அங்கே வந்தாள்.

"என்ன போட்டிருக்கிறார்!" என்று கேட்டுக் கொண்டே தன் காரியத்தைக் கவனித்தாள் காமகோடி.

"நம் ரவிக்குப் பிறந்த நாள் வருகிறதே, அதைத்தான் எழுதி யிருக்கிறார். எங்கள் மைத்துனர், நாத்தனார் எல்லோரும் வருகிறார்களாம்!" என்று பெருமையோடு கூறிவிட்டுத் தன் அன்னையை ஆவலுடன் பார்த்தாள் விஜயா.

வெண்கலக் கரண்டி ஒன்றினால் நெய்யை எடுத்துப் பாகில் விட்டுக்கொண்டு, அதைக் கிளறுவதில்

கவனமாக இருந்தாள் காமகோடி அம்மாள். மைசூர்ப்பாகை இறக்கித் தாம்பாளத்தில் விட்டுக் கொண்டே தனக்குள் சிரிப்பதும் சிந்திப்பதுமாக இருந்தாள் அவள்.

பிறகு சிறிது நேரத்துக்கெல்லாம் அவள் எழுந்து போய்ப் பட்டைக் கத்தியை எடுத்துக் கொண்டு வந்து மைசூர்ப் பாகைக் கீறு போட ஆரம்பித்தாள்.

"அம்மா, ஆரணிப் புடவைக்காரன் வந்திருக்கிறான்" என்று கூறிக்கொண்டே ஜயா வந்தாள்.

"இப்பொழுது எதற்கம்மா! வேண்டாம் என்று சொல்" என்றாள் காமகோடி.

"இந்த அம்மா கண்ணால் கூடப் பார்க்க விட மாட்டாள்" என்று இரு பெண்களும் ஏக காலத்தில் கூறிக்கொண்டு வாசல் பக்கம் நடந்தனர்.

"அதற்கென்ன, அம்மா! பாருங்களேன்!" என்று சொல்லிக்கொண்டே புடவைக்காரன் மூட்டையைப் பிரித்தான்.

காமகோடியும் அங்கு வந்தாள். விதவிதமான புடவைகளின் நிறங்களும் கரைகளும் ரகங்களும் கண்ணைக் கவர்ந்தன. இரு பெண்களும் ஒவ்வொரு புடவையையும் தொட்டுப் பார்த்து ஏதோ பேசினர். காமகோடி ஏதோ சிந்தனையில் புடவைகளைக் கண்ணுற்றாள்.

"இந்த மல்லிகை மொட்டுப் புடவை என்ன விலை!" என்று கேட்டுவிட்டு அடியிலிருந்த ஒரு புடவையைச் சுட்டிக் காட்டினாள் காமகோடி.

புடவையைப் பிரித்துப் போட்டான் புடவைக் காரன். தன்னையும் மீறி ஒரு பெருமூச்சு வெளி வருவதை வியப்புடன் உணர்ந்தாள் காமகோடி.

"எதற்குப் பிரிக்கிறாய்! நான் எங்கே இப்போது வாங்கப் போகிறேன்!" என்று தடுத்தாள் காமகோடி.

"சும்மா பாருங்களேன்!" என்றான் புடவைக்காரன். அப்பொழுது வெளியிலிருந்து வந்தார் வீட்டின் எஜமானர். காமகோடி நிமிர்ந்து நின்றாள்.

"என்ன, புடவை வாங்கப் போகிறாயா! இப்பொழுது எதற்குப் புடவை! இந்த மாதம் இன்ஷ்யூரன்ஸ் வேறு கட்டவேண்டும். உனக்கு வேறு வேலையே கிடையாதா!" என்று அவர் கோபமாகக் கூறிவிட்டுப் பின் பக்கம் சென்றார்.

"விஜயா, ஓடிப் போய்க் கொல்லைப் பக்கத்தில் அப்பாவுக்குத் தண்ணீர் இருக்கிறதா பார், அம்மா!" என்று கூறிப் பெண்ணை அனுப்பினாள் காமகோடி.

விஜயா தன் கையில் வைத்துக் கொண்டிருந்த வெங்காயக் கலர்ப் புடவையை வேண்டா வெறுப்பாக வைத்து விட்டு மெள்ள எழுந்து சென்றாள்.

"அப்பா ஏன் இப்படி இரைகிறார்!" என்று கேட்டாள் ஜயா.

"நான் தினமும் புடவை வாங்கிக் கட்டிக் கொள்கிறேனே என்று கோபிக்கிறார்!" என்று கூறிவிட்டுச் சிரித்தாள் காமகோடி அம்மாள்.

"அப்படித்தான் இருக்கிறது!" என்றாள் ஜயா.

காமகோடி மறுபடியும் இடுப்பை வளைத்துக் குனிந்து ஒரு முறை மூட்டையைப் பார்த்துவிட்டு, "இந்த வெங்காயக் கலர்ப் புடவையை மட்டும் வைத்து விட்டுப் போ, பார்ப்போம்!" என்றாள்.

"இந்த மல்லிகை மொட்டுப் புடவையும் இருக்கட்டும், அம்மா!" என்றான் புடவைக்காரன்.

"வேண்டாம், வேண்டாம்!" என்றாள் காமகோடி கொஞ்சம் தயங்கியபடியே.

"சும்மா எடுத்து வையுங்கள், அம்மா! இந்தப் பத்து வருஷங்களாக நானும் புடவை கொடுக்கிறேன். உங்களுக்கென்று நீங்கள் ஒரு புடவை கூட வாங்கி உடுத்தவில்லை. நீங்களும் அரக்கில் மஞ்சள் மல்லிகை மொட்டுப் புடவை என்று கேட்டுக்கொண்டே இருக்கிறீர்கள்!" என்றான் புடவைக்காரன்.

'ஜயா, இரண்டு புடவைகளையும் எடுத்து ஜாக்கிரதையாகப் பீரோவில் வை. அப்பாவுக்கு மத்தியானத்துக்கு மேலே காட்டிக் கொள்ளலாம்" என்று கூறிவிட்டுக் காமகோடி மீண்டும் சமையலறைக்குள் சென்று விட்டாள்.

* * *

சேகர் அவசர அவசரமாக உள்ளே வந்தான். சட்டையைக் கழற்றிக் கூடத்தில் மாட்டிவிட்டுத்



தாழ்வாரத்தில் ஆணியில் மாட்டியிருந்த தன் தாலத்தை எடுத்துக் கொண்டே சமையலறைக்குள் போனான்.

"அம்மா, எனக்குச் சீக்கிரம் சாதம் போடு" என்றான் அவன்.

அவனுக்குப் பரிமாறிக் கொண்டே காமகோடி அவனிடம் பேச்சுக் கொடுத்தாள்.

"சேகர், இந்த மாசம் ஒரு ஐம்பது ரூபாய் கொடுக்க முடியுமாடா!" என்று கேட்டாள் அவன் தாயார்.

"என்ன, அம்மா! இந்த மாசமுமா!" என்று கேட்டான் சேகர் வாயண்டை கொண்டு போன கவளத்தை அப்படியே நிறுத்திக் கொண்டு.

"ஆமாமடா! இந்த மாசம்தான் முடையாக வேண்டியிருக்கிறது!"

"போ, அம்மா! போன மாசத்தோடு ஆறு மாதமாக நிதிக் கடனுக்குக் கட்டி முடித்து விட்டேன். இந்த மாசம்தான் நான் எனக்காக எடுத்துக் கொள்ளலாம் என்று பார்த்தேன். எங்கள் ஆபீசில் எல்லோரும் உல்லாசப் பிரயாணம் போகிறார்களாம். நானும் பெயர் கொடுத்து விட்டேன்!" என்றான் சேகர் ஏமாற்றமும் நிராசையுமானதொரு குரலில்.

"சரி, நீ போ. நான் பார்த்துக் கொள்கிறேன்."

"கோபமா, அம்மா!"



"போடா, அசடு! உன்னை நானாகப் பணம் கொடுத்து அனுப்ப முடியவில்லையே என்று எத்தனையோ நாள் தவித்திருக்கிறேன். நீயாகச் சம்பாதித்ததை ஒரு நாளாவது அனுபவிக்க வேண்டாமா! நாளைக்கே கல்யாணமென்று ஆகிவிட்டால் சம்சார பாரம் தலையில் அழுத்தப் போகிறது" என்று சமாதானம் கூறினாள் காமகோடி அம்மாள்.

எப்பொழுதுமே இப்படித்தான். கைக்கு எட்டும் போது மறைந்து விடுவது அவள் கண்ட சகஜமான அனுபவமாக இருந்தது!

'அமுதவல்லி பெண் கல்யாணத்துக்குப் போகா விட்டால் அவள் நிஷ்டூரம் வேறு படுகிறாள்!' என்று நினைத்தாள் காமகோடி.

அமுதவல்லியும் காமகோடியும் சிறு வயதிலிருந்து ஒன்றாகப் பழகியவர்கள். இன்றுவரை இருவருக்குமிடையே அந்த நட்பு இருந்துகொண்டு வந்தது. அமுதவல்லியும் காமகோடியைப் போல பெரிய குடும்பிதான். ஆனால் அவளுக்குக் காமகோடியைப் போலப் பணமுடை என்ற விஷயத்தில் பரிச்சயமே இருக்கவில்லை. அமுதவல்லியின் பெண்களின் கல்யாணங்களும், பிள்ளைகளின் திருமணங்களும், ஏன் சின்னச் சின்ன பிரமேயங்கள் கூடப் படாடோபமாக நடக்கும். காமகோடியை அழைப்பாள் அமுதவல்லி. காமகோடி முன்னால் போய் ஏற்பாடுகளைப் பார்த்துவிட்டு வருவாள். ஆனால் விசேஷ தினத்தன்று ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லிவிட்டு, தன் கணவரையும் குழந்தைகளையும் அனுப்பி விட்டு நின்றுவிடுவாள். அதன் காரணமோ ரகசியமோ அமுதவல்லி என்ன அறிவாள்!

காமகோடிக்கு இருப்பதெல்லாம் இரண்டே இரண்டு பட்டுப் புடவைகள்தாம். அவையும் அவள் பிறந்தகத்தில் சேகரின் பூணூலுக்காகவும் விஜயாவின் கல்யாணத்திற்காகவும் வாங்கி அளித்தவை. அவைகளும் எத்தனை நாட்கள்தான் புதியவையாக இருக்கும்! மெருகு போய்ச் சற்று பழையவையாகவே இருந்தன. அதை உடுத்திக் கொண்டு போய்விட்டு வந்து விடுவாள் காமகோடி. ஆனால் அமுதவல்லிக்குக் குறையாக இருக்கும். சாதாரண நாட்களில் நூல் புடவை உடுத்திக் கொண்டு போனாலே அவள் குறை கூறுவாள்.

"எனக்குப் பட்டுப் புடவை கட்டினால் திணறுகிறது. அதனால்தான் நூல் புடவை உடுத்துகிறேன்" என்று கூறித் தட்டிக் கழிப்பாள் காமகோடி அம்மாள்.

"இந்தத் தடவை கட்டிக் கொள்ள நூல் புடவை வாங்கும்போது நல்ல நூலும் நம்பரில், கரையில் சரிகை போட்டதாக வாங்கிக் கொள்ள வேண்டும். பார்ப்பதற்கும் நன்றாக இருக்கும். பட்டுப் புடவையை விட மலிவாக முடியும்" என்று எத்தனை தடவை நினைத்திருக்கிறாள் காமகோடி! வாங்கும் சமயம் வரும்போது சேகருக்குப் பள்ளிக்கூடத்திற்குப் பணம் கட்ட வேண்டி வரும், அவள் நாத்தனார் வீட்டில் கல்யாணம் வரும், தமையன் வீட்டிலிருந்து அழைப்பு வரும், விருந்தாளிகள் வருவார்கள், பெண்களுக்கு வரன் தேட ரயிலுக்குப் பணம் வேண்டும் — இப்படியாக ஒவ்வொரு தடவையும் ஏதாவது ஒரு முடை வரும். கடைசியில் வாலாயமாகக் கடன் கொடுத்துக் கொஞ்சம் கொஞ்சமாகப் பணம் வாங்கிக் கொள்ளச் சம்மதிக்கும் கடையில் போய், தேவைக்கு வேண்டிய இரு உடை தானும் புடவைகள் வாங்கிக் கொண்டு வருவார்கள்.

பிறகு சேகர் படிப்பு முடிந்தது. அவன் வேலையிலும் அமர்ந்தான். விலைவாசிகள் ஏறின. பெண்களுக்கு விவாகமாயிற்று. சற்று சிரமப்பட்டு இரு பெண்களையும் பசையுள்ள இடத்தில் பார்த்துக் கொடுத்து விட்டார்கள். அதனால் அவ்வப்போது அவர்களை அழைத்து வந்தாலும் மாப்பிள்ளை வந்தாலும், சம்பந்தி வந்தாலும் சற்றுப் பகட்டாகவே செய்ய வேண்டி வந்தது. அவர்கள் இருக்கும் இரண்டு மூன்று நாட்களும் தன் இரு பட்டுப் புடவைகளையே கட்டிக் கழித்து விடுவாள். அவர்கள் போன பிறகு மீண்டும் பீரோவுக்குப் போகும் அவை.

காமகோடி சிந்தனையைத் தடைத்து எறிந்து விட்டு எல்லோருக்கும் இலை போடலானாள். விஜயாவும் கூடமாட வந்தாள்.

"அம்மா, குழந்தைக்கு வெள்ளித் தட்டு ஒன்றும், தங்கத்தில் ஏதாவது ஒரு நகையும் செய்து விடுவாயல்லவா! அவர்கள் எல்லாரும் வந்தால்...எனக்கு வேண்டுமானால் ஒன்றும் வாங்க வேண்டாம். ரவிக்கை மட்டும் வை, போதும்" என்றாள் விஜயா அந்தரங்கமாக.

"அப்பா ஒன்றும் குறைவு வைக்க மாட்டார். பேசாமலிருடி" என்றாள் காமகோடி. ஆனால் தங்கத்திற்கு எங்கே போவது என்றுதான் அவள் மனம் யோசித்தது. சேகரின் பூணூலுக்காக அவனுக்குப் போட்ட மோதிரம் நினைவுக்கு வந்தது.

'ஹூம்! அவனைத்தான் உபத்திரவப் படுத்த வேண்டி வருகிறது. ஆனால் என்ன அப்போ! நாளைக்கே கல்யாணம் பண்ணினால் பெண் வீட்டார் எல்லாம் போடுவார்கள்,' என்று அவள் தனக்குள்ளேயே ஆட்சேபணை, சமாதானங்கள் செய்து கொண்டாள்.

"ஜயா, சாப்பிட்டாயிற்று!" என்று கேட்டுக் கொண்டே வந்தார் தகப்பனார். ஜயாவும் எழுந்து வந்து உட்கார்ந்து கொண்டான்,

"ஏனடி, உன் பிள்ளை எங்கே!" என்று அவர் கேட்டார்.

"என் பிள்ளைதானே! அவன் ஆபீசுக்குப் போயிருக்கிறான். நீங்கள் உங்கள் பெண்களை அழைத்து வைத்துக் கொண்டு சாப்பிடுங்கள்" என்றாள் காமகோடி சிரித்துக் கொண்டே.

"அப்பா, அமுதவல்லி சித்தியின் பெண் விமலாவுக்குக் கல்யாணமாம் நாளைக்கு. வந்து வருந்தி வருந்தி எல்லோரையும் அழைத்து விட்டுப் போனார்கள்" என்றாள் ஜயா.

"நீ போகப் போகிறாயா!" என்று கேட்டார் வைத்தியநாதன், தன் மனைவியைப் பார்த்து.

"எப்பொழுதும் போல நீங்கள் சேகரையும் விஜயாவையும் அழைத்துக் கொண்டு போகலாமே என்று நினைத்தேன். அமுதவல்லி என்னை விட மாட்டாள் போல் இருக்கிறது" என்று பதிலளித்தாள் காமகோடி அம்மாள்.

'அவர் போனால் வண்ணான் வெள்ளையிலிருந்து ஒரு சட்டையும் வேஷ்டியும் அங்கவஸ்திரமும் இருந்தால் போதும். பெண் குழந்தைகளுக்கு ஏதோ பளிச்சென்று இருக்கிறது' என்று காமகோடியின் மனம் கணக்கிட்டது.

இலையில் விழுந்த மைசூர்ப் பாகைக் கையில் எடுத்துக் கொண்டார் வைத்தியநாதன்.

"அமுதவல்லி வீட்டில் கல்யாணம் என்றால் இங்கே கொண்டாட்டமா! புத்தியில்லாத மனைவியை வைத்துக் கொண்டு குடித்தனம் செய்வதை விட......" என்று இரைய ஆரம்பித்தார் அவர்.

"என்ன, அப்பா! எதற்கெடுத்தாலும் கத்துகிறீர்களே! ஜயத்திற்குப் பிடிக்குமே என்று அம்மா செய்தாள். ஜயா இன்றைக்கோ நாளைக்கோ பெற்று விடுவாளே......!" என்றாள் விஜயா தன் தகப்பனாரிடம்.

வைத்தியநாதன் தம்முடைய அவசர குணத்திற்கு வெட்கினார். தலைச்சன் பிரசவத்திற்காக வந்திருக்கும் தன் பெண் ஜயாவை வாத்சல்யத்துடன் பார்த்தார்.

"அப்பொழுதே சொல்வதுதானே! இருந்தாலும் உங்கள் அம்மாவைக் கண்டித்துக் கொண்டு இருக்காவிட்டால் அவள் குடித்தனம்......"

"ஆமாம்!" என்று சலுகையுடன் கூறிவிட்டுக் காமகோடி அவர்களுக்கு மோரை விட்டு விட்டுக் கூடத்திற்குச் சென்று உட்கார்ந்தாள்.

தகப்பனாரும் பெண்களும் உணவு முடிந்து அங்கே வந்தனர். வைத்தியநாதன் ஊஞ்சலில் உட்கார்ந்தார். இரு பெண்களும் அவருக்கு இரு புறமும் அமர்ந்தனர்.

"ரவி எங்கே! தூங்குகிறானா!" என்று கேட்டார் வைத்தியநாதன்.

"ஆமாம். அவனுக்குப் பிறந்த நாள் கல்யாணமாம். அவனுடைய அப்பாவிடமிருந்து இன்றைக்குக் கடிதம் வந்திருக்கிறது. அடி, விஜயா புடவையைக் கொண்டு வந்து காண்பி" என்று கூறி இடுப்பிலிருந்து சாவிக் கொத்தை எடுத்து மகளிடம் கொடுத்தாள் காமகோடி.

ஜயா எழுந்துபோய் இரண்டு புடவைகளையும் கொண்டு வந்தாள்.

"வெங்காயக் கலர்ப் புடவையை எழுபது ரூபாய்க்குக் கொடுப்பான். நாளைக்கு விஜயா மணையில் உட்கார்ந்தால்......"

"உம். இன்னொரு புடவை யாருக்கு!" என்று கேட்டார் வைத்தியநாதன்.

"புடவைக்காரன் வைத்து விட்டுப் போயிருக்கான்" என்றாள் காமகோடி.

"ஆமாம். வைத்துவிட்டுப் போவான்! நீ..." என்று அவர் ஆரம்பிப்பதற்குள் காமகோடி எழுந்து சமையலறைக்குள் போனாள்.

* * *

மறு நாள் காலை எழுந்தவுடனே அடுத்தத் தெருவில் அமுதவல்லியின் வீட்டுக் கல்யாணத்தின் மேளச் சத்தம் கேட்டது.

சேகரும் விஜயாவும் முதலிலேயே போய்விட்டனர். காமகோடி ஏதோ வேலை செய்தபடி மௌனம் சாதித்தாள்.

"நீ போகவில்லையா! நீ போயேன். நான் ஜயாவுக்குத் துணை இருக்கிறேன்" என்றார் வைத்தியநாதன்.

வாசலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. அமுதவல்லியின் மூத்த மருமகள் சரோஜாவும், செல்லமும் இறங்கி வந்தனர்.

"பெரியம்மா, கடைசியில் ஏமாற்றி விட்டீர்களே! அம்மா உங்களைக் கையோடு அழைத்து வரச் சொன்னாள்," என்றார்கள் அவர்கள்.

"நான் புறப்பட்டுக் கொண்டேதான் இருக்கிறேன்," என்றாள் காமகோடி.

வேறு வழியில்லையே என்பதுபோல் அவள் பின்புறம் சென்று முகத்தை அலம்பிப் பொட்டிட்டுக் கொண்டாள். பீரோவைத் திறந்து தன் இரு பட்டுப் புடவைகளில் ஒன்றான நீலப் புடவையை எடுத்துத் தட்டிவிட்டுக் கட்டிக் கொண்டாள் காமகோடி.

வந்த பெண்கள் ஜயாவுடன் பேசிக்கொண்டு நின்றனர். வைத்தியநாதன் உள்ளே வந்தார். மனைவியைக் கண்டார்.

"இதென்னடி வேஷம்! புடவைக்காரன் வைத்துவிட்டுப் போன அரக்குப் புடவையைப் பிரித்துக் கட்டிக் கொண்டு போ" என்றார் அவர்.

"ஜயா பிரசவிக்க வேண்டும், இன்ஷூரன்ஸ் கட்டவேண்டும், சேகருக்கு இந்த மாசம் ஐம்பது ரூபாய் கொடுக்க இயலாதாம். விஜயா பிள்ளைக்கு ஆண்டு நிறைவுச் சீர் செய்யவேண்டும். இப்பொழுது புடவை இல்லாவிட்டால் என்னவாம்!" என்று அவள் மறுத்தாள்.

"சரி, உன் இஷ்டம். சாவிச் சரிகையை உடுத்திக் கொண்டு போய்விட்டு வா. அற்பம்!" என்று சொல்லி விட்டு அவர் போய் விட்டார்.

"பெரியம்மா, நாழிகையாகிறது!" என்று துரிதப்படுத்தினாள் செல்லம்.

புதுப் புடவைக்குக் குங்குமம் தடவிப் பிரித்து உடுத்திக் கொண்டு கிளம்பினாள் காமகோடி. காரில் செல்லும்போதும், கல்யாண வீட்டில் நடமாடும் போதும் அவளுக்குத் தான் ஏதோ செய்யத் தகாத வேலையைச் செய்து விட்டதாகவே தோன்றிக் கொண்டிருந்தது.

அவளைக் கண்டதும் அமுதவல்லி மிக்க சந்தோஷம் கொண்டாள்.

அன்று மாலை காமகோடி வீட்டுக்குத் திரும்பிய போது வைத்தியநாதனும் ஜயாவும் கூடத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர்.

"இன்றைக்குச் சரியாக இருபத்தைந்து வருஷமாகிறது உன் அம்மாவுக்கும் எனக்கும் கல்யாணமாகி. அவள் கூறைப் புடவைகூட அரக்கில் மஞ்சள் மல்லிகை மொட்டுத்தான். நீ வேண்டுமானால் கேட்டுப் பார்" என்றார் அவர்.



"குறைந்த சம்பளத்தில் ஏழு குழந்தைகளுடன் எப்படி ஐயா நீங்கள் அசோகாவுடன் வெற்றிலைப் போட்டுக் கொண்டு சந்தோஷமாக இருக்கிறீர், சொல்லுங்கள்?"

"சந்தோஷத்தை. அசோகா பாக்கும் தாம்பூலமும் வைத்து அழைத்து விடுகிறேன்!"

காமகோடி அப்பொழுது அங்கே வருவதைப் பார்த்து ஜயா எழுந்து தன் தாயாரைத் தொடர்ந்து சமையலறைக்குச் சென்றாள்.

"அம்மா! உங்களுக்கு வெள்ளி விழாவாமே, அம்மா! அப்பாவைப் பாரேன்! உன் கூறைப் புடவையைப் போலவே உனக்குப் புடவை வாங்கியிருக்கிறார். அவரல்லவா மனிதர்!" என்றாள் அவள்.

"ஆமாம், வாங்கினார்! போடி, அசடே, தத்துப் பித்தென்று உளறிக் கொட்டிக் கொண்டு! வா, தலையைப் பின்னிவிட்டு, வயிற்றுக்கு ஏதாவது ஆகாரம் கொடுத்து விட்டுப் போகிறேன். அப்பாவை அவர்கள் கட்டாயம் வரச் சொன்னார்கள்" என்றாள் காமகோடி.

விஜயாவும் சேகரும் வந்தார்கள்.

"அம்மா, கச்சேரி நடந்து கொண்டிருக்கிறது. நாங்கள் சாப்பிட்டு விட்டோம். உன்னையும் அப்பாவையும் வரச் சொன்னார்கள்," என்றான் சேகர்.

ஜயா விஜயாவை அழைத்துக் கொண்டு பின்புறம் சென்றாள் பிறகு இருவருமாக வந்தனர்.

"சேகர், நாம் இரண்டு பேரும் ஜயாவுக்குத் துணை இருப்போம். அப்பாவும், அம்மாவும் போகட்டும்" என்றாள் விஜயா.

பெற்றோர் இருவரும் போனபிறகு மக்கள் மூவரும் கூடிப் பேசினர்.

இரவு ஒன்பது மணிக்குத்தான் காமகோடியும் வைத்தியநாதனும் திரும்பினர். அப்பொழுது சேகர் விஜயா, ஜயா மூவரும் கூடத்தில் உட்கார்ந்து கொண்டு என்னவோ உரக்கக் கத்திக் கொண்டிருந்தனர். பெற்றோர் வரவைக் கண்டு அவர்கள் எழுந்தனர்.

"அப்பா, அம்மா! இப்படி வாருங்கள்," என்று அழைத்தார் சேகர். அவர்கள் இருவரும் கூடத்திற்குப் போகவும் ஊஞ்சலில் ஒரு வெள்ளித் தட்டில் வெள்ளி ரூபாய்களும், ஒரு வெள்ளிக் கிண்ணமும், புதியதொரு குங்குமச் சிமிழும் வைக்கப்பட்டிருந்தன.

"இப்படி ஊஞ்சலில் உட்காருங்கள்" என்று கூறிவிட்டுச் சேகர் அந்தத் தட்டை எடுத்து அப்பாவிடம் நீட்டினான்.

"இதெல்லாம் என்னடா!" என்று அதட்டலாகக் கேட்டார் தந்தை.

"வெள்ளி விழா!" என்றார்கள் மூவரும்.

காமகோடி மோவாயில் கையை வைத்தாள்.

"அம்மா, வெள்ளி விழா என்றால் வெள்ளியில் தான் செய்யவேண்டும். ஒவ்வொரு வருஷத்திற்கு ஒவ்வொரு ரூபாய் என்று வைத்துக் கொடுக்கலாம். இல்லையேல் வெள்ளியால் செய்யலாம். சேகர் உங்கள் இருவருக்குமாக வெள்ளித்தட்டு வாங்கினான். நான் உனக்குக் குங்குமச் சிமிழும், அப்பாவுக்கு இருபத்தைந்து ரூபாயும் கொடுக்கிறேன். விஜயா அப்பாவுக்கு வெள்ளிக் கிண்ணமும், உனக்கு இருபத்தைந்து ரூபாய்க்கு ஒருபொன் காசும் தருகிறாள்" என்று விவரித்தாள் ஜயா.

வைத்தியநாதன் புன்முறுவலுடன் தம் குழந்தைகளை நோக்கினார். காமகோடி சற்றுப் பேசாமலிருந்து விட்டுப் பிறகு ஒவ்வொன்றாய் எடுத்துப் பார்க்கலானாள்.

"என்ன, அம்மா, பார்க்கிறாய்!" என்று கேட்டான் சேகர்.

"என்ன யோசனை, அம்மா!" என்றாள் ஜயா.

"இந்தத் தட்டை ரவிக்குப் பிறந்த நாளுக்குக் கொடுத்து விடுவேன். இந்தக் குங்குமச் சிமிழை அமுதவல்லியின் பெண்ணுக்கு நாளைக்கு ஆசீர்வாதம் பண்ணி விடுவேன். ஜயா பிள்ளை பெற்றுப் போகும்போது வெள்ளிக் கிண்ணத்தை அவளிடம் கொடுத்தனுப்பலாம். ஜயா கொடுத்த

ரூபாயைப் புடவைக்காரனுக்குக் கொடுத்து விட்டால், அடுத்த மாசம் வரை நம்மைக் கேட்க மாட்டான்......'' என்று நிறுத்தினாள் காமகோடி.

''புடவையை ஒன்றும் செய்யப் போவதில்லையா!'' என்று கேட்டார் வைத்தியநாதன்.

''அதுவும்தான் யோசித்தேன். ஒரு தரம் கொஞ்ச நேரம் தானே கட்டிக் கொண்டேன்! இஸ்திரி போட்டு வைத்துவிட்டு ஐயாவைக் கொண்டு விடும்போது கொடுத்து விடலாமே!'' என்று கூறும்போது காமகோடியின் குரல் குதூகலமாக இருந்தது.

''நாங்கள் கொடுத்ததை யெல்லாம் வாங்க மறுத்து விட்டாய். நான் கொடுத்ததை அவனுக்குக் கொடுத்து, அவன் கொடுத்ததை யாருக்கோ கொடுத்து, அவன் கொடுத்ததை அவனுக்குக் கொடுத்து......'' என்ற குற்றப் பத்திரிகை தொடங்கினாள் ஐயா.

காமகோடி அவர்களைப் பார்த்தாள். ''நீங்கள் எல்லாம் தப்பிதமாக நினைத்துக் கொள்ளாதீர்கள். உங்கள் செய்கையே என் மனத்தை நிறைத்து விட்டது. உங்கள் கைச் செலவுக்கு இருந்த ரூபாயைக்கூட எனக்கு வாங்கி விட்டீர்களே! ஆனால் யோசித்துப் பாருங்கள். வெள்ளித் தட்டை வைத்துக் கொண்டு நான் வகையாக வெற்றிலை போட நேரமேது! அதைவிட ரவி அதில் சாப்பிட்டால் எனக்கு எவ்வளவோ திருப்தியாக இருக்கும். நீங்கள் கொடுத்தது அவ்வளவையும் என் மனசுக் கிசைந்தபடி செலவு செய்தேனே! காலைக்குக் கல்யாணப் பெண்ணுக்கு என்ன கொடுப்பது என்று தவித்துக் கொண்டிருந்தேன். அப்பா அவசரப்பட்டுப் புடவையைப் பிரித்துக் கொடுத்தாரே என்று கவலையோடு இருந்தேன். எனக்கு ஒரு கவலையுமில்லாமல் நீங்கள் எல்லாவற்றையும் தீர்த்து விட்டீர்களே! அதுதான் எனக்கு நிறைவு. அதுதான் விழா!''

''சரி அம்மா'' என்றார்கள் மூவரும் தெளிந்த மனத்துடன். அவர்கள் கண்களில் நீர் துளித்தது. ''எது என்ன செய்தாலும் அப்பா வாங்கிய கூறைப் புடவையை மட்டும் யாருக்கும் கொடுக்காதே,'' என்றார்கள் அவர்கள் மீண்டும்.

''ஆகட்டும். அப்படியே செய்தால் போயிற்று!'' என்றாள் காமகோடி.

தாயார் எழுந்து போய் விட்டாள். அவள் கொல்லைக் கதவைத் தாளிட்டுவிட்டு வருகையில் ரேழியில் கணவர் நிற்பதை ஆச்சரியத்தோடு நோக்கினாள்.

''ஏனடீ, காமூ! உனக்குப் புடவை பிடிக்கவில்லையா!'' என்று அவர் கேட்டார்.

காமகோடியின் உடல் புல்லரித்தது. ''பிடிக்காவிட்டால் குழந்தைக்குக் கொடுத்து விடுவேனுக்கும்! தோன்றுகிறதே!'' என்றாள் அவள் தன் உணர்ச்சி வசப்பாட்டை மறைக்க.

''நேராகப் பதில் சொன்னால் உன் ஆஸ்தியெல்லாம் முழுகி விடுமாக்கும்!'' என்றார் கணவர் சிரித்துக் கொண்டே.

காமகோடி அம்மாளின் முகத்திலும் புன்னகை இலேசாக மலர்ந்தது.

# தமிழ்க் களஞ்சியம்

டி. கே. சி.

## 31. நல்லதே செய்தால் வேண்டியவர்களுக்குப் பஞ்சமா?

நீதியிலோ பாட்டிலோ ஒரு நீதியைச் சொல்லி விட்டால் குடி மோசம் போய் விடும் என்பது போல்ச் சிலர் சொல்லுவார்கள். நீதி வாக்கியமாக இருந்து விட்டால் ஆனந்த சிருஷ்டி ஆகாது, உபாத்தியாயர் பிரம்பைக் கையில் வைத்துக் கொண்டு பயமுறுத்துகிற காரியமாய்ப் போய்விடும் என்றெல்லாம் சொல்லுவதுண்டு.

இப்படி சொல்லிக் கொண்டிருப்பதற்குக் காரணம் இருக்கத்தான் செய்கிறது.

எப்போதோ ஒரு ஆசிரியர் யாசகப் பிரவர்த்தியில் இறங்கினார். பையன்களும் பெற்றோர்களும் ஏதாவது கொடுத்துத் தீர வேண்டியது தானே.

''அறஞ்செய விரும்பு'' என்று ஆரம்பித்து விட்டார். ஆத்திசூடி பிறந்து விட்டது. அவ்வைப் பிராட்டியார் மடியிலும் போட்டு விட்டார் ஆத்திசூடியை.

பள்ளிக் கூடத்தில் ஒரே முழக்கம். ஒரு பையன் ''அறஞ் செய விரும்பு'' என்று சொல்ல வேண்டியது. மற்றப் பையன்கள் அவனோடு சேர்ந்து தானம் வைக்க வேண்டியது. பள்ளிக் கூடத்தைச் சுற்றிலும் ஒரே எதிரொலி; ''அறஞ் செய விரும்பு'' ''அறஞ் செய விரும்பு'' தான்.

தானம் வைத்தது போலவே மணலில் எழுத வேண்டியது. ஓலையிலும் எழுத வேண்டியது — தற்காலத்தில் ''இம்பொசிஷன்'' எழுதுவது போல்.

''அறஞ் செய விரும்பு'' பள்ளிக் கூடத்தோடு நின்ற பாடாக இல்லை. பெற்றோர்களையும் பிடித்தது. புலவர்கள், புலவர் சிகாமணிகள் எல்லாரையும் பிடித்துக் கொண்டது.

வானத்துக்கும் பூமிக்குமாக எப்படியெல்லாமோ வியாக்யானங்கள் புறப்பட்டன. வியாக்யானங்களுக்கு இடையே ''அவ்வை வாக்கல்லவா!'',

"அவ்வை வாக்கல்லவா!" என்ற பல்லவி வேறு முழங்கியது.

யாராவது "ஙப்போல் வளை" என்பதின் பொருளை ஆராய்ந்தார்களா? ஆராய்ந்தால் என்ன ஆகும்? "ங"வைப் போல் ஒரு பிராணி வளைந்து மூளைக்குள்க் கிடந்து விடும் என்று பயந்து விட்டார்கள். அதனால் அதை விட்டு விட்டுப் போய் விட்டார்கள்.

அடுத்தாற்போல் வந்தது "சனி நீராடு." மேலே சொன்ன பையன்கள், பெற்றோர்கள், புலவர்கள், புலவர் சிகாமணிகள் எல்லாரையும் சனிக்கிழமையில் ஸ்நானம் செய்ய வேண்டும் என்று ஆத்திசூடி கட்டளை இட்டது. அந்தக் கட்டளையிலிருந்து மற்ற ஆறு நாட்களில் ஸ்நானம் செய்யக் கூடாது என்ற அழகான கட்டளையும் பிறந்தது.

இப்படி யெல்லாம் ஆத்திசூடியோடு கஷ்டப்பட்ட நம்மவர்கள் நீதி வாக்கியத்தைக் கண்டு பயப்படுகிறார்கள் என்பதில் வியப்பில்லை தானே!

மேலும் ஆத்திசூடி என்பது சர்வ வியாபகம். ஒவ்வொரு தேசத்திலுமே வேண்டிய மட்டும் ஆத்திசூடிகள் உண்டு. மேல் நாடு முழுதுமே உண்டு. ஆங்கிலத்தில் நிச்சயமாய் உண்டு. நாடு நாடாகவே கஷ்டப்பட்டார்கள் மக்கள் ஆத்திசூடிகளால். அவர்களுக்கும் நமக்கும் எப்படி உறவு ஏற்பட்டிருக்கிறது என்பது தெரிகிறதல்லவா?

நீதி போதிக்கிறதே லக்ஷ்யமாகக் கொண்டு பாட்டுப் பாடினால் அது பாடலாய் இராது. பாடுகிறவர் தன் காரியத்தைச் சாதித்துக் கொள்ள வந்த சூழ்ச்சி தான் என்பது தெரிந்து விடும்.

"திருடாதே" என்று சொன்னால் தன் ஜேபிலுள்ள காசைத் தொட்டுப் பார்த்துச் சொல்லுகிற காரியந்தான். பயத்தில் எழுந்த காரியம். ஆனந்தம் இல்லை அதில். பிறகு ஆனந்தத்தை விளைவிப்பதற்கு உரிய கவி ஆகவா செய்யும்? ஒரு நாளும் ஆகாது.

ஆனால் ஆனந்தத்தில் இருந்து வந்து விட்டால், எத்தகைய உண்மை வந்தாலும் சரி, நீதி தத்துவமாக வந்தாலும் சரி அது கவியாகும். நமக்கு ஆனந்தத்தை விளைவிக்கும்.

ஒரு உதாரணம்.

நாலடியாரில்ப் பழைய பாட்டு ஒன்று. மிகப் பழைய பாட்டு.

கவிஞர் கேட்கிறார்: உண்மையான பெருந்தன்மை வாய்ந்த பெரியாரை அணுகி அவர்களுடைய தயவைச் சம்பாதிக்கப் பார்க்கிறோம்; எதற்காக?

எவ்வளவு ஜாக்கிரதையாக இருந்தாலும் சில வேளை பெரிய அபராதங்களைச் செய்ய நேர்ந்து விடுகிறது. உண்மையான பெரியவர்கள் அதை மன்னித்து விடுவார்கள். இது காரணமாகத் தான் பெரியவர்களுடைய தயவை விரும்புகிறோம்.

பெரியார் பெருநட்புக்
கோடல்தான் தாம்செய்

அரிய பொறுப்பரென்(று)
அன்றோ—அரியரோ?—

அடுத்தாற் போல் பாண்டியனைக் குறித்து அழகான உபசாரம் வருகிறது.

"ஒல்லென் அருவி
உயர்வரை நன்னாட"

கவிஞர் குற்றாலத்தில் இருந்தவர் போலத் தெரிகிறது. அருவி வளம், மலை வளம் எல்லாவற்றையும் வைத்துப் பாண்டியனை உபசரிக்கிறார். இப்போது பாடலை முழுதுமாகப் பார்க்கலாம்.

பெரியார் பெருநட்புக்
கோடல்தான், தாம்செய்

அரிய பொறுப்பரென்(று)
அன்றோ—அரியரோ?—

ஒல்லென் அருவி
உயர்வரை நன்னாட,—

நல்லசெய் வார்க்குத்
தமர்.

[கோடல் தான்: விரும்பிக் கொள்ளுதல் தான்; தாம் செய் அரிய: தாம் செய்ய நேரும் பெரிய அபராதங்களை; அரியரோ: அப்படி யென்ன பஞ்சமா; ஒல்லென் அருவி உயர்வரை நன்னாட: ஒல்—ல்—ல் என்று சப்தம் கேட்டுக் கொண்டிருக்கும் அருவி பொழியும் பொதிகை மலை வளத்தைக் கொண்ட பாண்டிய நாட்டு மன்னனே; நல்ல செய்வார்க்குத் தமர் அரியரோ: நல்லதையே தாம் செய்து கொண்டிருந்தால் வேண்டியவர்கள் வேண்டிய மட்டுந்தான்]

ஹாஸ்ய பாவத்தைக் கொண்டு பெரியவர்களின் ஒப்பற்ற தன்மையை அழகாய்க் கவி ரூபத்தில் எடுத்துச் சொல்கிறது பாடல்.

நீதியை நம்மிடம் திணித்துவிட வந்த காரியம் அல்ல.




## பினகா (ரோஸ்)



பிரசித்தி பெற்ற இப்பற்பசை உங்களது பற்களை நன்கு சுத்தம் செய்வதோடு, முத்துப்போன்ற வெண்மையும், பிரகாசமுமுள்ள இருபல் வரிசைகளின் மூலம், புதுமையும் பொலிவுமுள்ள வசீகரப்புன்னகையும் நிச்சயமாக அளிக்கிறது. பற்களில் ஊடுருவிச்சென்று சுத்திகரிக்கும் பினகாவின் விசேஷசக்தி அதனுள் இயங்கும் "ஸல்போ-ரிஸிநோலியேட்" என்னும் பொருளின் தன்மைகளை சாஸ்திரிய ஆதாரமாகக் கொண்டது.

## பினகா பச்சை



மேற்சொன்னக் குணங்களுடன் அதிகப்படியாக சக்திவாய்ந்த 'க்ளோரோபில்' லும் பினகாபச்சையில் சேர்ந்துள்ளது. இது, அதன் அநேகசக்திகளில் ஒன்றான, வாய் நாற்றத்தை வெளிக்கிழுத்து அதை அறவே ஒழிக்கும் சக்தியும் வாய்ந்தது. ஆச்சரியகரமாக வாய் நாற்றத்தை அறவே ஒழிக்கும் தன்மைவாய்ந்த 'க்ளோரோபில்லும்' பினகாவின் நன்கு பரிசோதிக்கப்பட்ட செய்முறையான 'ஸல்போ-ரிஸிநோலியேட்'டின் தன்மைகளும் ஒருங்குசேர்ந்து உங்களுக்கு வரி நமளிக்கும் ஒரு பற்பசை "பினகா பச்சை" தான்.

எதைத் தேர்ந்தெடுப்பினும்சரி, உங்களது தேர்தல் சரியானதே
ஸிபாவால் தயாரிக்கப்பட்டதுகள்.

# ரோஸ்
## அல்லது
# பச்சை ?






பிரதி திங்கட்கிழமை மாலை 8 மணிக்கும் "பினகா ஹிட் பரேட்" பிரதி ஞாயிறு மாலை 8 மணிக்கும் "பினகா கீத மாலா" ரேடியோ சிலோனில் கேளுங்கள்

CBK 9053 TAMIL.




"எட்டு மாதங்களாக எனது கீழ் முதுகுப் பாகத்தில் பொறுக்க முடியாத வலி யிருந்தது. சில சமயங்களில் வலியின் கொடுமையால் என்னால் ஒன்றும் முடியாமலும், மிகுந்த க்ஷீணமாயும் இருந்தது. பிறகு "க்ரூஷன்" உபயோகித்துப் பார்த்தேன். இரண்டு வாரங்களுக்குப் பின்னர் நான் ஒரு வேற்று மனிதனா யிருக்கிறேன். எனது வலி முழுதுமே விட்டொழிந்து விட்டது.—H.W.S.

மூத்திரக் காய்கள் சரிவரக் கழிவு பதார்த்தங்களை வெளியேற்றாவிடில், ரத்தக் குழாய்களில் விஷச் சத்துக்களில் சேமிக்கப்பட்டு அவை முதுகு வலியை உண்டாக்குகின்றன. "க்ரூஷ"வின் ஆறுவித உப்புக்கள் மந்தித்துப்போன மூத்திரக் காய்களை மெதுவாகத் தூண்டி அவற்றைச் சரிவர இயக்கி ரத்தக் குழாய்களை சுத்தமாக்கச் செய்விக்கின்றன. தினந்தோறும் ஒரு சிறு அளவு "க்ரூஷன்" உட்கொள்வது உங்களை முதுகு வலியினின்றும் விடுவிக்கும்.

**"க்ரூஷன்"** உங்கள் ஆரோக்யத்திற்கும் ஆனந்தத்திற்கும் உற்ற உதவி

KSM - 6



# உழைக்கப் பிறந்தவள்

## செங்கமலம்

தனிமையில் இருந்த சேதுவின் மனத்தில் பல வருஷங்களுக்கு முன் நடந்த அந்தச் சம்பவத்தை யொட்டிய நினைவுகள் சங்கிலித் தொடர் போல் கோவையாக எழுந்தன.

அப்பொழுது அவனுக்கு வயது பதினெட்டு இருக்கலாம். குடும்ப பாரம் அழுத்தியும் அதைச் சுமப்பது தன் கடமை என்று நினைத்துச் சுமந்து வந்த காலம் அது.

பொறுமைக்கும் ஓர் எல்லை உண்டு. பொறுப்பற்றுத் திரியும் தம்பியையும் சேர்த்துச் சுமப்பது அவனுக்குப் பெரும் பாவம்போல் தோன்றியது. வேலை இல்லாவிட்டாலும், 'வேலை இல்லையே' என்கிற கவலை சிறிதும் அற்றுத் திரிந்த தம்பியை நினைத்துக் கசந்தது அவன் மனம். அன்று அவனுக்குக் கடையில் வேலைத் தொந்தரவு அதிகம். வீட்டுக்கு வந்தாலோ தம்பியின் நினைவு...கடைசியில் எல்லா அலுப்பும் சேர்ந்து தாயின் மீது கோபமாகப் பாய்ந்தது.

"இனி அவன் இந்த வீட்டில் அடி எடுத்து வைக்கவும் அனுமதிக்க மாட்டேன். அம்மா உனக்குப் பலமுறை சொல்லி விட்டேன், அவனுக்குச் சாப்பாடு போடாதே என்று. மீறி நடந்தால் இனி நீயும் அவனுடன் நடக்க வேண்டியதுதான்" என்று பொரிந்து தள்ளினான் சேது.

அடுப்பினிருந்த இட்லியை இறக்கிக் கொண்டிருந்த செல்லம்மா மகனது கோபத்தைக் கண்டு அஞ்சினாள். வழக்கமாகப் பேசி வரும் பேச்சுத்தான் என்றாலும் இன்று அந்தப் பேச்சில் அதிக உஷ்ணம் இருப்பதைக் கண்டாள்.

"அவன் யார் அந்நியனா, சேது! உன் உடன் பிறந்தவன் தானே! உன்னையன்றி அவன் வேறு எங்கு போவான்!" என்று மகனைச் சாந்தப்படுத்தும் முறையில் பேச்சுக் கொடுத்தாள்.

"எனக்கென்ன பதினாயிரமா சம்பளம் வருகிறது. தம்பியை வைத்துப் பராமரிக்க! அல்லது அவன் என்ன அறியாக் குழந்தையா! தன் வயதுக்குச் சம்பாதித்துச் சாப்பிடும் பருவம் வரவில்லையா!" என்று ஆத்திரத்தோடு பேசினான் சேது.

"அவனுக்கு வேலை கிடைத்தால் போக மாட்டானா, சேது! அதுவரை தானே உன் தயவில் கழிக்கப் போகிறான்..."

"வேலை கிடைப்பது குதிரைக் கொம்பாயிருக்கும் இந்த நாளிலே கிடைத்த வேலையைக் காப்பாற்றத் திறமில்லாதவனுக்கு நாளைக்கே வேலை கிடைத்துவிடப் போகிறதாக்கும். உன் பிள்ளை சாதாரண வேலை கிடைத்தாலும் ஒப்புக் கொள்ள மாட்டார். மனத்திலே பெரிய மிராசுதார் என்கிற நினைப்பு அவருக்கு......"

"நிறுத்தண்ணா, உன் பிரசங்கத்தை! பிச்சைக்கார சோறு போடுகிறாய் என்பதற்காக ஒரேயடியாக அளந்துவிட வேண்டாம்..." என்று எங்கிருந்தோ வந்த பாலு புலிபோல் பாய்ந்து சண்டைக்குத் தயாரானான். விபரீதத்தில் முடிந்து விடப் போகிறதே என்று அஞ்சிய செல்லம்மா, "பாலு, நீ ஒன்றும் பேச்சுக் கொடுக்காதே... வெளியே போ" என்று அவனை ஒதுக்கிவிட்டு "தயவு செய்து வம்பிழுக்காதே, சேது!" என்று பெரியவனிடம் கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள்.

"அத்தனை ரோஷமிருப்பவனாக இருந்தால் பிறர் தயவில் வாழ வேண்டாம்" என்று போகிற போக்கில் சூடு கொடுத்தவாறே வெளியே புறப்பட்டான் சேது.

"இனி அடுத்த வேளைச் சாப்பாடு உன் வீட்டில் சாப்பிட்டால் 'ஏன்டா மானங்கெட்ட நாயே' என்று கேள்'" என்று சபதம் போட்டபடியே பாலுவும் வெளியே போய் விட்டான்.

* * *

சிறு வயதிலேயே விதவையாகி விட்ட செல்லம்மா வெகு பாடுபட்டுக் குழந்தைகள் இரண்டையும் வளர்த்தாள். பூர்வீக சொத்து காலணாக் கூட இல்லாதிருந்தும் கை பாடுபட்டு, குழந்தைகளை எப்படியோ உருவாக்கி விட்டாள். அவளுக்குக் கிடைத்த சொற்ப வருமானத்தில் வயிறு காயாத சாப்பாடும் கந்தலில்லாத துணியும் எடுத்துக் கொடுத்து வளர்ப்பதே பெரும்பாடாக இருந்ததால் பெரிய படிப்பு படிக்க வைக்க முடியாமல், ஏழாவது எட்டாவது படித்ததே போதுமென்று நிறுத்திவிட்டு மகனைக் கடை வழியில் திருப்பி விட்டாள். பதினைந்தாவது வயதிலேயே குடும்பப் பொறுப்பையுணர்ந்து தனக்குக் கிடைத்த சம்பளம் பதினாறு ரூபாயையும் தன் செலவுக்கெனக் காலணா வைத்துக் கொள்ளாமல் தாயாரிடம் கொடுத்து விடுவான் சேது. , தன் உழைப்போடு மகனது சம்பளத்தையும் கொண்டு சற்றே தரித்திரம் நீங்கித் தலை நிமிர்ந்தாள். அதைப் போலவே பாலுவும் வேலைக் கமர்ந்து விட்டால் தன் தரித்திரம் விடிந்து விடும் என்று மனப்பால் குடித்துக் கொண்டிருந்தாள்.



சேதுவுக்கு இரண்டு வயதுதான் அதிகம் என்றாலும் அண்ணனிடம் பெருத்த மதிப்பு பாலுவுக்கு. சேது தனக்குத் தெரிந்த பெரியவரின் சிபார்சின் மூலம் தம்பியை மற்றொரு கடையில் வேலைக்கு அமர்த்தினான். அண்ணன் வாங்கிக் கொடுத்த வேலையை அக்கறையுடன் கவனித்து வந்தான் தம்பி.

"நாங்களிருவரும் சம்பாதிக்கத் தொடங்கியும் நீ எதற்கம்மா உழைத்து ஓடாக வேண்டும்! இனியாவது சற்று ஓய்வெடுத்துக் கொள்ளக் கூடாதா!" என்று கூறுவான் சேது.

"உழைத்த கட்டை உடம்பில் தெம்பிருக்கிற வரை உழைப்பதால் தவறொன்றுமில்லையப்பா. ஓய்வெடுத்துக் கொள்ள இன்னும் ரொம்ப நாட்கள் இருக்கின்றன. உனக்கும் பாலுவுக்கும் விவாகம் முடிந்து பேரன் பேத்திகள் பிறந்த பிறகு அவர்களை எடுத்து வைத்துக் கொண்டு என் உழைப்புக்கு விடுதலை அளித்து விடுவேன். அதுவரை உழைக்கத்தான் வேண்டும்" என்பாள் தாயார்.

இரண்டொரு மாதங்கள் ஓடின.

இப்பொழுதெல்லாம் பாலு முன்போல் உற்சாகமாய் வேலைக்குச் செல்வதில்லை. எட்டு அடித்ததும் அடிக்காததுமாகக் கடைக்கு ஓடுகிறவன் சில சமயம் ஒன்பது வரை அப்படியும் இப்படியும் சுற்றிக் கொண்டிருப்பான். "பாலு, கடைக்கு நேரமாக வில்லையா! போகவில்லையா!" என்று அம்மா கேட்டால், "போக வேண்டியதுதான், கணக்குப்படி வேலைக்குப் போனால் கணக்குப்படி வீட்டுக்கு அனுப்புவா செய்கிறார் முதலாளி! எத்தனை சீக்கிரம் சென்றாலும் அவருக்கு வீட்டுக்கு அனுப்பவே மனம் வருவதில்லை. எதையாவது வேலை ஏவிக் கொண்டே இருக்கிறார்" என்பான்.

"முதலாளி இட்ட வேலையைச் செய்ய வேண்டியது உனது கடமை தானே, பாலு! அலுத்துக் கொண்டால் முடியுமா!" என்பாள் அம்மா.

"அதிக நேர வேலைக்காக அதிகச் சம்பளம் எதுவும் கொடுக்கவில்லையே! அவர் கொடுக்கும் சம்பளத்திற்கு இந்த உழைப்புப் போதாதா!" என்பான் பாலு.

"இதெல்லாம் நல்லதற்கில்லை பாலு. பலாபலன் எதிர்பார்க்காமல் உழைக்கும் உழைப்பே உண்மை உழைப்பு. அதை நீ உணர்ந்து கொள்ளத்தான் வேண்டும்" என்று சொல்வாள்.

தாயார் சொல்வதை இந்தக் காதில் வாங்கி அந்தக் காதால் பறக்க விட்டுவிட்டு, தன் போக்கில் திரியத் தொடங்கினான் பாலு. இந்தப் போக்கு எந்தத் திருப்பத்தில் போய் நிற்குமோ என்கிற கவலை தாயின் மனத்தை அரிக்கத் தொடங்கியிருந்தது. இடையே காய்ச்சலென ஒரு வாரம் படுக்கையில் படுத்து விட்டான்.

ஜுரம் நின்று போன பின்பும் அசதி வேலைக்கே போக விடவில்லை. இரண்டு வாரம் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த பிறகும் அம்மா வேலைக்குப் போகச் சொன்ன போது ஏனோ அவனுக்கு வெறுப்பாக இருந்தது.

மனம் செல்லாத வேலை எத்தனை நாளைக்கு நிலைத்து நிற்க முடியும்! அதிக வேலை பார்க்கச் சொன்னார் என்பதற்காக முதலாளியோடு சண்டை போட்டுக் கொண்டு வேலையைவிட்டு நின்று விட்டான் பாலு.

தம்பி உழைத்துப் பணம் கொண்டு வரவில்லை என்ற காரணத்தைவிட சிரமப்பட்டுத் தேடிக் கொடுத்த வேலையை உதறித் தள்ளி விட்டானே என்கிற ஆத்திரந்தான் தம்பியின் மீது வெறுப்பாக மாறியிருந்தது. கடை வீதியில் தன் சொல்லுக்கு மதிப்பில்லாமல் செய்து விட்டானே என்று தம்பியின்மீது ஒரே ஆவேசமாய் இருந்தான். உயிருக்குயிராக இருந்த தம்பியின் முகத்தில் விழிக்கப் பிடிக்காதவனாய் அவனில்லாத நேரத்தில் வீட்டுக்கு வருவான். மற்ற நேரங்களில் கடையிலும் தெரிந்தவர்கள் வீட்டிலுமாகத் தங்கி விடுவான்.

தன் தவறை உணர்ந்து கொள்ள முடியாத பாலு அண்ணனின் போக்கைக் கண்டு சினம்

கொண்டான். சம்பாதித்துப் பணம் கொண்டு வந்த போது தம்பி என்று உயிருக்குயிராக இருந்தவன் தன்னால் உழைக்க முடியாது என்று வந்த போது தன்னை உதறித் தள்ளி விட்டானே என்ற ஆத்திரம் அண்ணனின் மீது. எனவே, அண்ணன் தம்பி இருவருக்குள்ளும் பகை வளர்ந்தது. இடையே அகப்பட்டு விழித்தாள் தாய்.

*  *  *

**மாடி**யில் அரைப்படி அரிசியைக் கொண்டு வந்தவன் அடுப்பை மூட்டிப் பானையை வைத்துச் சமையல் செய்தான்.

"சேது, இது என்ன வேலை!" என்று கேட்ட தாயாரை எதுவும் பேசக் கூடாதெனக் கண்டிப்பாகக் கூறிவிட்டான்.

சாதத்தை வடித்து மோரைக் குழப்பிச் சாப்பாட்டை முடித்துக் கொண்டவன் "அம்மா உனக்கு மட்டும் சாதம் வைத்திருக்கிறேன். எழுந்திருந்து சாப்பிடு" என்றதைக் கேட்ட அவள் பெற்ற வயிறு அடித்தது.

"சேது, நீ இப்படி மாறுவாய் என்று எதிர்பார்க்கவேயில்லை. பெற்ற பிள்ளையின் வயிறு பசியால் துடிக்கும்போது எந்தத் தாய்க்குத்தான் தன் வயிற்றை நிரப்பிக் கொள்ள முடியும்! என் குழந்தைக்கில்லாத ஆகாரம் எனக்குத் தேவையில்லை" என்று வெறுப்போடு கூறினாள்.

"முடியாது. ஒருவன் உழைத்து ஒன்பது பேர் சாப்பிட முடியாது. இஷ்டமானால் நீ சாப்பிடலாம்; இல்லையானால் உன் இஷ்டம்" என்று கூறி வெளியே போய் விட்டான் சேது.

மகன் பேசியது வாள் கொண்டு அறுத்தது போலிருந்தது. பாலு வந்தபோது தன் உள்ளக் கொதிப்பை வெளிக் காட்டா வண்ணம் அவனைச் சாப்பாட்டுக்கு அழைத்தாள்.

"நானாக உழைத்துச் சம்பாதிக்கும் வரை எனக்கு இந்த வீட்டுச் சாப்பாடு வேண்டாம், அம்மா!" என்று சாப்பிட மறுத்தபோது தானும் 'சாப்பிட மாட்டேன்' என்று பயமுறுத்தினாள். கடைசியில் தாயின் வற்புறுத்தலுக்குப் பணிந்து சாப்பிட இசைந்தான் பாலு.

சொந்தத் தம்பியாக இருந்தும் வேலை பார்க்கவில்லை என்பதற்காகச் சாப்பாடு போட மறுக்கிறான். தன் கை கால் உழைப்பு ஓய்ந்து போன வேளையில் தனக்கும் இந்தக் கதிதானே என்று நினைத்துக் கலங்கினாள். பிறர் போதனையினால் மனம் மாறிவிட்ட சேதுவின் போக்கைக் கண்டு மனம் கொதித்த செல்லம்மா தன் உள்ளக் கொந்தளிப்பைப் பாலு அறியாவண்ணம் மறைக்க வெகு பாடுபட்டாள். எப்படியும் பாலுவைக் கூடிய சீக்கிரம் ஒரு வேலை தேடிக் கொள்ள ஏற்பாடு செய்ய வேண்டுமென்கிற எண்ணத்துடன் அவனுடன் பேச்சுக் கொடுத்தாள்.

"பாலு எத்தனை நாட்கள் இப்படியே இருந்து விட நினைத்திருக்கிறாய். நீயாக ஒரு வேலை சம்பாதித்துக் கொள்ளக் கூடாதா!" என்று அவன் புத்தியில் படும்படியாக நயமாகக் கூறினாள்.

"ஆகட்டும், அம்மா! வேலை தேடுகிறேன்!" என்று கூறி வெளியே போனான் பாலு.

•  •  •

**பல** முறை சொல்லியும் பாலு அசட்டையாகவே இருந்தது, செல்லம்மாளுக்குப் பெரும் தொந்தரவாக இருந்தது. எத்தனை நாட்களுக்குத்தான் தனக்கு மட்டும் கொடுக்கும் ஆகாரத்தை அவனுக்கும் பகிர்ந்து கொடுக்க முடியும்! மேலும் பாலுவுக்கு அவள் சாப்பாடு போடுவது சேதுவுக்குத் தெரியாது. என்றைக்காவது தெரிய நேர்ந்தால்...! இதை நினைத்து, பீதி கொண்டு எத்தனை நாளைக்குக் காலம் தள்ளுவது! எத்தனை எடுத்துச் சொல்லியும் பொறுப்பில்லாமல் திரியும் பாலுவின் மீது அவளுக்கே வெறுப்புத் தோன்றியதில் சிறிதும் அதிசயமில்லை.



டாக்டர் :— ஊருக்குப் போய் விட்டு வந்நீரே, என்ன கொண்டு வந்நீர்?

வந்தவர் :—வீட்டுக்குப் பழங்கள் முதலியன வாங்கி வந்தேன்.

டாக்டர் :—எனக்கு என்ன கொண்டு வந்நீர், அதைச் சொல்லும்!

வந்தவர் :—உமக்கு, டயிஃபாய்ட் நிமோனியா, அஜீரணம், தலைவலி எல்லாம் ஏராளமாகக் கொண்டு வந்திருக்கிறேன்!

அன்று காலையில் பிருந்த அலுப்போடு அடுப்புப் பற்ற வைத்துக் காப்பிக்குத் தண்ணீர் கொதிக்க வைத்துக் கொண்டிருந்தாள். அதிகாரத்தோடு உள்ளே நுழைந்த பாலு "பலகாரம் எடுத்து வை" என்று கூறியபோது ஏனோ செல்லம்மாவுக்கு என்றுமில்லாதபடி வெறுப்பாக இருந்தது.

"வேலை சம்பாதிக்கத் திறமை யில்லாவிட்டாலும் அதிகாரத்தில் ஒன்றும் குறைச்சல் இல்லை. இப்போ காப்பி பலகாரம் சாப்பிட்டுவிட்டு எந்த ஆபீஸ் உத்தியோகத்திற்குப் போகப் போகிறாய்! வெட்டிச் சோறு தின்பவனுக்குப் பழைய அமுது போதாதா...வேண்டுமானால் எடுத்துவைக்கிறேன். சாப்பிட்டு விட்டுப் போ" என்று கூறியது கருக்கெனத் தைத்தது பாலுவின் நெஞ்சில்.

"அம்மா, நீதானா இப்படிப் பேசுகிறாய்! எனக்கு வேலை அமையாதது பெற்ற தாய்க்குக் கூட அலட்சியமாகி விட்டதா! உன் ஓர வஞ்சனையை என்னவென்று சொல்ல' ஒரு பிள்ளைக்குச் சூடான இட்லி, காப்பி. அடுத்த பிள்ளைக்குப் பழைய சாதம். இந்த அக்கிரமத்தை யாராலும் சகிக்க முடியாது" என்று கூறியவன் ஆவேசம் வந்தவனைப்போல் அடுப்பை நெருங்கினான்.

"எனக்கில்லாத உணவு அடுத்தவர்களுக்கும் உபயோகமாக வேண்டாம்" என்று ஆத்திரத்தில் அடுப்பிலிருந்த பாத்திரத்தை உருட்டி விட்டான். அடுப்பின் முன் அமர்ந்திருந்த செல்லம்மாவின் பாதங்களில் அடுப்பிலிருந்த பாத்திரம் சரிந்து கொதிக்கும் தண்ணீர் கவிழ்ந்து விட்டது. வேதனை தாங்க மாட்டாத செல்லம்மா 'ஐயோ, அம்மா' வென அலறிவிட்டாள். அவளது அழுகைக் குரலைக் கேட்டு ஓடி வந்த அக்கம்பக்கத்தவர்கள் செல்லம்மாவின் நிலைக்கிரங்கி, பரிதாபப் பட்டனர். தேனைத் தடவியும் மையைக் கொட்டியும் செல்லம்மாவை ஆசுவாசப் படுத்தினர். இதற்குள் கடையிலிருந்து எப்படியோ விஷயம்தெரிந்த சேது தலை தெறிக்க ஓடி வந்தான். வேதனையால்

அதிக
வெண்மையான
பற்கள் சுத்தமான
வாய்

COLGATE
RIBBON DENTAL CREAM

ஒளிவீசும் புன்னகைகள் கோல்கேட் புன்னகைகள்

பெரியவர்களுக்கும்
குழந்தைகளுக்கும்

FOR CONSTIPATION
BROOKLAX
THE BRITISH
CHOCOLATE LAXATIVE

ப்ரூக்லாக்ஸ்

மலச்சிக்கலை
ஒரே இரவில்
அகற்றுகிறது

ஏஜெண்டுகள் :
ஓரியண்டல் மெர்க்கன்டைல் ஏஜென்ஸி
99.A. அரண்மனைக்காரத்தெரு, மதராஸ்-1.

துடித்து நின்ற தாயைக் கண்டு உள்ளம் பதறினான். தம்பியால் தாய்க்கு இக்கதி நேர்ந்ததென்பதை அறிந்தபோது 'அவனை என்ன செய்கிறேன், பார்' என்று கூறிக் கொண்டே ஆவேசமாய் வீட்டுக்குள் நுழைந்தான்.

மறுகணம் தன் மக்கள் இருவரும் ஆவேசத்தில் கட்டிப் புரளப் போகிறார்கள் என்பதை உணர்ந்த செல்லம்மா தன் கால் வேதனையை மறந்தாள். வீட்டினுள் பாய்ந்து சென்றாள். இரண்டு பிள்ளைகளுக்கும் இடையே வந்து விழுந்து "சேது, என்ன காரியம் செய்யத் துணிந்து விட்டாய். நான் செய்த தவறுக்கு அவன் என்ன செய்ய முடியும்! கொதிக்கும் தண்ணீரைக் காப்பி போட இறக்கப் போனேன். கை நழுவிக் காலில் விழுந்துவிட்டது. அதற்காகப் பழியை அவன் மீது சுமத்த வேண்டுமா!" என்று நடந்ததையே மாற்றிக் கூறி அப்போதைய சண்டையை விலக்கி விட்டு மகனை அப்புறப்படுத்தினாள்.

ஊராரும் தாயாரும் பிரித்து விட்டதினால் அப்போதைக்குச் சமாதான மடைந்தவனைப்போல் காணப்பட்டாலும் சேது அந்த விஷயத்தை அத்தனை சுலபத்தில் விடுவதாயில்லை. இப்படியே விட்டுக் கொண்டிருந்தால் என்றைக்காவது ஒரு நாள் தாயாரின் உயிருக்கு ஆபத்து பாலுவினால் ஏற்படும் என்று அவன் மனதில் தோன்றியது.

ஒரு நாள் பகல் சேது தாயாரிடம் வந்தான். அவளுக்கு வேண்டிய ஆகாரத்தைத் தயாரித்துக் கொடுத்துச் சாப்பிடச் சொல்லிப் படுக்கையில் படுக்கச் செய்த பின் தாயின் பக்கம் சாவகாசமாய் வந்தமர்ந்து கொண்டான். "அம்மா, இதில் உன் கை ரேகையைப் புரட்டு" என்று ஒரு தாளை நீட்டினான்.

இந்த மாதிரி விஷயங்களில் பழக்கமில்லாத செல்லம்மா விழித்தாள். "என்னப்பா இது! எதற்காக என் கைரேகை கேட்கிறாய்!" என்றாள்.

"ஒன்றுமில்லை யம்மா, உன் பிள்ளையின் கொட்டத்தை அடக்க" என்று கூறியதும் துள்ளி எழுந்தாள் செல்லம்மா.

"புரியும்படியாகச் சொல்லேன், சேது!" என்று பரிதாபமாகக் கெஞ்சினாள்.

"'வேலை வெட்டி செய்யாமல் விருதாவாய்ச் சுற்றிக்கொண்டு அலைவது மல்லாமல் வீடு புகுந்து பெற்ற தாயையும் தமையனையும் அடிக்க வருகிறான்' என்று போலீஸிற்கு எழுதிக் கொடுக்கிறேன், அம்மா" என்று கூறியதும் திடுக்கிட்டலறினாள் செல்லம்மா.

போலீஸ் என்றதும் அவள் நெஞ்சம் பதறியது. "போலீஸில் எழுதி வைத்து என் பிள்ளையைச் சிறையிலடைக்கவா! ஜெயிலுக்குப் போகும்படியாக என் பிள்ளை என்ன குற்றம் செய்து விட்டான்! பெற்ற பிள்ளையைச் சிறையிலடைக்கப் பெற்ற தாய் கையெழுத்திட்டுக் கொடுக்க மனம் துணியுமா! என்னை அத்தகைய கொடிய பாவியாக நினைத்தாயா, சேது!"

"நான் பாவியா...! பாவியா ...!" என்று தலையிலடித்துக் கொண்டு அழத் தொடங்கி விட்டாள்.

சமயம் சரியில்லை யென்று அச்சமயம் அங்கிருந்து மெல்ல நழுவி விட்டான் சேது.

* * *

இரண்டு மூன்று தினங்கள் இடையே விட்டு வீட்டுக்கு வந்தான் சேது. எப்படியும் தாயாரின் மனத்தை மாற்றி விடலாமென்ற நோக்கத்துடன் வந்து பார்த்தபோது வீடு பூட்டிக் கிடந்தது. எங்கு போயிருப்பாள்! எதற்காகப் போயிருப்பாள்! யாருடன் போயிருப்பாள்! என்றெல்லாம் அக்கம் பக்கத்தில் விசாரித்துப் பார்த்ததில் ஒன்றும் புலனாகவில்லை. வீட்டைத் திறந்துகொண்டு உள்ளே சென்றான்.

இரண்டே வரிகள் நிறைந்த கடிதத் துண்டு ஒன்று அவனை வரவேற்றது.

பிறர் போதனையாலோ...... நீயாகவோ...... நினைக்கவே முடியாத வகையில் மாறி விட்ட உன்னை என் மகனெனச் சொல்லிக் கொள்ள என் நெஞ்சம் அஞ்சுகிறது. உன் தூய எண்ணத்தை அறிந்த பின்பும் உன்னுடன் வாழ விரும்பாமல் உன்னை விட்டுச் செல்கிறேன். பெற்ற தாய்க்கு இரு குழந்தைகளும் சமம்தான். நியாயம் எங்கிருக்கிறதோ அங்குதான் அன்பைக் காணமுடியும். பணத்தால் அன்பை விலைக்கு வாங்கி விடலாம் என்று நினைத்திருந்த உன் எண்ணம் தவறு என்பதை நிரூபிக்கவே உன்னை விட்டுப் பிரிந்து செல்லுகிறேன். என்னைத் தேட வேண்டாம்.

இப்படிக்கு
உன் தாயார் செல்லம்மா.

இதைப் படித்த ஒரு கணம் தன்னை மறந்து விட்டான். சம்பாதிக்கும் போதுதான் தம்பி. ஆனால் சம்பாதித்தாலும் சம்பாதிக்கா விட்டாலும் தாய்க்குத் தன் பிள்ளை பிள்ளைதான் என்பதை நிரூபித்து விட்டுச் சென்ற தாயின் அன்பைக் கண்டு வியந்தான். போற்றினான்...புகழ்ந்தான். இடைக் காலத்தில் மாறிப் போயிருந்த தன் மனத்தை தாயின் கடிதத்தினால் திருத்தி அமைத்துக் கொண்டான். ஆயினுமென்ன! தாயையும் தம்பியையும் அதன் பின் காணவேயில்லை. தேடினான், தேடினான், தேடிக்கொண்டேயிருந்தான்! என்ன தேடி என்ன பயன்!

* * *

வருஷங்கள் பல ஓடின. அவன் வேலைபார்த்து வந்த கடையை இன்று அவனே பொறுப்பேற்று நடத்தி வருகிறான். எத்தனை செல்வமிருந்தும் அவனுக்கு மனத்தில் நிம்மதி இல்லை. தாய்க்கும் தம்பிக்கும் இழைத்து விட்ட தீங்கிற்குப் பிரதியாக விவாகம் — குடும்பம் என்பது ஏற்படுத்தாமலே அநாதையைப் போல் காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தான்.

வியாபார நிமித்தம் வெளியூர் சென்றிருந்த சமயம் கடை வேலையை முடித்து விட்டுக் கால் நடையாகவே அவன் தங்கியிருந்த ஜாகைக்குத் திரும்பிக் கொண்டிருந்தான். எங்கேயோ கவனமாக வந்து கொண்டிருந்தவன் எதிரே வந்த உருவத்தைக் கண்டு திடுக்கிட்டு விழித்தான்.

"யாரது, பாலுவா!" என்று அந்த உருவத்தை ஓடிப் போய் கட்டிக்கொண்டான். "அண்ணாவா, இங்கே எப்படி வந்தீர்கள்!" என்று அன்புடன் அண்ணனை வினவினான் பாலு.

"நீ இங்கே எங்கே வந்தாய், பாலு! அம்மாவைக் கண்டாயோ! அவள் எங்கிருக்கிறாள்! உன்னுடன் இருக்கிறாளா!" என்றெல்லாம் கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டுத் திணற அடித்தான் சேது.

"அம்மா மறைந்து விட்டாள்" என்று பாலு கூறவும் திடுக்கிட்டு அலறினான் சேது. "அம்மாவின் மறைவுக்கு நான்தானே காரணம்" என்று பாலு கூறியபோது அதை ஒப்புக்கொள்ள மறுத்தான் சேது. "இல்லை, நீ இல்லை. காரணம் நான்தான். அம்மாவைக் கொன்ற கொலைகாரன் நான். நீ அம்மாவின் காலை மட்டும் ரணமாக்கினாய். ஆனால் நான் அவள் உள்ளத்தை யல்லவா ரணமாக்கிக் கொன்று விட்டேன். என்னால் அல்லவா

"அம்மாவுக்கு மரணம் நேர்ந்தது" என்று வாய் விட்டு அலறினான் சேது.

"அண்ணா, நீ நினைப்பது போல் அம்மா இவ்வுலகை விட்டே மறைந்துவிட வில்லை. உன்னை விட்டுத்தான் மறைந்து போனாள் என்றேன். உன்னைப் பார்க்க வேண்டு மென்று அடிக்கடி புலம்பிக் கொண்டுதா னிருக்கிறாள். உன்னிடம் சொல்லிக் கொள்ளாமல் வந்து விட்டதற்காக எங்கே கோபித்துக் கொள்ளப் போகிறாயோ என்று பயந்துதான் உன்னிடம் வராமலிருக்கிறாள்" என்று தம்பி கூறியதைக் கேட்ட போது உவகை ஊற்றெடுத்தது சேதுவின் நெஞ்சில். பல வருஷங்களுக்கப்பால் தாயைக் காணப் போகும் ஆவலில் துரித நடைபோட்டுச் சென்றான்.

அந்த மாதத்திலேயே நல்ல சுப தினத்தில் வீட்டிற்கு இரண்டு மருமகள்மாரைத் தேடிக் கொண்டு வந்து விட்டாள் செல்லம்மா. அடுத்த வருஷம் அவளுக்குக் கிடைத்த பேரன் பேத்தி இருவரையும் எடுத்துக் கொஞ்சுவதற்கே பொழுதில்லாமல் தடுமாறினாள் செல்லம்மா. "அம்மா, இனியாவது உன் உழைப்பை நிறுத்தி விடுவா யல்லவா !" என்று மகன் சேது கேட்டான்.

"அம்மா என்றும் உழைக்கப் பிறந்தவள் அண்ணா. இதுவரை பணத்திற்காகப் பிறருக்கு உழைத்தாள். இப்பொழுது பேரன் பேத்திகள் வளர்ச்சிக்காக உழைக்கிறாள். அவர்களைப் பராமரித்து அவர்கள் வளர்வதற்காக உழைக்கத் தொடங்கி யிருந்தாலும் இதுவும் ஒருவகை உழைப்புத்தானே !" என்றான் பாலு.

"இந்த உழைப்புத்தான் மனத்திற்கு இன்பம் தரும் உழைப்பு, அப்பா ! இதற்காகத்தான் பல காலம் தவமிருந்தேன்" என்று அகத்திலும் முகத்திலும் மகிழ்ச்சி பொங்கக் கூறினாள் செல்லம்மா.

# படித்துப் பாருங்கள் !

## பத்து மாதம்

"ஐயிரண்டு திங்களாய் அங்கமெலாம் நொந்து பெற்று......" என்று பட்டினத்தார் கூறி யிருக்கிறார். ஒரு குழந்தையைப் பெறுவதற்கு ஒரு தாய் என்னவெல்லாம் சிரமப்பட வேண்டி யிருக்கிறது ! அதனால்தான் பிரசவித்த ஸ்திரீயை, "அவள் பெற்றுப் பிழைத்தாள்" என்று கூறுகிறார்கள். ஒரு குழந்தை ஜனித்ததும் எப்படிச் சந்தோஷப்படுகிறோமோ, அதேபோல அதைப் பெற்றெடுத்த தாயையும் பார்த்துச் சந்தோஷப் படவேண்டி யிருக்கிறது.

மக்கட் பேறு உண்மையில் அவ்வளவு கஷ்டமானது தானா ! நம் நாட்டில் வருஷத்துக்கு இரண்டு லக்ஷம் தாய்மார்கள் பிரசவத்தினால் இறக்கிறார்கள் என்னும் பயங்கர நிலைமை தவிர்க்க முடியாததா ! பிறப்பின் ரகசியத்தை நம் நாட்டில் எல்லோரும் சரியாக அறிந்து கொள்ளாததினாலேயே மக்கட் பேற்றைக் கண்டு பயப்படும் நிலையில் இருக்கிறோம். இது விஷயத்தில் முக்கியமாக நம் நாட்டுப் பெண்களுக்கு, சிசுவின் வளர்ச்சியையும் அச்சமயம் தாயார் அனுஷ்டிக்க வேண்டிய முறைகளையும் பற்றி அவசியம் போதிக்க வேண்டும். அந்த உத்தமத் தொண்டை டாக்டர் எஸ். திரிபுரசுந்தரி எம். பி. பி. எஸ். இந்த நூலை எழுதியதன் மூலம் அழகாகச் செய்திருக்கிறார்.

தாய்மையின் அறிகுறிகள், தாயின் ஆரோக்கியம், கர்ப்பகாலத்துத் தொந்தரவுகள், கர்ப்பிணிகளும் சில நோய்களும் என்னும் பிரிவுகளில் மிகவும் தெளிவாக விஷயங்களை ஆசிரியை எழுதி யிருக்கிறார். பிரசவத்தில் ஏற்படும் கோளாறுகளையும் சிரமங்களையும் கூறி யிருப்பதோடு, அவைகளை நிவர்த்திப்பதற்கு ஏற்ற பரிகாரங்களையும் விரிவாகக் கூறியிருக்கிறார்.

பிரசுரம்: அல்லயன்ஸ் கம்பெனி, தபால் பெட்டி நெ. 617, மயிலாப்பூர், சென்னை—4. விலை : ரூ. 4—8—0.

## விஜய வருஷ திருமூர்த்தி ராசிபலன்

நிகழும் வருஷத்துக்கும் அடுத்த வருஷத்துக்கும் (1953—1954) ராசி பலன் இந்நூலில் விரிவாகச் சொல்லப் பட்டிருக்கிறது. கிரக கோசார பலனும் சேர்க்கப்பட்டிருக்கிறது.

பிரசுரகர்த்தர் : தஞ்சை, ஆக்கூர் கே. எஸ். ஸ்ரீநிவாசன், கருணா பப்ளிஷிங் ஹவுஸ், 60, ஈசுவரன் கோவில் தெரு, மாம்பலம், சென்னை-17. விலை : ரூ. 1—0—0.

## சுந்தரியும் ஏழு குள்ளர்களும்

குழந்தைகளைப் படிக்கத் தூண்டும் வர்ண சித்திர அலங்காரங்கள் அமைந்த அழகான புத்தகங்கள் தமிழில் நிறைய வரவேண்டும். அத்தகைய குழந்தைகளுக்கு ஏற்ற சுவாரஸ்யமான கதை இச் சிறு புத்தகத்தில் அடங்கி யிருக்கிறது. கதைக்கு ஏற்ற படங்கள் கதையைப் படிக்கத் தூண்டுகின்றன. புத்தகத்தின் புற அமைப்பு கண்ணைக் கவருகிறது. சின்னக் கதையைப் பெரிய எழுத்தில் கவர்ச்சிகரமாக வெளியிட்டிருக்கும் இம் முயற்சி பாராட்டுக்குரியது.

பதிப்பாசிரியர் : வித்துவான் மே. வி. வேணுகோபாலப் பிள்ளை ; பிரசுரம் : எம். ஆர். அப்பாதுரைப் பிள்ளை, 13, முத்தியாலு செட்டித் தெரு, வேப்பேரி, சென்னை—7 ; விலை : ரூ. 1—0—0.

## பஞ்சாயத்துச் செய்தி

எல்லாக் கிராமங்களிலும் புதிய பஞ்சாயத்து போர்டுகளுக்குத் தேர்தல்கள் நடந்து முடிந்து விட்டன. இச்சமயத்தில் பஞ்சாயத்து போர்டு சம்பந்தமான செய்திகளையும் தாங்கி ஒரு பத்திரிகை வருவது இன்றியமையாதது. அந்தத் தொண்டை இந்தப் பத்திரிகை நன்றாக ஆற்றும் என்று நம்புகிறோம்.

ஆசிரியர் : கே. கோவிந்தராஜுலு நாயுடு, தெப்பக்குளம், திருச்சிராப்பள்ளி ; தனிப் பிரதி: விலை அணா : 0—2—0.

## வேதாளக் கதைகள்

விக்கிரமாதித்தன் கதையையும் அதில் வரும் வேதாளம் சொல்லிய கதைகளையும் பற்றித் தமிழர்களுக்குப் புதிதாக எதுவும் சொல்லவேண்டியதில்லை. அந்தக் கதைகள் அத்தனை பிரசித்தி வாய்ந்தவை. படிப்பதற்கு மிகவும் ருசிகரமான கதைகள். அவற்றை நல்ல தமிழில், எளிய நடையில் இந்நூலில் வெளியிட்டிருக்கிறார்கள்.

எழுதியவர் : த. நா. சேனாபதி ; பிரசுரம் : அல்லயன்ஸ் கம்பெனி, தபால் பெட்டி நெ. 17, மயிலாப்பூர், சென்னை - 4. விலை : ரூ. 2—0—0.

# இந்தியாவின் தலைசிறந்த சைக்கிள் டயர்கள்



# சூப்பர் இந்தியா

IT-6692



## 2. பால்ய நண்பர்கள்

பரமானந்தரின் கண்களில் நீர் வந்ததா இல்லையா என்பது தெரியாது. ஆனால் கண்களில் பிரகாசமான மின்னொளி பட்டவர் போல இரு கைகளாலும் தம் முகத்தை மூடிக் கொண்டார். இரண்டு நிமிஷங்களுக்கெல்லாம் கண்களிலிருந்து அவர் தம் கைகளை அகற்றினார். அப்பொழுது அவருடைய கண்களில் நீர் கோத்திருக்கவோ கசிந்து கொண்டிருக்கவோ இல்லை. ஒரு வேளை உள்ளங்கைகளில் இருக்கலாமோ, என்னமோ?

இரு நண்பர்களும் எதிரும் புதிருமாக உட்கார்ந்து கொண்டனர். உணர்ச்சிப் பெருக்கு அடங்கியதும் ராமலால் குரலைக் கனைத்துக் கொண்டு, "பரமானந்தம்! நான் ஏழையாகி விட்டேன்!" என்றார்.

"அதனால் ஒன்றும் பாதகம் இல்லை. பித்தனாக ஆகிவிடாமல் இரு. அதுவே போதும். மனத்தை அரற்றிக் கொள்ளாமல் திடப்படுத்திக் கொள்" என்றார் பரமானந்தர். பிறகு சிறிது நேரம் கழித்து, "உன் பொருள்களைப் பிறர் பாழ்படுத்திக் கொண்டிருந்த பொழுது



நான் என்ன சொன்னேன், நினைவிருக்கிறதா? இப்பொழுதும் அதையேதான் கூறுகிறேன். உலகம் ஏழைகளுக்குத்தான் சொந்தமானது. நீ பெரிய மாளிகையில் வாழ்ந்தாயே, அப்பொழுது உன் தோழர்களாயிருந்தவர்கள் எல்லாரும் யார், தெரியுமா? மேஜை, நாற்காலி, ரத்னகம்பளம், ஜமுக்காளம், குதிரை - நாய் இன்னும் கொஞ்சம் அதிகமாகச் சொல்லப்போனால் புஷ்பக் கொத்துக்கள், அலங்காரப் பொருள்கள் இவைதாம். இப்பொழுது அவையனைத்தும் வந்த விதமே போய் விட்டன. மன்னியும் மனோரமாவும் மட்டும் மிகுந்திருக்கிறார்கள். உண்மையைச் சொல்லப் போனால் இவ்விருவரும்தான் உன் உண்மைத் தோழர்கள். என் ராமு! மன்னி-நாற்காலி இவ்விருவரில் யாரையாவது விட்டுப் பிரிய நேர்ந்தால் நீ யாரைப் பிரிய உடன்படுவாய்? மனோரமா-வண்டி இவ்விருவரிலும் உனக்கு யார் அதிகப் பிரியமானவர்கள்? அடேடே! என்னவோ நானே பித்தன் போலப் பேசிக் கொண்டு போகிறேனே!... மன்னி! எங்கே அப்பா?" என்று கேட்டார்.

தந்தையின் வாயாடி நண்பரின் வார்த்தைகளைக் கேட்டு மனோரமா மிகவும் வியந்தாள்.

# மனோரமா

ரமணலால் வஸந்தலால் தேசாய்

மொழிபெயர்ப்பு: ரா. வீ

தன் தந்தையுடன் 'அடா, புடா!' என்று இப்படியெல்லாம் ஸௌஜன்யமாகப் பேசும் நண்பர்களை அவள் இதுவரை பார்த்ததில்லை.

"அம்மாவா? மாதவப்பிரஸாத் வீடு வரைக்கும் போயிருக்கிறாள்!"—மனோரமா பேச வேண்டும் என்னும் ஆசையோடு பரமானந்தரின் கேள்விக்குப் பதில் அளித்தாள்.

"மாதவப் பிரஸாத் இங்கிருந்து கொஞ்ச தூரத்தில்தான் இருக்கிறார். அவருடைய கருணையினால்தான் இந்த வீடு இரண்டு மூன்று என்று துண்டாடப்படாமல் பிழைத்திருக்கிறது. ரொம்பவும் நல்ல மனிதர். அவர் மட்டும் சமயத்தில் கை கொடுத்து உதவியிரா விட்டால், நான் சந்தியில் நிற்க வேண்டியதுதான். அவருடைய மனைவிக்கு உடல் நலம் சரியில்லை. அதனால் அடிக்கடி போய்ப் பார்த்து வரவேண்டியிருக்கிறது. அதை விசாரித்துவரத்தான் அவள் போயிருக்கிறாள்!" என்றார் ராமலால்.

"மனோரமாவுக்கு என்னைத் தெரிந்திருக்க நியாயம் ஏது? ஏன் அம்மா, என்னைத் தெரியுமோ, உனக்கு? தெரியாது, தெரியாது! எப்படித் தெரிந்திருக்கும்? பன்னிரண்டு

வருஷங்களாகி விட்டன. அப்பொழுது உனக்கு மூன்று வயதிருக்குமோ, என்னவோ?'' என்றார் பரமானந்தம்.

"ஆமாம். மூன்று வயதுதான் இருக்கும்!'' என்று ஆமோதித்தார் ராமலால்.

மனோரமா இலேசாக இளநகை புரிந்தாள். அடுத்த கணம் அவளை எங்கிருந்தோ வெட்கம் வந்து சூழ்ந்து கொண்டது. பன்னெடுங் காலத்திய பாரதீயப் பண்பு அவளுடைய ரத்தத்திலும் ஓடி ஊறியிருந்ததுதான் அதற்குக் காரணம். அப்படியிருக்கும்பொழுது, முன்பின் அறிமுகம் ஆகாத அன்னிய புருஷருக்கெதிரே அவளால் தலை நிமிர்ந்து எப்படி நிற்க முடியும்? எனவே, வெட்கித் தலையைக் குனிந்து கொண்டாள். இயல்பாகவே அழகு வாய்ந்த அவள் அப்பொழுது இன்னும் மெருகிட்டுப் பேரழகியாக விளங்கினாள்.

அதைப் பார்த்த பரமானந்தர், "அம்மா குழந்தாய்! நானொரு வழிப்போக்கன்



இந்த உலகத்தைச் சுற்றுவதையும் பார்ப்பதையும் தவிர, எனக்கு வேறு வேலை இடையாது. இந்த உலகத்தில் எனக்கு உற்றார் உறவினர் என்று யாரும் கிடையாது. ஆனால் எல்லோரும் எனக்கு வேண்டியவர்கள்தான்; உற்றார் உறவினர்கள்தான். சிலந்தியைப் போல தன்னலம் என்னும் வலை பின்னி அதில் நானே சிக்கிக் கொள்ளவோ, அல்லது பிறரைச் சிக்க வைக்கவோ சிறிதும் விரும்பவில்லை. தற்பெருமைக்காக இதை நான் சொல்லிக் கொள்ள முன் வரவில்லை. இது வரை நான் இதுபோன்ற வலைகளில் விழுந்த



தில்லை. ஏன், மனோரமா! நான் இப்படிச் செய்தது நல்லதுதானே?'' என்று கேட்டார், மனோரமாவைப் பார்த்து.

மனோரமாவுடன் பேச்சுக் கொடுக்க வேண்டும் என்பதற்காகத்தான் அவர் இவ்வளவு வார்த்தைகளையும் கொட்டினார்; விஷயங்களையும் பேசினார். ஆனால் அவள் வாய் திறந்து வார்த்தை சொல்லவில்லை. பதில் ஒன்றும் பேசாமல் உள்ளூக்குள் சிரித்துக் கொண்டே மௌனமாக உட்கார்ந்திருந்தாள்.

இதற்குள் வெளியே போயிருந்த சுபத்திரா திரும்பி வந்தாள். பரமானந்தரைப் பார்த்ததும் முதலில் அவள் சற்றுத் துணுக்குற்று நின்றாள். பன்னிரண்டு வருஷ காலத்து இடைவெளி மனிதனின் நினைவுத் திரையிலே எவ்வளவு தூரம் தூசிபடியச் செய்துவிடுகிறது என்பது யாவரும் அறிந்த விஷயம். ஆனால் நாம் நினைப்பதுபோல் பரமானந்தர் அவ்வளவு சீக்கிரம் மங்கி மறையும் மனித வர்க்கத்தைச் சேர்ந்தவர் அல்லவே!

"மன்னி! நமஸ்காரம். நான் உயிரோடுதான் இருக்கிறேன்!'' என்று தாமாகவே பேச்சை ஆரம்பித்தார் அவர்.

"ஓகோ! ஆனந்தரா? வரவேணும்!'' என்றாள் சுபத்திரா. பரமானந்தரை ஆனந்தர் என்று அழைப்பது சுபத்திராவின் வழக்கம். சுபத்திராவின் முகத்திலே மகிழ்ச்சி பளிச்சிட்



டது. வெகு நாட்களுக்குப் பின் வேண்டியவர்களைச் சந்தித்தால் ஏற்படும் ஆனந்தம் சுபத்திராவின் கண்களிலே ஆனந்த பாஷ்பமாகக் கோத்து நின்றது.

“இப்படியே ஊர் சுற்றிச் சுற்றி உங்கள் வாழ் நாள் ஓடிவிட்டது. இனியாவது கொஞ்சங் களைப்பாறுங்கள். ஒரு மாதமாவது இங்கே இருந்து விட்டுத்தான் போக வேண்டும். எந்தக் காரணத்தையும் கொண்டு அதற்கு முன் போக விடமாட்டேன்!” என்றாள் சுபத்திரா வெகு சௌஜன்யத்துடன்.

அதே கள்ளங் கபடமற்ற எளிய சுபாவம்! பேச்சில் அதே குழைவு! அதே அப்பழுக்கற்ற ஆடை! முகத்திலே அதே மென்மை! அதே மேன்மை! வாழ்க்கையில் அவளுக்கு எத்தனையோ கஷ்ட நஷ்டங்களும், இன்ப துன்பங்களும் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் அவற்றினால் அவளுடைய சுபாவத்தில் கசப்பையோ கடுகடுப்பையோ உண்டு பண்ண முடியவில்லை. எனவே, அவளுடைய முகத்தில் எப்பொழுதுமே இயல்பாக இருந்த மாதுர்ய பாவம் மாறாமல், மறையாமல், மங்காமல் அப்படியே இருந்தது. இடையே ஏற்பட்ட இடுக்கண்களையும் இல்லாமைகளையும் இனிய சிரித்த முகத்துடன் சகித்துக் கொள்ளும் தன்மை பெற்றிருந்ததனால், வயதாகியும் அவளுடைய உடல் நலம் சிறிதும் கெடாமல் சரியாகவே இருந்து வந்தது.

“இன்னுங்கூட வரும் விருந்தினர்களை உபசரிக்கும் உங்கள் ஆர்வம் தீரவில்லைபோலிருக்கிறதே!” என்று கேட்டார் பரமானந்தர்.

ஏழ்மையினால் உயர்ந்த பண்பாடுகளை அடக்க முடியாது, ஒடுக்க முடியாது; அழிக்கவும் முடியாது. என்னதான் ஏழையானாலும், உள்ளத்தில் ஊறிய பண்பு பண்பாகவே இருக்கும். அதை அசைத்து வேரோடு களைந்து எறிந்துவிட முடியாது.

“நீ விருந்தினனாகத்தானே வந்திருக்கிறாய்!” என்று ஆரம்பித்தார் ராமலால்.

“உன்னை யார் கேட்கிறார்கள்? உலகம் முழுவதுக்கும் நீ விருந்து வை. உன்னை வேண்டாம் என்று யார் சொன்னார்கள்? அப்படிச் சொல்லி உன்னைத் தடுக்கத்தான் முடியுமா? நான் உன்னிடம் பேசவில்லை. மன்னியிடம் பேசிக் கொண்டிருக்கிறேன். அதனால் நீ பேசாமல் இரு!” என்றார் பரமானந்தர்.

பன்னிரண்டு வருஷ காலமாகப் பரமானந்தர் உலகம் சுற்றிக் கொண்டிருந்தார். பால்ய காலத்துத் தோழர்களுள் பரமானந்தர்தான் ராமலாலுக்குப் பரம ஆப்தமானவர். இன்னும் விடாமல் தம் நட்பை நிர்வகித்து வந்தார். ஜனங்கள் பரமானந்தரை விஷயத்தின் கம்பீரத்தை உணராதவர் என்றும், எதையும் இலேசாக எடுத்துக் கொண்டு விடுபவர் என்றும், வெறுங் கோணல் பேர்வழி என்றும் சொல்லி வந்தார்கள். ராமலாலின் நண்பர்களுக்குப் பரமானந்தரின் ஒளிவு மறைவில்லாத தெளிவான பேச்சும், கபடமற்ற நடத்தையும், நேருக்கு நேர் குற்றங் குறைகளைச் சொல்லி விடும் தன்மையும் பிடிப்பதில்லை. ஆனால் ராமலாலின் காரியமோ, சுபத்திராவின் காரியமோ பரமானந்தரின் ஆலோசனையின்றி நடைபெறுவதில்லை. ராமலாலின் நண்பர்களும் உற்றார் உறவினர்களும் செய்யும் மோசடி வித்தைகளையும் ஏமாற்று வித்தைகளையும் கண்டால் பரமானந்தருக்குச் சிறிதும் பிடிப்பதில்லை. கண்களில் பட்டு விட்டால் அவர் கண்டிக்காமல் இருக்கமாட்டார். பெருந்தன்மையே உருவான ராமலால் அவருடைய அந்தச் செய்கைகளை அவ்வளவாக விரும்பி ஏற்பதில்லை. அதனால் இரண்டொரு சந்தர்ப்பங்களில் பரமானந்தர் ராமலால் இருவருக்கும் இடையே பேச்சுத் தடித்திருக்கிறது; வாக்குவாதம் முற்றியிருக்கிறது. ஆனால் சுபத்திரா நடுவில் குறுக்கிட்டு இருவரையும் தடுத்திருக்கிறாள்; அடிபிடி சண்டையிலிருந்து காப்பாற்றியிருக்கிறாள். பரமானந்தர் படித்த அறிவாளிகளின் குழாத்தைச் சேர்ந்தவர்தாம். அவர் திருமணம் என்று ஒன்று செய்து கொண்டு தமக்கு ஒரு கால் கட்டு கைக் கட்டு போட்டுக் கொள்ளவில்லை. அவரால் ஓரே இடத்தில் நிலைத்திருப்பதும் ஆகாத காரியம். எங்கேயாவது ஊர் சுற்றிக் கொண்டே யிருப்பதைத்தான் அவர் தம் வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்டிருந்தார் என்று கூறினால் மிகையாகாது.

“ராம்லால்! எனக்குப் பதினாயிரம் ரூபாய் கொடு!” என்று பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்பு பரமானந்தர் ஒரு நாள் ராமலாலைக் கேட்டார். அன்றைக்கு முதல் நாள்தான் இருவருக்கும் இடையே பெருஞ் சச்சரவு ஏற்பட்டிருந்தது. “நீ ரூபாய்களை வீண் விரயம் ஆக்கக் கூடாது. மிச்சம் பிடிக்க வேண்டும். சமயத்துக்கு உபயோகப்படும்படியாகக் கொஞ்சம் ரூபாய்களைத் தனியாக எடுத்து வை. இன்று இல்லாவிட்டால் பத்து வருஷங்கள் கழித்தாவது ஏதாவது தேவையோ முடையோ ஏற்படக்கூடும். அப்பொழுது வருத்தப்படுவாய். கையில் காசில்லாதவனை யாருமே பொருட்படுத்தமாட்டார்கள்!” என்றார் பரமானந்தர்.

ராமலாலுக்கு அவருடைய அந்த உபதேசம் பிடிக்கவில்லை. அருவருப்பைத்தான் அளித்தது. எனவே, ஆத்திரத்தில் கொதித்தெழுந்து, “பரமானந்தம்! இம்மாதிரிப் பேசுவதா யிருந்தால் நீ என் வீட்டுப் பக்கம் வரவேண்டாம். ஆமாம், சொல்லிவிட்டேன்!” என்று சீறி விழுந்தார்.

“அப்படியா? ரொம்ப சரி! இதோ போய் விடுகிறேன்!” என்று கூறிப் பரமானந்தர் உடனே எழுந்து சென்று விட்டார். கோபம் குளிர்ந்தவுடன் ராமலாலுக்கு மிகவும் மனவருத்தம் உண்டாயிற்று. இரவு முழுவதும் தூக்கம் பிடிக்கவில்லை. தம் மனைவி சுபத்திராவை எழுப்பி அன்று நடந்த நிகழ்ச்சி முழுவதையும் விவரமாகச் சொன்னார்.

# தேசிய பௌதிக ஆராய்ச்சிக் கழகம்

**நீண்டநாள் நிலைத்து ஈடு கொடுக்கும் ஏ. ஸி. ஸி. சிமெண்டினால் கட்டப்பட்டது.**

புது டெல்லியிலுள்ள தேசிய பௌதிக ஆராய்ச்சிக் கழகம் விஞ்ஞானத்தில் மூலாதார ஆராய்ச்சி, விஞ்ஞான முறைகளைத் தொழில் சிக்கல்களுக்கும் தேவைகளுக்கும் பிரயோகித்தல், ஆகிய இப்பெரு முயற்சிகளுக்காக அமைந்தது. பிரமிக்கத்தகுந்த அதன் புதிய கட்டிடத்தில் ஆராய்ச்சி சாலை அமைப்பின் முற்போக்கான ரீதிகளில் சிறந்தவை பல பொருந்தியிருக்கின்றன. அதை நிர்மாணிப்பதில் பூராவும் உபயோகிக்கப்பட்டது ஏ.ஸி.ஸி. சிமெண்டே. நாட்டின் முன்னேற்றத்திற்காக ஏ.ஸி.ஸி. சிமெண்ட் செய்துவரும் பலன் நிறைந்த இன்றியமையாத தொண்டிற்கு மற்றும் ஓர் உதாரணம்.









**தி அஸோஸியேடட் சிமெண்டு கம்பெனீஸ் லிமிடெட்.**

இவர்களின் வியாபார மானேஜர்கள்

**தி சிமெண்டு மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிட்.**



நோயாளி:—டாக்டர், உடலெல்லாம் நடுங்குகிறது. இதுதான் நான் செய்து கொள்ளும் முதல் ஆப்பரேஷன்......

டாக்டர்:—என்னமோ இதற்கு இப்படி நடுங்குகிறீரே! இதுதான் நான் செய்யும் முதல் ஆப்பரேஷன்...எனக்கு எவ்வளவு நடுக்கம் இருக்கும் அதை யோசனை பண்ணிப் பாருங்கள்.

"ஒரு காரியத்தைச் செய்து விட்டு அப்புறம் வருத்தப்படுவதுதானே உங்கள் சுபாவம்?" என்று தன் கணவரை இனிமையாகக் கடிந்து கொண்டு விட்டு, "நாளைக் காலையில் ஆளை அனுப்பி அவரை அழைத்து வந்துவிடலாம். கவலைப்படாமல் தூங்குங்கள்!" என்றும் சமாதானப் படுத்தினாள் சுபத்திரா.

காலையில் எழுந்ததும் ராமலாலுக்கு ஆளை அனுப்பிப் பரமானந்தரை அழைத்து வர வேண்டிய அவசியம் நேரவில்லை. அவராகவே அந்த மரியாதைக்கு இடம் வைக்காமல் ராமலாலின் வீடு தேடி வந்து விட்டார்.

வந்ததும் வராததுமாக அவர், "ராமலால்! நீதான் உலகம் முழுவதுக்கும் உபகாரம் செய்கிறாயே! எனக்குந்தான் ஒரு உபகாரம் செய்யேன்! எனக்கு இப்பொழுது பதினாயிரம் ரூபாய் வேண்டும். என்மேல் நம்பிக்கையிருந்தால் கொடு. இல்லாவிட்டால் வேண்டாம்!" என்றார் படபட வென்று.

ராமலால் அதற்கு ஒன்றும் பதில் பேசவில்லை. மத்தியானத்துக்குள் பதினாயிரம் ரூபாய் பரமானந்தரின் கையை அடைந்து விட்டது. அன்று இரவு வண்டியிலேயே உலகம் சுற்றுவதற்காகப் புறப்பட்டு விட்டார் பணத்தைப் பெற்றுக்கொண்ட பரமானந்தர்.

இந்தச் சம்பவம் நடந்து பன்னிரண்டு வருஷங்கள் ஓடிவிட்டன. ராமலாலின் வாழ்க்கையிலும் தலைகால் தெரியாத மாபெரும் மாறுதல் ஏற்பட்டு விட்டது. பணம் படைத்திருந்த அவர் ஏழையானார். வயது அதிகமாக ஆக ஏழைமையின் துயரம் அவரை அதிகமாக வாட்டத் தொடங்கியது. சிற்சில சமயம் அவரால் ஏழைமையின் துயரங்களையும் தொல்லைகளையும் சகிக்க முடியவில்லை. ராமலால் வெளியுலகத்தை மறந்தார். சுபத்திராவும் மனோரமாவும்தான் உலகமாகத் திகழ்ந்தார்கள். ராமலாலின் நிகழ்கால வாழ்க்கையைச் சுபத்திராவும் மனோரமாவும் தங்கள் சலியாத உழைப்பினாலும் விடா முயற்சியினாலும் சிரமம் தெரியாமல் இன்பகரமாக்கப் பாடுபட்டுக் கொண்டிருந்தனர். ராமலால் மனோரமாவின் வருங்காலத்தை எண்ணி அதன் கற்பனையிலேயே மூழ்கித் தம் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தார். இடையிடையே சுபத்திராவுக்குப் பரமானந்தரின் நினைவு எழும். ஏன்? ராமலாலுங்கூட அடிக்கடி அவரைப் பற்றிப் பேச்செடுப்பார். பரமானந்தரின் கேலிப் பேச்சும் பரிகாசச் சொற்களும் ராமலாலுக்கு ரொம்ப ரொம்பப் பிடிக்கும். எனவே, அடிக்கடி அவருக்குப் பரமானந்தரின் நினைவு எழுவது இயல்புதானே?

ராமலாலுக்குச் சங்கீதம் என்றால் ரொம்பப் பிரியம். அதுவும் சிதார் வாத்தியம் என்றால் உயிர். ஆனால் சொத்து, சுதந்திரம் எல்லாம் ஏலம் போன பிறகு, அவர் சிதார் வாத்தியத்தைத் தொட்டதே யில்லை; தொட விரும்பியதே இல்லை. ஆயினும் இசைப் பைத்தியம் அதிகம் உள்ளவர் ஆகையால், மனோரமாவுக்குச் சிதார் வாசிக்க நன்றாகக் கற்றுக் கொடுத்திருந்தார். மனோரமாவுக்கு அவர் மீரா, சூரதாஸர் போன்றவர்களின் பக்தி பரவசமான பாடல்களைப் பாடம் செய்து வைத்திருந்தார். மிச்சம் மிருந்திருந்த நிலத்தின் வரும்படியைக் கொண்டு அவருடைய வாழ்க்கை வண்டி ஒருவிதமாக ஓடிக் கொண்டிருந்தது. ஆனால் எப்படி ஓடியது என்பது சுபத்திரா ஒருத்திக்குத்தான் தெரியும்.

சுபத்திரா வெளியே போயிருந்தாள். மனோரமா தையல் வேலை செய்து கொண்டிருந்தாள். ராமலால் மட்டும் தனியே தம் அறையில் இருந்தார். அப்பொழுது அவருக்குப் பழைய நாட்கள் நினைவு வந்தன. அவருடைய மனக் கண் முன்னே தமது குழந்தைப் பருவம் முதற்கொண்டு மனோரமாவின் குழந்தைப் பருவம் வரையுள்ள நிகழ்ச்சிகள் நிழல்படம் போல ஓடின. மனோரமாவின் நினைவு வந்ததுதான் தாமதம், ஏழைமையினால் அவருக்கு ஏற்பட்டுள்ள அவல நிலை, அவருடைய உள்ளத்தை ஊசி கொண்டு குத்தலாயிற்று. அவர் மிகவும் மனம் புழுங்கினார்; இல்லாத வேதனைகளுக்கெல்லாம் இலக்கானார். இதே சமயம்தான் பன்னிரண்டு வருஷங்களாகப் பிரிந்திருந்த அவருடைய அருமை நண்பர் பரமானந்தர் வந்து சேர்ந்தார். ராமலாலின் சிந்தனைப் போக்கு இடம் பெயர்ந்தது. நண்பரைப் பார்த்ததும் கனிந்து உருகி மகிழ்ந்து மனம் பூரித்துப் போனார்.

"மன்னி! ஊர் முழுவதற்கும் ஊழியம் செய்வதாகக் குத்தகைச் சீட்டு எழுதிக் கொடுத்திருக்கிறீர்களா, என்ன? அந்தத் தனவந்தர் டாக்டரோ நர்ஸோ ஏன் வைத்துக் கொள்ளக் கூடாது? ஊழியத்துக்கு நீங்கள்தானா அகப்பட்டீர்கள்?" என்று கேட்டார் பரமானந்தர். பிறகு, "இந்த வயதில் இம்மாதிரி உழைப்பது சரியல்ல!" என்று உபதேசமும் செய்தார்.

"என்ன செய்வது, ஆனந்தரே! மாதவப் பிரஸாதின் வீட்டில் க்ஷயரோகம். எல்லாரும் நம்பிக்கை யிழந்து கைவிரித்து விட்டார்கள். ஆனால் பாவம், அவனுக்கு நான் இல்லாமல் பொழுது போகவில்லை. ரொம்ப சிரமப்படுகிறான். இரவு முழுவதும் ஏக அழுகைதான். நான் போய் இரண்டு ஆறுதல் வார்த்தைகள் சொன்னால்தான் அவனுடைய அழுகை ஓய்கிறது! நல்ல வார்த்தையாக நாலு வார்த்தைகள் சொல்வதனால் நமக்கு என்ன குறைவு?" என்றாள் சுபத்திரா.

"குறைவு ஒன்றும் இல்லை. உங்களைப் போல் ஒரு இலவச நர்ஸ் கிடைத்தால் நான் கூடத்தான் ஆயுள் முழுவதும் நோயாளியாகப் படுத்துக் கொள்ளத் தயாரா யிருப்பேன்!" என்றார் பரமானந்தர்.

ராமலால் அதைக் கேட்டதும் சிரித்து விட்டு, "பரமானந்தம்! உலகம் சுற்றிச் சுற்றிக் கிழடுதட்டிப் போய் விட்டாய்! இருந்தாலும் இந்த உலகத்து ஆசை உன்னை விட்டபாடில்லையே!" என்றார்.

"வயது ஆக ஆக, அறிவு வளர வளர, அநுபவம் முதிர முதிர, 'மனிதன் தன்னலக்காரன். அந்த மனிதன் வாழும் இந்த உலகமும் தன்னலக்கார உலகம்' என்பது தெரிகிறது. அப்படியிருக்கும் பொழுது தன்னலக்காரர்களிடத்தில் எனக்கு எப்படிப் பற்றுதல் ஏற்பட முடியும்?" என்று கேட்டார் பரமானந்தர்.

இம்மாதிரிப் பேச்சில் கொஞ்ச நேரம் கழிந்தது. உணவு அருந்திய பின் ஒரு மணி நேரமாவது படுத்து உறங்குவது ராமலாலின் பழைய வழக்கம். ஆனால் இன்று அந்த வழக்கத்தை அவர் விடும்படி யாகிவிட்டது.

பன்னிரண்டு வருஷங்கள் உலகம் சுற்றியதில் பரமானந்தர் பற்பல விசித்திரமான அநுபவங்களைப் பெற்றிருந்தார். ஆப்கானிஸ்தானம், எகிப்து, மலாயா, சீனா, ஜப்பான், ருஷ்யா, ஜர்மனி ஆகிய நாடுகளில் தாம் செய்த பிரயாண அநுபவத்தை அவர் சொல்லத் தொடங்கவே, பொழுது போவது தெரியாமல் போய் விட்டது. மாலைக் கதிரவன் மலைவாயில் விழுந்து மஞ்சள் நிறக் கிரணங்களைப் பரப்பத் தொடங்கி விட்டான். பிரயாண விருத்தாந்தத்தை விடாமல் சொல்லிக் கொண்டு போன பரமானந்தருக்கே களைப்பு மேலிட்டு அலுப்பு ஏற்பட்டது. ஆகவே, அவர் பேச்சை மாற்றி, "இன்று காலை எனக்கு வீடு காட்டினானே, அந்தப் பையன் யார்?" என்று கேட்டார்.

"யார் என்று எனக்குத் தெரியாது. மனோரமாதான் ஜன்னலருகில் நின்று கொண்டிருந்தாள். அவளுக்கு ஒரு வேளை தெரிந்திருக்கலாம்!" என்றார் ராமலால்.

"சுதாகர்!" என்று மெதுவான குரலில் கூறினாள் மனோரமா. அந்தப் பெயரை உச்சரிக்கும் பொழுது அவளுடைய இருதயம் படபடத்தது. சுதாகர் பக்கத்து வீட்டில் தான் வசித்து வந்தான். மனோரமா அவனைத் தினமும் பார்ப்பது உண்டு. ஆனால் இன்று வரை அவனுடன் அவள் வார்த்தை யாடியதில்லை. 'சுதாகர்!' என்ற பெயரைக் கூட இன்றுதான் அவள் முதன்முதலாகத் தன் வாயால் உச்சரித்தாள். ஒருவேளை அதிக அறிமுகம் இல்லாத வாலிபர்களின் பெயர்களைச் சொல்வதென்றாலே பெண்களுக்கு ஒரு வகை நாணம் ஏற்படுமோ, என்னமோ?

"ரொம்ப நல்ல பையன்!"

சுபத்திரா சுதாகருக்கு ஒரு அத்தாட்சிப் பத்திரமே வழங்கி விட்டாள்.

"உன் உலகத்தில் யாராவது கெட்டவர்கள் உண்டா, மன்னி?" என்று கேட்டார் பரமானந்தர். பிறகு, "என் பேச்சைக் கேட்டு அவனுக்கு ஒரே வியப்பாகப் போயிருக்கும். அவன் கல்லூரியில் படிப்பவன். கல்லூரிக் கல்வியிலே கர்வம் கொண்டவனாகவும் தோன்றுகிறான். நானோ வெறுங் கிழவன். இருந்தாலும் என்பால் அவனைக் கவர்ந்துவிட முடியும் என்ற நம்பிக்கை மட்டும் எனக்கு இருக்கிறது!" என்றார்.

சுபத்திரா சுதாகரைக் கூப்பிட்டனுப்பினாள். சிறிது நேரத்துக்கெல்லாம் அவன் அங்கே வந்து விட்டான்.

அந்த வீட்டுக்குள் அவன் அப்பொழுது தான் முதன் முதலாக நுழைந்திருந்தான். வந்ததும் எல்லோருக்கும் வினயமாக வணக்



"என், சார்! இந்த ரேஸில் எந்தக் குதிரை ஜெயிக்கும்?"
"எனக்கு ரேஸைப் பத்தி ஒன்றும் தெரியாது. இருந்தாலும் நீங்கள் கேட்கிறதினால் சொல்கிறேன்! முதலில் வரும் குதிரைதான் ஜெயிக்கும்!"

கம் தெரிவித்து விட்டு நாகரிகமாகத் தன்னடக்கத்துடன் உட்கார்ந்தான்.

"கல்லூரிக்குப் போய் வந்துவிட்டாயா, அப்பா! பக்கத்து வீட்டில்தான் இருக்கிறாய். இருந்தாலும் இந்தப் பக்கம் வருவதேயில்லை!" என்று ஆரம்பித்தார் ராமலால்.

"எப்படி வருவார்? படிப்பிலிருந்து ஓய்வு கிடைத்தால் அல்லவா வருவதற்கு? இந்தக் காலத்துக் கல்வி முறை இருக்கிறதே, இது களைக் குதவாதது; உதவாக்கரையானது. மனத்தை நல்ல முறையில் பண்படுத்துகிறதோ இல்லையோ, கண்களைக் கெடுத்துவிடுகிறது. விழுந்து விழுந்து படித்துவிட்டு, உத்தியோகத்தைத்தான் நாடவேண்டியிருக்கிறது. ஆனால் வரவர உத்தியோகத்தின் மீதுள்ள நம்பிக்கையும் குறைந்து கொண்டே வந்து, வேலையில்லாத் திண்டாட்டந்தான் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டு வருகிறது. அப்படியிருந்தும் இந்த உதவாக்கரைப் படிப்பில் உள்ள மோகம் மட்டும் கொஞ்சமும் குறையவில்லை!" என்றார் பரமானந்தர்.

"நீங்கள் சொல்வது ஒரு விதத்தில் பார்க்கப் போனால் நியாயம்தான்! இருந்தாலும்..." என்றான் சுதாகர்.

"ஒருவிதத்தில் என்ன? எல்லா விதத்திலும் சரியானதுதான். ஆமாம், உன் பி. ஏ. பட்டத்தை விற்கப் புறப்பட்டால் யாராவது விலைக்கு வாங்கிக் கொள்வார்களா, சொல்? அப்படியே விலைக்கு வாங்கிக் கொண்டாலும் என்ன விலைக்கு வாங்கிக் கொள்வார்கள்?" என்று கேட்டார் பரமானந்தர்.

"கல்வி யறிவினால் ஏற்படும் ஆனந்தம் தான் கல்விக்குக் கிடைக்கும் உண்மையான மதிப்பு, ஊதியம்" என்றான் சுதாகர்.

"இந்த வறட்டுக் கல்வியில் என்ன ஆனந்தத்தைக் கண்டு விட்டாய்? இப்படிக் கேட்கிறேனே என்று கோபிக்காதே! பத்திரிகைகளுக்குக் கட்டுரை எழுதுவதாக இருந்தால் வேண்டுமானால் நீ கூறும் விஷயங்களைச் சேர்த்துக் கொள்ளலாம். உண்மையைக் கேட்கப் போனால் கல்வியினால் கிடைக்கும் ஆனந்தம் வெறும் வறட்டுக் கௌரவமும், வீண் விதண்டா வாதமும்தான். எவ்வளவு படித்து என்னபிரயோசனம்? உள்ளந் திறந்து சிரிக்கவும் முடிவதில்லை, அழவும் முடிவதில்லை. பாடவும் முடிவதில்லை; ஆடவும் முடிவதில்லை. உன் படிப்பில் என்ன ஆனந்தம் இருக்கிறது, சொல்! இந்தக் காலத்துக் கல்வி உள்ளத்து உணர்ச்சிகளுக்கெல்லாம் ஒரு முற்றுப் புள்ளி வைத்துத் தேசப் பிரஷ்டம் என்ற தண்டனையை அல்லவா அளிக்கிறது! நீயே சொல். ஒரு பாட்டுப் பாடி உனது வாட்டமுற்ற மனத்தை உன்னாலேயே மகிழ்வித்துக் கொள்ள முடிகிறதா? இதற்கெல்லாம் பொழுது வைக்காமல் இந்தக் கல்விதான் உன் கையைக் கட்டி மேனாட்டு மோகத்தை வளர்த்து விடுகிறதே!" என்றார் பரமானந்தர்.

"எனக்குப் பாட வராது!" என்று களையிழந்த முகத்துடன் சொன்னான் சுதாகர்.

"பாட வரவேண்டாம். அழவாவது வருமா?"—பரமானந்தர் சற்றுக் கடுமையான ஹாஸ்யத்தையே உபயோகித்து விட்டார். "அப்படியிருக்கும்பொழுது உன்னை நாங்கள் எப்படிக் கல்வி யறிவு பெற்றவன் என்று கருத முடியும்? பார்க்கப் போனால் எங்கள் மனோரமா உன்னை விட எவ்வளவோ படித்தவள். அவளுக்கு அழவும் தெரியும், பாடவும் தெரியும்!" என்றார்.

இவ்விதம் கூறிவிட்டுப் பரமானந்தர் மனோரமாவைப் பார்த்தார். அப்பொழுது மனோரமாவின் மான்விழிகள் பிறர் கண்களுக்குப் படாமல் சுதாகரைப் பார்ப்பதில் ஈடுபட்டிருந்தன. பரமானந்தர் தன்னைப் பார்க்கிறார் என்பதை அறிந்து கொண்ட மனோரமா வெட்கித் தலை குனிந்தாள்.

"இல்லை, இல்லை! எனக்கு ஒன்றும் தெரியாது!"—பாடவேண்டி நேருமே என்ற பயத்தில் சொன்னாள் மனோரமா.

"சாஸ்திரீய சங்கீதம் ஒன்றும் கற்றுக் கொடுக்கவில்லை. ஆனால் பக்தி பரவசமான பஜனைப் பாடல்கள் ஒழுங்காகப் பாடும் பயிற்சி பெற்றிருக்கிறாள். சாரீரம் இனிமையாகவும் குழைவாகவும் இருக்கிறது. ஸ்வர ஞானம் நன்கு பெற்றிருக்கிறாள். சங்கீதத்தின் நுணுக்கங்களைப் புரிந்து கொள்ள மனோரமாவுக்கு வெகு நேரம் பிடிப்பதில்லை!"—மனோரமாவின் அன்புக்குரிய தந்தையான ராமலால் தம் மகளைப் புகழ்ந்து கூறினார். தந்தைக்குத் தம் பெண்ணின் பாண்டித்தியத்தில் அவ்வளவு பெருமை!

"எல்லோருக்கும் எதிரில் இப்படிப் பேசாமல் இருந்தால் அப்பாவுக்கு மனம் தாளாது!" என்று மனோரமா தன் மனத்துள் முணுமுணுத்துக் கொண்டாள். தன்னைப் பாடச் சொல்லி வற்புறுத்துவார்களோ என்ற பயம் அவளுக்கு இப்பொழுது உண்மையாகவே ஏற்பட்டு விட்டது. அந்த ஆபத்திலிருந்து தப்புவதற்கு அவள் உபாயம் தேடலானாள்.

"மனோரமா! ஒரு பாட்டுப் பாடு, அம்மா!" என்று சொல்லி விட்டார் பரமானந்தர், அவளுக்குத் தப்புவதற்கு ஒரு வழி தோன்றுவதற்குள்ளாகவே.

பிறர் எதிரில் பாடுவது என்பது எவ்வளவு சிரம சாத்தியமான விஷயம் என்பது எல்லோருக்கும் தெரிந்ததே. அவள் எத்தனையோ மறுத்தாள்; சாக்குப் போக்குச் சொன்னாள். சாரீரம் சரியில்லை என்று தன் சாரீரத்தின் மீது குற்றஞ் சாட்டினாள். பாட்டுக்கள் பாடம் இல்லை என்று பாசாங்கு செய்தாள். அவள் என்ன சொல்லியும் அவளுடைய ஜபம் சாயவில்லை. எல்லோரும் ஏககாலத்தில் அவள் பாடித்தான் ஆக வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தனர். எனவே, வேறு வழியின்றிப் பாட இசைந்தாள். தொண்டையைக் கனைத்துக் கொண்டு மனத்துள் ராகத்தை முணுமுணுத்துக் கொண்டாள். அவளுடைய முகத்திலே காம்

காலை வேளையில்

# நாள் முழுவதும்



விளையாடின பின்

# புத்துணர்ச்சி



இரவில்

# அளிக்க...






குளுமையான நறுமணம் கொண்ட

## ஹிமாலயா புக்கெ பௌடர்களை உபயோகியுங்கள்

இரண்டு நேர்த்தியான அளவில் பௌடர்கள்



ஹிமாலயா புக்கே ஸ்னோ எல்லா சீதோஷ்ணநிலைகளிலும் சருமத்தைப் பாதுகாக்கிறது.

HBP. 7-X30 TM

பீர்யம் கோடிட்டது. இனிமையான குழை வும் இழைவும் நிறைந்த குரலில் பாடலானள்.

> கருணையே புரிவாய், கருணுகரனே!
> கனிந்து உருகும் இவ்வேழையின் மீது
> கருணையே புரிவாய் கருணுகரனே!

சுதாகர் அதைக் கேட்டு அப்படியே ஸ்தம் பித்துப் போய்விட்டான். ஆகா! மனோரமா வின் சாரீரத்தில்தான் என்ன குழைவு! என்ன தெளிவு! என்ன இனிமை! பாட ஆரம்பித்த சில கணங்களுக்குள்ளேயே பாட் டுக் களை கட்டிவிட்டது. ஆனல் பரமானந்த ரின் கலகல வென்ற சிரிப்பைக் கேட்டு மனோரமா பாதியில் பாட்டை நிறுத்தி விட் டாள். வளவள வென்று பேசும் இந்த வம்புக்காரக் கிழவன் சுத்தக் காட்டு மிராண்டியா யிருப்பான் போலிருக்கிறதே என்று தோன்றியது சுதாகருக்கு.

பரமானந்தரின் சிரிப்பைக் கேட்டதும் ராமலாலுக்குப் பழைய விஷயங்கள் நினைவு வந்தன. முன்பெல்லாம் இந்தப் பாட்டை யாராவது பாடினல் பரமானந்தர் இப்படித் தான் எக்காளம் போட்டுச் சிரிப்பார். கல கல வென்று கை தட்டிச் சிரித்துப் பாட வொட் டாமல் அடிப்பார். இல்லாத இடையூறுகள் எல்லாம் செய்வார்.

அதைக் கேட்ட ராமலால், "மனோரமா! வேறு ஒரு பாட்டுப் பாடேன். பரமானந்தத் துக்கு இந்தப் பாட்டுப் பிடிக்கவில்லை!" என்று விஷயத்தை விளக்கினர்.

சுதாகரனல் பேசாமல் இருக்க முடிய வில்லை. "இந்தப் பாட்டில் என்ன கெடுதல் என்றுதான் எனக்குப் புரியவில்லை. இதை விட இனிமையான பாட்டு வேறு என்ன இருக்க முடியும்?" என்று கேட்டான்.

"இதுதான் நீங்கள் பெற்ற கல்வியின் யோக்யதை போலும். இப்பொழுதுதான் யௌவனப் பூங்காவின் வாசற்படியிலே காலடி எடுத்து வைத்திருக்கிறீர்கள். இப் பொழுதே உயிர் போய் விட்டாற்போல் பயந்து பகவானை உதவிக்கு அழைக்க ஆரம் பித்து விட்டால் அப்புறம் பாக்கி நாள் என்ன ஆவது? உயிர்போகும் சமயத்தில் வேண்டுமானல் இந்தப் பாட்டைப் பாடிக் கொள்ளலாம். இப்பொழுது உற்சாகமும் இன்பமும் தரும் பாடல்தான் பாடவேண் டும்; கேட்கவும் வேண்டும்......குழந்தாய், மனோரமா! வேறு ஒரு பாட்டுப் பாடு, அம்மா!" என்றார் பரமானந்தர். மனோரமா வேறு ஒரு பாட்டைப் பாட ஆரம்பித்தாள்.

> "அன்புக்கும் உண்டோ அடைக்கும் தாள்
> அன்பில் பிறந்த இவ்வுலகந்தனிலே
> அன்புக்கும் உண்டோ அடைக்கும் தாள்!"

மனோரமாவின் இனிய குரலில் எல்லோ ருமே மதி மயங்கினர். எல்லோருடைய ஆத் மாவும் அன்புக் கயிற்றில் கட்டுண்டதாகவே தோன்றியது. எல்லோரும் தன் உடல், தன் நிலை மறந்து பாடலின் இனிமையிலே



"என்னைப் பற்றி உங்கள் பத்திரிகை யில் பொய்யும் புளுகுமாக எழுதியிருக் கிறீர்களே! இது நியாயமா?"

"உங்களைப் பற்றிய உண்மைகளை எழுதினுல் இன்னும் உங்களுக்குச் சிரம மாக அல்லவா போய் விடும்? எது நியாயம்?"

ஒன்றி விட்டனர். சாந்தமும் சாத்விகமும் நிறைந்த சூழ் நிலை அவ்விடத்தை ஆட் கொண்டது. பரமானந்தர் தம் தலையை ஆட்டித் தமது இயல்பான சுதந்திர உணர்ச்சி யுடன் பாடலைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

கீழேயிருந்து யாரோ, "மனோரமா அக்கா! நான் மேலே வரலாமா?" என்று குரல் கொடுத்தார்கள்.

குரலைக் கேட்டதும் மனோரமாவின் முகத் தில் அச்சம் குடிபுகுந்தது. பரமானந்தர் அதைக் கவனித்தார். ராமலால், "இந்த வேளையில் யார் கூப்பிடுகிறார்கள்?" என்று மனோரமாவைப் பார்த்துக் கேட்டார்.

"யாரும் இல்லை, நான் போய்ப் பார்த்து வருகிறேன்!" என்று கூறித் தன் பயத்தைப் போக்கிக் கொள்ள எண்ணி மனோரமா படி யிறங்குவதற்காக எழுந்தாள். அதற்குள் அந்த அறிமுகம் இல்லாத வாலிபனே உயர வந்து விட்டான்.

மனோரமாவின் முகம் வாடிவிட்டது. இதைக் கண்ட பரமானந்தர் ஏதோ சொல்ல வாய் எடுத்தார். அதற்கு முன்பாகவே, ராமலால் "யாரைக் கேட்கிறாய்?" என்று அந்த வாலிபனைப் பார்த்துக் கேட்டார்.

"மனோரமா அக்காவைத்தான்! எனக்கு அவளிடம் கொஞ்சம் வேலையிருக்கிறது!" என்றான் அந்த வாலிபன்.

"உனக்கு மனோரமாவைப் பார்க்க வேறு சமயம் கிடைக்கவில்லையா? இப்பொழுது தானா அதற்குப் பொழுது கிடைத்தது?" என்று கோபித்துக் கொண்டார் ராமலால்.

"ஐயா! பதினைந்து நாட்களுக்கு மேல் ஆகிவிட்டன. மனோரமா வரவில்லை. அதனல் நான் வரும்படியாகிவிட்டது. அவளுக்கு நான் பணம் கொடுக்க வேண்டும். பிறர் பொருளை நான் எவ்வளவு நாள்தான் வைத் துக் கொண்டிருப்பது? அதற்காகத்தான் வந்தேன்" என்றான் அந்த வாலிபன்.

"நீ மனோரமாவுக்குப் பணம் கொடுக்க வேண்டுமா?" என்று கேட்ட ராமலாலின் நினைவுத் திரையிலே எண்ணற்ற எண் ணங்கள் எழுந்து தேனாகக் கொட்டின. அவ ருடைய கண்கள் கொடூரமாயின. (தொடரும்)

# தலை தீபாவளி

குமாரி

ராமநாதனுக்கு அன்று ஒன்றுமே ஓட வில்லை. ஏதோ பித்துப் பிடித்தவன்போல் உட்கார்ந்திருந்தான். அவன் அறைக் கதவு மெதுவாகத் திறந்தது. குமாஸ்தா சோமு மிகவும் பய்யமாக நுழைந்தான். ராமநாதன் அவன் நுழைந்ததைக் கூடக் கவனிக்கவில்லை.

"சார்" என்றான் சோமு.

"என்ன! மணி இன்னும் மூன்று ஆகவில்லை. அதற்குள் வீட்டுக்குப் போகவேணுமோ!" என்று உறுமினான் ராமநாதன்.

"இல்லை சார், தீபாவளிக்கு ஊருக்குப் போக ஒருவாரம் லீவு கேட்டிருந்தேன். அதுபற்றி..." என்று இழுத்தான் சோமு.

"என்ன தீபாவளி! கம்பெனியே தீபாவளி ஆகிற கதியில்தான் போகிறது. இந்த லீவுக் கடிதங்களைக்கண்டாலே எனக்குப் பிடிப்பதில்லை."

"இல்லை, சார். இந்த வருஷம் தலை தீபாவளி – அவசியம் நான்கு நாட்கள் முன்னதாகவே வரும்படி அங்கிருந்து கடிதம்......"

"சரி, சரி, நாற்பது நாள் முன்னாலேயே வேண்டுமானாலும் போ. என்னைத் தொந்தரவு செய்யாதே" என்று கூறியவனுடைய் சுழல் நாற்காலியை விட்டுச் சட்டென்று எழுந்திருந்து வெளியே சென்றான் ராமநாதன். சுழல் நாற்காலி சோமுவைப் பார்த்துச் சிரிப்பது போல் சுற்றிச் சுழன்று வந்து கொண்டிருந்தது.

சோமு காரியாலய அறையை விட்டு வெளியே வருவதற்கும் வாசலில் கார் புறப்படுவதற்கும் சரியாகயிருந்தது. லெட்ஜர் கிளார்க் அகோரம் கேலியாகச் சோமுவைப் பார்த்தான்.

"என்ன சோமு மானேஜரைத் திடீரென்று போகப் பண்ணி விட்டாய்!" என்றான்.

"ஒன்றுமில்லை. தீபாவளிக்கு ஊருக்குப் போக லீவைப் பற்றிச் சொல்லப் போனால் ரொம்பவும் கோபமாகப் பேசி விட்டார்" என்றான் சோமு.

"ஆமாம், கலியாணம் ஆகியும் மனைவியைக் கூட்டிக் கொள்ளாமலிருப்பவனிடம் போய் நீ தலைதீபாவளி புராணம் படித்தால் அவன் வேறு என்ன பண்ணுவான்!" என்றார் இன்னொரு குமாஸ்தா. அத்துடன் அவர்கள் பேச்சு ஒருவாறு முடிந்தது.

* * *

ராமநாதன் வீட்டுக்கு வந்ததும் காரைக்கூட ஷெட்டில் நிறுத்தாமல் சோபாவில் வந்து விழுந்தான். 'தலை தீபாவளி' என்ற சொல் அவன் மனத்தை என்னவோ செய்தது. தனக்குக் கீழ் வேலை செய்யும் ஒரு குமாஸ்தாகூட எவ்வளவு ஆவலுடன் தீபாவளியின் வரவை நோக்குகிறான். தனக்கு அந்தப் பாக்கியம் இல்லையே! ராமநாதனின் மனம் ஒரு வருஷம் பின் சென்று அவன் தலை தீபாவளிச் சம்பவங்களை அவன் கண் முன்னே கொண்டு வந்து நிறுத்தியது. ராமநாதன் ஒரு நீண்ட பெருமூச்செறிந்தான்.

"விஜயா கம்பெனி ஸ்டாக் புரோகர்ஸ்" என்ற பெயர் சென்னைமா நகரின் பங்கு மார்க்கெட்டில் மிகவும் பிரசித்தி பெற்றது. அதன் மானேஜர்தான் ராமநாதன். அவன் கம்பெனியின் முன்னேற்றத்திற்கு மிகவும் உழைத்திருக்கிறான். தந்தையைச் சிறு வயதிலேயே இழந்த ராமநாதன் தாயின் பராமரிப்பிலே வளர்ந்து எம். ஏ. படித்துத் தேறினான். கலாசாலையில் அவன்தான் முதலாவதாகயிருந்தான். பொருளாதாரத்தில் தேர்ந்தவன். விஜயா கம்பெனியில் சாதாரண குமாஸ்தாவாகப் புகுந்து வெகு சீக்கிரம் மானேஜராக உயர்ந்து விட்டதில் வியப்பொன்றுமில்லை.

ஆனால் அவன் மானேஜரானதைப் பார்க்க அவன் தாயார் கொடுத்து வைக்கவில்லை. அவனுக்குக் கலியாணம் பண்ணிப் பார்க்கவில்லையே,



என்ற பெரும் குறையுடனே அவள் மறைந்தாள். தாயார் இறக்கும் வரையில் கம்பெனியை முன்னுக்குக் கொண்டு வருவதில் அல்லும் பகலும் உழைத்த ராமநாதன் கலியாணத்துக்கு இசையவே யில்லை. தாய் போன பின்பும் அவன் அதைப்பற்றிச் சிந்திக்கவேயில்லை. ஆனால் இதெல்லாம் லலிதாவை அவன் பார்க்கும் வரைதான்.

"குபேரா பாங்கி" மூழ்கிய சமயம் அது. பங்கு மார்க்கெட்டில் பெரிய கலவரம். பலபேர்கள் லட்சம் லட்சமாய் இழந்தனர். ஆயினும் ராமநாதனின் திறமையால் விஜயா கம்பெனியை ஆதரித்தவர்களின் பங்குகளெல்லாம் பாங்கி மூழ்குவதற்கு முன்பே மாற்றப்பட்டு விட்டன. அன்று அப்படிக் காப்பாற்றப்பட்ட அனைவரும் அவனைப் போற்றினர். திவான்பகதூர் செல்வ கேசவ முதலியாரும் அவர்களுள் ஒருவர். அவர் பணம் நாற்பதினாயிரம் ரூபாய் காப்பாற்றப் பட்டது. அவரும் அவர் மகள் லலிதாவும் ராமநாதனிடம்

தங்கள் நன்றியைத் தெரிவிக்க வந்தனர். லலிதா பி. எஸ்ஸி. படித்துத் தேறியவள். அறிவும் ஆற்றலுமிக்கவள். துருதுருவெனப் பேசிப் பழகும் அவளிடம் ராமநாதன் மனமிழந்ததில் ஆச்சர்யமொன்றுமில்லை.

அன்று முதல் லலிதா, தகப்பனாரின் பங்கு மார்க்கட் நிலவரங்களில் சிரத்தை எடுத்துக் கொண்டாள். விஜயா கம்பெனிக்கு அவள் வருவது அதிகமாயிற்று. கடைசியில் ஒருநாள் திவான் பகதூர் முதலியாரின் மகள் லலிதா பி. எஸ்ஸிக்கும் விஜயா கம்பெனி மானேஜர் ராமநாதன் எம். ஏ.க்கும் விமரிசையாக விவாகம் நடந்தது. தம்பதிகளின் புது வாழ்க்கை உல்லாச பிரயாணங்களிலும், வேடிக்கை விநோதங்களிலும் ஆரம்பமாயிற்று. ராமநாதன் மனைவியைக் கண்டு மகிழ்ந்தான். சிறிது நாட்கள் தான் அவன் மகிழ்ச்சியெல்லாம். ஏன்! அவன் மனத்தை உறுத்தும் விஷயங்கள் சில நடந்தன. தினமும் லலிதாவுக்குக் குறைந்தது பத்துக் கடிதங்களாவது வரும். யார் எழுதியிருப்பார்களோ! ராமநாதன் கேட்டதில்லை. கேட்டால் லலிதா விரும்புவாளோ என்னவோ என்ற பயம், கூச்சம் என்று கூடச் சொல்லலாம். லலிதாவும் அவற்றை அவனிடம் காட்டுவதில்லை. தவறாமல் எல்லாவற்றிற்கும் உடனே பதில் எழுதி விடுவாள். இப்படியாக வளர்ந்து கொண்டே போன சந்தேகம் தீபாவளியின்போது வெடித்தே விட்டது. அவன் அவளை ஒன்றும் கேட்பதில்லை. ஆனாலும் சந்தேகச் சுமை வளர்ந்து கொண்டே போயிற்று. என்றாவது ஒருநாள் அது வெடிக்க வேண்டியதுதானே.



* * *

தலை தீபாவளி. என்ன அருமையான நாள். மனிதன் வாழ்க்கையில் கலியாண நாள் எப்படி முக்கியமானதோ அதேபோல்தான் தலை தீபாவளியும். அந்த நாளை நினைக்கும் போதெல்லாம் ராமநாதனின் மூளை கொதித்தது. அன்று தலை தீபாவளி. திவான்பகதூர் முதலியார் வீடே அல்லோல கல்லோலப் பட்டது. காலையில் யாவரும் ஸ்நானம் செய்துவிட்டுச் சிற்றுண்டி அருந்த உட்கார்ந்தனர். லலிதாவைக் காணவில்லை.

"லலிதா எங்கே" என்றான் ராமநாதன்.

"தெரியவில்லையே, காலையில் எங்கோ காரில் போனாளே தலை தீபாவளியும் அதுவுமாய்" என்றார் முதலியார் சாவதானமாக.

அவர் எதையோ ஒளிப்பதுபோல் ராமநாதனுக்குப் பட்டது. "உங்களிடம் கூடச் சொல்லாமல் போய் விட்டாளோ!" என்றான் மிகுந்த வெறுப்புக் கலந்த குரலில்.

"தாயை இழந்த லலிதாவை நான் எப்போதுமே எதுவும் சொல்வதில்லை. அவள் இஷ்டம்போல் நடக்க உரிமை கொடுத்திருக்கிறேன்" என்று சர்வ சகஜமாய்க் கூறினார் முதலியார்.

ராமநாதனுக்கு அவர் கூறியது சுருக்கென்றது. முதலியார் தன்னை ஏளனம் செய்கிறார் என்று எண்ணியவனாய் அவன் ஏதோ பதில் சொல்ல ஆரம்பிக்கு முன் கார் வந்து நின்றது. லலிதாவும் மற்றொரு இளைஞனும் காரிலிருந்து இறங்கினர். இருவரும் ஏதோ பேசிச் சிரித்துக்கொண்டே வந்தனர். ராமநாதன் திடுக்கிட்டான்.

"அப்பா! இவர்தான் என் தோழி சுந்தரியின் சகோதரர். லண்டன் சென்று திரும்பியவர். சென்னையில் பெரிய பாரிஸ்டர்" என்று அறிமுகப் படுத்தினாள். சேகரும்—அதுதான் அந்த பாரிஸ்டரின் பெயர்—வணக்கம் செலுத்திவிட்டு உட்கார்ந்தான். சிற்றுண்டி விருந்து முடிந்தது. ராமநாதன் குழம்பிய மனத்துடன் மாடியிலுள்ள அவன் அறையில் போய்ப் படுத்துவிட்டான். சிறிது நேரம் கழித்து லலிதா அவன் அறைக்கு வந்தாள். அவனால் பொறுக்கவே முடியவில்லை.

"ஏன் லலிதா! அந்தப் பாரிஸ்டருக்குக் காலையில் இங்கு என்ன வேலை!" என்றான் சிறிது கோபமாக.

லலிதா சிரித்துக் கொண்டே, "நமக்குள் விவாகரத்துக்கு ஏற்பாடு செய்கிறேன்" என்றாள் அவளது வழக்கமான குறும்புத் தனத்துடன்.

ராமநாதன் மேற்கொண்டு பேச விரும்பாதவனாய்க் கீழே இறங்கித் தோட்டத்துக்குள் நுழைந்தான். அந்தக் கோப நிலையில் அவனுக்கு லலிதாவின் ஹாஸ்யம் எரிச்சலைக் கொடுத்தது. தோட்டத்தில் வேலைக்கார முனுசாமியும் அவன் மனைவியும் வெகு சுவாரஸ்யமாகப் பேசிக் கொண்டிருந்தனர். ராமநாதன் நின்று ஒட்டுக் கேட்டான்.

முனுசாமியின் மனைவி பிரசவத்திற்காகத் தாய் வீடு போய் நான்கு நாள் முன்புதான் திரும்பி வந்திருந்தாள். ஆகவே லலிதாவின் கலியாணத்தின் போது அவள் இல்லை.

"ஏ மச்சான்! யாரு மாப்பிள்ளை அய்யா! காலையிலே வாசல்லே இரண்டு அய்யாவைப் பார்த்தேனே!" என்று கேட்டாள் முனுசாமியிடம்.

"ஊம், இரண்டு பேருமே மாப்பிள்ளைங்க தான். ஒருத்தர் தாலி கட்டியவர். இன்னொருத்தர் கட்டாதவர். அவ்வளவுதான்" என்றான் ஏளனமாக.

இதைக் கேட்டதும் ராமநாதன் தீயை மிதித்தவன் போல் துள்ளினான். முனுசாமி வெகு காலமாக முதலியார் வீட்டிலிருப்பவன். அவனுக்குத் தெரியாத ரகசியமே இருக்க முடியாதல்லவா! 'ஓஹோ' அப்படியானால் சேகரும் லலிதாவும்......' அதற்குமேல் நினைத்துப் பார்க்க முடியாதவனாய் இரண்டே எட்டில் படிகளைக் கடந்து மாடியை அடைந்து விட்டான் ராமநாதன்.

சாப்பாட்டு வேளையில் மாப்பிள்ளையைத் தேடிய முதலியாருக்கு அவன் விட்டுப் போன கடிதம் தான் கிடைத்தது. "சென்னைக்குப் போகிறேன். மிகவும் அவசரம். தங்கள் அன்புக்கு மிக்க நன்றி—ராமநாதன்."

உடனே காரை எடுத்துக் கொண்டு முதலியாரும் லலிதாவும் பறந்தனர். ராமநாதனுடன் எவ்வளவோ மன்றாடியும் அவன் லலிதாவைப் பார்க்கக் கூடச் சம்மதிக்கவில்லை. லலிதா கெஞ்சினாள். "ஏன் உனது பாரிஸ்டரிடம் கேஸ் போடச் சொல்வேன்" என்று கடகடச் சொல்லிவிட்டு உள்ளே சென்று விட்டான். படித்த பெண்ணான லலிதாவுக்கு அதற்குமேல் அங்கு நிற்க மனமில்லை. காலம் செல்லச் செல்ல அவன் மனம் மாறும் என்ற எண்ணத்தில் தந்தையுடன் வீடு திரும்பினாள்.

தலை தீபாவளிக்குப் பின்பு ராமநாதன் தனி வாழ்க்கை நடத்துகிறான். லலிதா கடிதம் எழுதுவாள். பதில் போடுவதில்லை. சேகருக்கும் லலிதாவுக்கும் கலியாணத்திற்கு முன்பே உறவு உண்டு. மணமான பின்புகூடக் கடிதப் போக்குவரத்து நடந்து வந்ததைப் பார்த்தபோது ராமநாதனுக்கு முனுசாமி சொன்னது சரி என்று பட்டது. அவனுக்கு முன்பு லலிதாவிற்குப் பிரதி தினம் வந்த அத்தனை கடிதங்களும் சேகர் எழுதியவைதானோ என்று கூட அவன் எண்ணினான்.

* * *

அன்று சோமு வந்து தலை தீபாவளியைப் பற்றிச் சொன்னவுடன் இந்தச் சம்பவங்களெல்லாம் அவன் ஆத்திரத்தைத் தூண்டி விட்டன. ஆம்; மறுபடியும் வந்து விட்டது தீபாவளி. அந்தச் சொல் எவ்வளவோ பொருளாதார நெருக்கடிகளை அனாயசமாகச் சமாளித்த ராமநாதனையே வேதனை கொள்ளச் செய்து விட்டது.

மனோவேதனை தீரக் கடற்கரைக்காவது போகலாம் என்று நடந்தே கடற்கரைக்குச் சென்றான் ராமநாதன். ரேடியோவின் அலறலிலிருந்து தப்ப நினைத்து ஒதுப்புறமாக உட்கார்ந்தான். அவனுக்கு எதிரில் ஒரு கட்டு மரம் கிடந்தது. அதன் பக்கத்தில் அமர்ந்த ராமநாதனுக்கு அதன் மறுபுறம் அமர்ந்திருக்கும் இருவர் பேசிக் கொள்வது தெளிவாகக் கேட்டது.

"அவருக்கென்ன தெரியப் போகிறது தலை தீபாவளியின் அருமை. வாழ்க்கையை அனுபவிக்கத் தெரியாத பேர் வழி. ஏதோ பாங்கு மார்க்கெட்டில் மூளை செல்கிறதே தவிர வாழ்க்கை சூன்யம்."—என்ன! டைபிஸ்ட் ராஜுவின் குரலல்லவா அது? யார் பதில் சொல்கிறது? "இல்லையப்பா விஷயம் வேறு. இப்பத்தான் தெரிகிறது. கலியாணத்துக்கு முன்பே நம் மானேஜருக்கு யாரோ ஒருத்தியுடன் சம்பந்தமாம். அதற்குத் தாயார் சம்மதிக்க வில்லையாம். அதனால்தான் தாயார் இருக்கிற வரைக்கும் கலியாணம் நடக்கவில்லை. பின்னால் நம் முதலியார் சொத்துக்களையும் ஒரே மகளையும் கண்ட உடனே மனம் மாறி முதலியார் மாப்பிள்ளை ஆகி விட்டார். இந்த விஷயம் தெரிந்த உடன் பழைய ஆசாமி இவருடைய மனைவியிடம் போய் விஷயத்தை உடைத்தாளாம். அதனால்தான் மனைவிக்கும் இவருக்கும் மனஸ்தாபம். அதுதான் தனிவாசம் என்று கேள்வி." இது சோமுவின் குரல்.

"அது சரி, யார் அந்தப் பெண்!" என்று கேட்டான் ராஜு.

"அதுதான் அப்பா! முந்தி அடிக்கடி ஒண்ணு வருமே, ஒண்ணரைக் கண் டோரியா. மானேஜர் கூட அவளுக்கு எங்கேயோ வேலை வாங்கி வைத்தாரே—அந்தப் பெண்தானாம். இவர் காரிலேயே கூடச் சில சமயத்திலே வருவாள்."

"ஓஹோ! இப்ப விஷயம் விளங்குகிறது!" இருவரும் சிரித்தார்கள்.

ராமநாதன் தலை சுற்றியது. குளிர்ந்த கடற்காற்றுகூட அவன் மேல் பட்டு சூடாகியது. பேசியவர்கள் இருவரும் தன்னைப் பார்ப்பதற்குள் விடுவிடென்று எழுந்து வீட்டைப் பார்க்க நடந்தான். வீட்டுக்குள் சென்றதும் உலக ஞானம் உதயமாகி விட்டது அவனுக்கு.

ஆம்! எனக்கு அவ்வளவும் வேண்டியது தான். என் தூரத்து உறவினரின் மகள் விமலாவிற்கு வேலை தேடிக் கொடுக்கத் தான் முயன்றதையும் என் காரில் அவள் வந்ததையும் உலகம் எப்படிப் பார்க்கிறது. ஆம், அவள் என் காரில் வந்தது உண்மைதான். ஆனால் உலகம் அதை நம்புமா! வேறு மாதிரியாகத்தானே அதுபற்றி நினைக்கும்.

அதே மாதிரிதான் லலிதா விஷயமும் இருக்க வேண்டும். ஏன் இருக்கக் கூடாது? நாம் நீர விசாரித்தோமா! இல்லை. ஏன், அப்படிப் பாரிஸ்டர் மீது உண்மையிலேயே அன்பாயிருக்கும் பட்சத்தில் அவனையே அவள் மணந்து கொண்டிருக்கலாமே. அதற்குத் தடையே இல்லையே—ஆமாம்—லலிதா கூறியதுபோல உண்மையாகவே தீபாவளியன்று கந்தரியைப் பார்க்கப் போனவள், அவள் இல்லாததால் திரும்பிய சமயம் பாரிஸ்டரும் அவள் தந்தையைத் தற்செயலாகப் பார்க்க வருவதால் கூட வந்ததாகச் சொன்னது உண்மைதானே! ஏன் இருக்கக்கூடாது! வாஸ்தவமாகவே பாரிஸ்டர் மீது கள்ள நட்பு இருப்பின் என் முன் அவனை அழைத்து வருவாளா—ஸ்டாக்புரோக்கர் ராமநாதன் மனம் தீவிரமாக வேலை செய்தது.

ஆம் வாஸ்தவம்; ஆனால் முனுசாமி கூறியது! சோமு கூறியதைப் போல் வெறும் வதந்தியாக இருக்கக்கூடாதா! உண்மை; உலகம் பலவிதம். நூறு பேர் நூறு விதம் சொல்லலாம். தான் ஒரு அவசரக்காரன் என்பதை உணர்ந்தான். ஒரு வாரம் முன்புகூட லலிதா எழுதிய கடிதம் பிரித்துப் பார்க்காமலே கிழிக்கப்பட்டது. குப்பைக் கூடையிலுள்ள அந்தத் துண்டுகளை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

* * *

மறு நாள் காலை அவன் காரியாலயத்துக்கு வந்ததும் சோமுவை அவனாகவே கூப்பிட்டு, "உனக்கு ஒரு வாரம் லீவு போதுமா! எடுத்துக் கொள்!" என்றான். இதைக் கேட்ட காரியாலய சிப்பந்திகள் அத்தனை பேரும் ஆச்சரியப்பட்டனர்.

ஆனால் மறுநாள் லலிதா அதைவிட ஆச்சரியமடைந்தாள். திடீரென காரிலிருந்து இறங்கிய கணவனைக் கண்டதும், ராமநாதன் லலிதாவிடம் மறுபடியும் என்றும் பிரிக்க முடியாதபடி சேர்ந்து விட்டான். தனிமையில் விடப்பட்ட தம்பதிகள் இருவரும் நடந்ததை மறந்து, சிரித்து விளையாடினார்கள். "இனிமேல் விளையாட்டாகச் சொன்னால் அது வினையாக முடியாதே!" என்று லலிதா குறும்பாகத் தன் கணவனைக் கேட்டாள். அதற்குள் முதலியார் கனைத்துக் கொண்டே, "என்னமோ நீங்கள் போன வருஷம் என்னுடைய பணம் காற்பதினாயிரத்தைக் காப்பாற்றினீர்கள்! ஆனால் இந்த வருஷம் அதைவிட விலையுயர்ந்த என் ஒரே மகளைக் காப்பாற்றி விட்டீர்கள்!" என்று சொல்லிக் கொண்டே வந்தார். அன்று அந்த வீடே குதூகலத்தில் ஆழ்ந்து கிடந்தது.

பதின்மூன்றுவது அகில இந்திய

# காதி, கைத்தறி, சுதேசி & கைத்தொழில் பொருட்காட்சி

## சேலம் 1953

(சேலம் நகர சபையால் நடத்தப்படுவது)

**2-8-1953 முதல் 23-8-1953 முடிய**

1. பொருட்காட்சி சேலம் நகரின் மத்தியிலுள்ள விஸ்தாரமான போஸ் மைதானத்தில் நடைபெறும். ஆண்டுதோறும் நடைபெறும். ஸ்ரீ மாரியம்மன் திருவிழாவின்போது பொருட்காட்சி நடைபெறுவதால் சுற்றியுள்ள தாலூக்காக்களிலிருந்து ஏராளமான ஜனத்திரள் கூடுகிறது.
2. பொருட்காட்சிக் கலையரங்கில் தினந்தோறும் மாலையில் இசை, நடன, நாடக நிகழ்ச்சிகள் நடைபெறும்.
3. ஆகஸ்டு மாதம் 3-ம் தேதி முதல் 9-ம் தேதி முடிய அம்மாப்பேட்டை, கடலூர் மெயின் ரோடை அடுத்து, மதுரை வீரன் கோவில் சமீபமுள்ள திறந்த வெளியில் மாட்டுச் சந்தை நடைபெறும்.

விவரங்களுக்குக் காரியதரிசிக்கு உடனே எழுதவும்

எம். எஸ். தல்வார்,
கமிஷனர் & காரியதரிசி

---

குடும்பத்திற்கு
குதூகலம் அளிப்பவை

**TSR**




சென்னை நகரத்திற்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்: சுராஜ் ஏஜன்ஸீஸ், 87, ஜானி ஜான்கான் ரோடு, ராயப்பேட்டை, மதுரை, கோயமுத்தூர், பாலக்காடு, நீலகிரிக்கு, சேலம் ஏஜண்டுகள்: B. பாலபட்டாபி செட்டியார், (1933-ல் ஸ்தாபிக்கப்பட்டது), கோயமுத்தூர். பம்பாய்க்கு ஏஜண்டுகள்: சர்மயா ஸ்டோர்ஸ், மாதுங்கா (G. I. P.)

# இதோ! நீங்கள் விரும்பியிருந்த கார் பினிஷ்!




அடித்தாற்போல்

சொல்லுங்கள்

**ஷாலிமார்**

செல்லுலோஸ்
கார் பினிஷ்களை
குறிப்பிடுங்கள்!



- 38 வர்ணங்களில் கிடைக்கிறது.
- அதிக கெட்டியாக உலரக் கூடியது. நீடித்து நிற்கக்கூடியது.
- எண்ணெ, பெட்ரோல் முதலியவை உட்புக முடியாதது.
- காரம், அமிலம் முதலியவைகளை எதிர்க்கக் கூடியது.
- பாலிஷ் செய்து வந்தால் "பிரகாசமான" உருவம் மங்காமல் வெகுநாள் நீடித்திருக்கும்.
- இது ஒரு ஷாலிமார் தயாரிப்பு.




**ஷாலிமார்**

செல்லுலோஸ் கார் பினிஷ்கள்

SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., LTD.

POST BOX 136, MADRAS-1

Importers & Distributors for Ceylon:
LEWIS BROWN & CO., LTD., POST BOX 85, COLOMBO

# சபேசனின் தங்கை

ராமப்ரியா

சரவணன்.

"ஆமாம்! என்றைக்குச் சென்னைக்குப் புறப்படுவதாக உத்தேசம்? உங்கள் அம்மாவின் காரியங்கள் எல்லாம் முடிந்து விட்ட பிறகு இங்கு என்ன வேலை நமக்கு? என்னால் இந்தப் பட்டிக் காட்டில் இருக்கவே முடியவில்லை. நீங்கள் வராவிட்டால் நானாவது குழந்தைகளை அழைத்துக் கொண்டு சென்னைக்குப் போய்விடுகிறேன்!" என்று மூச்சு விடாமல் பொரிந்து கொட்டினாள் காவேரி.

சபேசன் மனைவியை ஏற இறங்கப் பார்த்துக் கொண்டு, "என்ன அவசரம் காவேரி! அம்மா போய்விட்டாள் என்ற தந்தியைப் பார்த்ததும் எவ்வளவு உருக்கமாக அழுதாய்! அம்மாவோடு கூடவே நீயும் போய்விடுவாயோ என்று நான் நடுங்கிப் போய் விட்டேன். அப்பாவை யார் பார்த்துக் கொள்வார்கள் என்று மாய்ந்து போனாயே! இப்பொழுது அப்பாவை இந்தத் தள்ளாத வயதில் யார் பார்த்துக் கொள்வார்கள்? இப்பொழுது குழந்தைகளுக்கும் லீவுதானே? சென்னைக்குப் போக என்ன அவசரம்!" என்று குத்தலாகக் கேட்டான்.

"வாஸ்தவம்தான்! நான் உண்மையாக அங்கலாய்ப்புடன் அழுததை நீங்கள் சொல்லிக் காண்பிக்க மாட்டீர்களா? அப்பாவை உங்கள் தங்கை ருக்கு பன்மடங்கு அதிகமாகப் பார்த்துக் கொள்வாள். அப்பாவும் பெண்ணும் நேற்று குசு குசுவென்று ஏதோ ரகசியம் பேசிக் கொண்டார்கள். என்ன விஷயமோ தெரியவில்லை. உங்கள் அம்மாவுக்குக் கல்லுக் கல்லாக எத்தனை நகைகள் இருந்தன! பதினாயிரம் ரூபாய்க்குக் குறையாமல் இருந்ததல்லவா? குழந்தை பத்மா தனக்கு சங்கிலி வேண்டுமென்று ரொம்ப நாளாக ஆசைப்பட்டு வருகிறாள். அம்மாவின்

மூறுக்குச் சங்கிலியை அவனை விட்டுக் கேட்கச் சொன்னேன். குழந்தை தாத்தாவிடம் கேட்டாள். அதற்கு உங்கள் அப்பா என்ன சொன்னார் தெரியுமா? பேத்தியை அருமையாய்த் தடவிக் கொடுத்துக் கொண்டு, 'அம்மா, குழந்தே! உன் பாட்டியின் நகை ஒன்று கூட உங்களுக்கு மிஞ்சவில்லையே, அம்மா! கடன்காரன் எல்லாவற்றையும் கொண்டுபோய்விட்டானே! என் கண்ணே, உங்களுக்குப் போட்டு மகிழக் கொடுத்து வைக்காத பாவியாகி விட்டேனே! நான் பரம ஏழையாகி விட்டேனே' என்று புலம்பி முதலைக் கண்ணீர் விட்டார். கடன் வருகிற மனுஷரைப் பார்த்தால் தெரியாதா? பட்டிக்காட்டில் இருக்கும் அவர்கள் நம்மைப் போல் தாம்தூம் என்று செலவு செய்யும் வழக்கம் உடையவர்கள் இல்லையே! எல்லாவற்றையும் கையில் அமுக்கமாக வைத்துக் கொண்டு உங்கள் தங்கையிடம் கொடுத்துவிட வேண்டும் என்ற எண்ணம்போல் இருக்கிறது கிழவருக்கு! உங்கள் தகப்பனாருக்கு இத்தனை வஞ்சக எண்ணம் இருக்குமென்று நான் நினைக்கவே இல்லை!" என்று ஆவேசத்தோடு கூறினாள். தகப்பனாரைப் பற்றி அவருடைய பிள்ளையிடமே புகார் செய்கிறோமே என்ற பயம் கிஞ்சித்தேனும் அவளிடம் காணவில்லை. இருபது வருஷத்திய தாம்பத்ய வாழ்வு அவளுக்கு அந்த அசாதாரண துணிச்சலைக் கொடுத்து விட்டது.

சபேசனுக்குக் காவேரியின் பேச்சு அதிர்ச்சியை உண்டாக்கியது. "என்ன! அப்பாவுக்கா கடன்? இருக்காதே. அவரிடம் சுமார் ரூபாய் ஐம்பதினாயிரத்துக்குக் குறையாத சொத்து இருக்க வேண்டுமே! காவேரி, உன்னைக் கலியாணம் செய்து கொண்ட பின் என் பெற்றோர்களுக்கு என்னுடைய கடமையை நான் சிறிதளவு கூடச் செய்யவில்லை. அப்படியிருக்கையில் அவருடைய சொத்தை மட்டும் நாம் எதிர் பார்ப்பானேன்? இனிமேலாவது என் கடமையை நான் செய்யத் தவறப் போவதில்லை. மேலும் என் தங்கை ருக்குவும் உன்னைப்போல அப்பாவின் சொத்துகளுக்கோ, அம்மாவின் நகைகளுக்கோ ஏங்கிக் கிடக்கும் வறட்சியானவள் இல்லை என்பதை முதலில் தெரிந்து கொள். ருக்குவின் கணவர் சென்னையிலேயே பிரபல டாக்டர் என்பதும் மாதம் மூவாயிரம் ரூபாய்க்குக் குறையாத வருமானமுடையவர் என்பதும் உனக்குத் தெரிந்த விஷயமே. என் தாயாருக்குத்தான் என் கடமையைச் செய்யத் தவறி விட்டேன். அப்பாவையும் நம் கூட அழைத்துப் போகப் போகிறோம்!" என்று சிறிது கோபத்துடனேயே சொல்லி விட்டு வாசலுக்குச் சென்று விட்டான். இத்தனை நாளாக இல்லாமல் கணவனுக்கு வந்த கோபத்தைப் பார்த்து ஸ்தம்பித்து விட்டாள் காவேரி.

* * *

கிழவர் வேதரத்தினம் புன்னங்குடி கிராமத்தில் பெரிய மிராசுதார். ஆஸ்திக்கு ஒரு பிள்ளை சபேசனும் ஆசைக்கு ஒரு பெண் ருக்குவும்தான் அவருடைய சந்ததிகள். வேதரத்தினம் தம்பதிகள் புன்னங்குடி கிராமத்தை விட்டு நகர்ந்தவர்களல்ல. சபேசனை மட்டும் சென்னைக்கு அனுப்பி வைத்து வக்கீலுக்குப் படிக்கவைத்தார். வக்கீல் பரிக்ஷை பாஸ் செய்தவுடன் சென்னையிலேயே பிரபல வக்கீல் ஒருவரிடம் ஜூனியராக அமர்ந்தான் சபேசன். பெண் ருக்குவுக்கும் நல்ல இடத்தில் ஒரு டாக்டருக்குக் கலியாணம் செய்து விட்டார்கள். சபேசனும் முன்னுக்கு வந்துவிடுவான். அவனுக்கும் ஒரு கல்யாணம் பண்ணி விட்டால் கவலை தீர்ந்தது என்று எண்ணினார்கள் வேதரத்தினம் தம்பதிகள். அந்தக் கவலைக்கும் இடமளிக்காமல் சபேசனுடைய "சீனியர்" வக்கீலே திடுதிப்பென்று ஒரு நாள் தம்முடைய பெரிய காரில் புன்னங்குடி கிராமத்திற்கு விஜயம் செய்து தமது ஆறாவது பெண் காவேரியை மருமகளாக்கிக் கொள்ள வேண்டுமென்று வேதரத்தினத்தினிடம் விண்ணப்பித்துக் கொண்டார். வேதரத்தினத்திற்குச் சந்தோஷம் பிடிபடவில்லை. அவ்வளவு பிரபல வக்கீல் அவர்களே நேரில் வந்து கேட்டதில் ரொம்ப திருப்தியடைந்து விட்டார். அடுத்த முகூர்த்தத்தில் சிரஞ்சீவி சபேசனுக்கும் சௌபாக்கியவதி காவேரிக்கும் சிறப்பாகக் கலியாணம் நடந்தது. வேதரத்தினத்தின் சம்பந்தி வீட்டவர்கள் அவருடைய ஐசுவரியத்தையும், ஆடம்பரத்தையும் பார்த்துப் பூரித்துப் போய் விட்டார்கள். கொஞ்ச நாள் கழித்துச் சென்னையிலேயே வக்கீல் தொழிலையும் ஆரம்பித்துத் தனிக் குடித்தனமும் வைத்தான் சபேசன். வேதரத்தினத்தையும் அவர் மனைவியையும் எவ்வளவோ தூரம் சபேசன் தன்னிடம் வந்திருக்கும்படி வற்புறுத்தின போதிலும் அந்தக் கிழத் தம்பதிகள் தங்கள் பூர்வீக கிராமத்தை விட்டு வரப் பிரியப்படவில்லை.

வருவாய்க்கு ஏற்ற செலவு செய்ய ஆதி முதலே தெரியாததால் சபேசனால் திடீரென்று செலவைக் கட்டுப்படுத்த முடியவில்லை. காவேரியின் நகைகள் ஒவ்வொன்றாக மார்வாரியின் கடைக்கு மாறின. அவள் கலியாணத்திற்குக் கொடுத்திருந்த வெள்ளிப் பாத்திரங்கள்கூடப் பணமாக மாறித்தான் சபேசனுடைய குடும்பம் நடந்து கொண்டிருந்தது. இரண்டு பெண்கள் கலியாணத்திற்கு நின்றனர். இரண்டு பிள்ளைகள் காலேஜை எட்டிப் பார்க்க ஆரம்பித்திருந்தார்கள். இரண்டு குழந்தைகள் இரண்டும் கெட்டான் வயதில் இருந்தன. சபேசனும் தன்னுடைய நிலைமையைப் பெற்றோர்கள் அறியாதிருக்கும் வண்ணம் பெற்றோர்களிடம் லீவுக்குப் போவதைக் கூட "வேலையிருக்கிறது" என்று பொய்க் காரணத்தைச் சொல்லிக் கூடுமானவரையில் ஒத்திப் போட்டுக் கொண்டே வந்தான்.

காவேரிக்குத் தன் குடும்பப் பொருளாதார நிலைமை மோசமாகப் போய்க் கொண்டிருப்

GP. 8479




# இந்தியர்கள் நன்கு அறிவர்

அன்றாட குடும்ப போஜனத்தில் பால் எவ்வளவு இன்றியமையாதது என்பதை முதன் முதலாக உணர்ந்தவர்கள் இந்தியர்கள் தான். பாலுடன் ஒரு தேக்கரண்டி நிறைய க்ளுகோவிடாவும் கலந்து சாப்பிட்டால் இருமடங்கு ஜீவசக்தியுண்டாகும் என்பதும் இந்தியர்களுக்குத் தெரியும்.

க்ளுகோவிடா என்பது இயற்கை ஜீவசக்தி உணவெனக் கருதப்படும் க்ளுகோஸ்-D செழிப்பிக்கப் பெற்றது. அது நேராக உங்கள் ரத்தத்துடன் சேர்ந்து ஒன்றுபடுகிறது. க்ளுகோவிடா சோர்வை அகற்றி உடனே அதிகப்படியான ஜீவசக்தியளிக்கிறது.

குடும்பத்தில் அனைவருக்குமாக, இன்றே ஒரு பெரிய டின் வாங்குங்கள்!

**க்ளுகோவிடா இரட்டிப்பு ஜீவசக்தி தருகிறது.**



**காரன் ப்ரொடக்ட்ஸ் கோ. (இந்தியா) லிட். பம்பாய்**

பது நன்றாகத் தெரிந்திருந்த போதிலும், அதற்காக அவன் கொஞ்சமேனும் கவலைப் பட்டதாகத் தெரியவில்லை. மாமனாரிடமிருக்கும் நிலம், சொத்து எல்லாம் ஒரே பிள்ளையான தன் கணவனைத் தானே சேரவேண்டுமென்ற மமதையில் இருந்து வந்தாள். தன் நகையெல்லாம் போனால்கூட மாமியாரிடம் இருக்கும் பதினாயிரம் ரூபாய் பெறுமான விலையுயர்ந்த நகைகள் தன்னிடம் வந்து சேரப் போகிறது என்ற திட நம்பிக்கையுடன் இருந்தாள்.

உலகத்தில் அற்ப மானிடர்கள் நினைப்பதெல்லாம் நடந்து விடுகிறதா? திடீரென்று சபேசனுடைய தாயார் திரிபுரசுந்தரியம்மாள் மார்பு வலி என்று படுத்தவள் மஞ்சள் குங்குமத்துடன் பூமாலைக் கழுத்தோடு பர்த்தாவின் மடியிலேயே நிமிஷப் போதில் உயிரை விட்டு விட்டாள். பக்கத்தில் சபேசனும் ருக்குவும் கூட இல்லை. தந்தி சென்னைக்குப் பறந்தது. காவேரிக்குத் தந்தியைப் பார்த்த முதலில் மாமியாரின் முகத்தை விட அவள் அணிந்திருந்த நகைகள் தான் அவள் கண்முன் வந்து நின்றன. மாமியாரின் பிரிவுக்காக ஒரேயடியாக அழுது அட்டகாசம் செய்த மனைவியின் செயலைக் கண்டு சபேசனே முதலில் திடுக்கிட்டான்.

திரிபுர சுந்தரியம்மாளின் இறுதிச் சடங்குகளெல்லாம் துரிதமாக நடந்தேறியது. தன் மாமியாரின் நகைகளைக் கிழவர் தன்னிடம் ஒப்படைக்கும் வேலையை ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருந்தாள் காவேரி. வேதரத்தினமோ ஒரு விஷயத்தைப் பற்றியும் வாயைத் திறக்கவில்லை. தள்ளாத காலத்தில் தன்னைத் தீராத துயரில் தவிக்கவிட்டுச் சென்ற மனைவியின் பிரிவை எண்ணி எண்ணி உருகிக் கொண்டும், பெருமூச்சு விட்டுக் கொண்டும் அவர் திண்ணையோடு திண்ணையாகப் பிரமை பிடித்தவர்மாதிரி உட்கார்ந்து விட்டார். அந்த நிலையிலும் கூடப் பிள்ளையின் பொருளாதார நிலைமை கிழவரின் கண்களின் பட்டுக் கொண்டுதான் இருந்தது. அபிஷேக அம்மன் மாதிரி குத்துமணி தங்கம்கூட இல்லாமல் கலியாண வயதை அடைந்திருக்கும் பேத்திகளையும், தாலிச் சரட்டுடன் வளையவரும் மருமகளையும் கண்டு அவரால் வருந்தாமலிருக்க முடியவில்லை.

இந்தச் சமயம் ருக்குவும் தகப்பனாரின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு, "அப்பா! மன்னியைப் பார்த்தீர்களா? வயிற்றைக் கொதிக்கிறது. எப்படியிருந்தவள் எப்படி ஒன்றுமில்லாதவளாகிவிட்டாள், பாருங்கள். இரண்டு பெண்களுக்குக் கலியாணம் செய்ய வேண்டும். இன்னமும் பொறுப்பில்லாமல் உலகம் தெரியாமல் இருக்கிறாளே! நேற்று பத்மாவிடம் 'தாத்தாவிடம் போய்ப் பாட்டியின் முறுக்குச் சங்கிலியைக் கேள்' என்று சொல்லிக் கொண்டிருந்தாள். அம்மாவின் நகைகளை இப்பொழுதே மன்னியிடம் கொடுத்து விட்டீர்களானால் அதையும் ஆடம்பரச் செலவு செய்து விட்டுக் குழந்தைகளை மறுபடியும் இதே நிலையில்தான் வைத்திருப்பாள். நான் அசூயையினால் சொல்கிறேன் என்று நினைக்காதீர்கள். கடவுள் கிருபையாலும் உங்கள் ஆசீர்வாதத்தினாலும் இன்று வரை எனக்கு ஒரு குறைவும் இல்லை. அண்ணாவின்மேல் இருக்கும் அநுதாபத்தினால் தான் சொல்கிறேன். மேலும் மன்னியின் சுபாவம் ஒருவரிடத்தில் சற்று பசையிருக்கும் வரையில்தான் அன்பு, மதிப்பு, உபசாரம் எல்லாம் கொடுப்பாள். ஆசாமி வறட்சி என்றால் திரும்பிப் பார்க்க மாட்டாள்" என்று ஏதோ சொல்லிக் கொண்டே போனாள்.

கிழவருக்கு விஷயம் விளங்கி விட்டது. தம் பெண்ணின் நோக்கத்தை அவர் புரிந்து கொண்டார். "ருக்கு! உன் மன்னி மட்டும் என்ன அம்மா? உலகமே அப்படித்தானே? என்னிடம் காலணா காசு கிடையாது! உங்கள் இருவருக்குமாக நான் என்னிடமிருக்கும் நிலபுலன்களையும் உன் தாயார் நகைகளையும் விற்றுச் செலவழித்து விட்டேன். இனி என் ஒரு கட்டைக்கு என்ன வேண்டும்? குழந்தைகளாகிய உங்களிடம் என்னுடைய உண்மை ஸ்திதியைச் சொல்லி உங்களைக் கலங்கச் செய்ய வேண்டாம் என்றே இதுவரை சும்மா யிருந்தேன். உன்னிடம் ஆறு மாதமும் சபேசனிடம் ஆறு மாதமுமாக என்னுடைய மிஞ்சியுள்ள நாட்களைக் கழித்து விடுவேன்!" என்றார். ருக்கு ஸ்தம்பித்துப் போய் விட்டாள். அவள் உடனே இந்த பேரிடி போன்ற சமாசாரத்தைத் தன் கணவரிடம் சொல்ல ஓடினாள். ருக்குவின் கணவர்



மாமியாரின் காரியத்திற்காக வந்தவர் மனைவி மூலமாக மாமனாரிடம் ஒன்றும் இல்லை என்று தெரிந்து கொண்டபின் அக் குக்கிராமத்தில் ஒரு நிமிஷம்கூட இருக்கப் பிரியப்படவில்லை. தன் மனைவியையும் அழைத்துக் கொண்டு உடனே சென்னையை நோக்கிக் கிளம்பி விட்டார் அந்தப் பிரபல டாக்டர்!

* * *

"அப்பா! ருக்குகூட ஊருக்குப் போய் விட்டாள். நானும் நாளைக்குப் போகலாம் என்று இருக்கிறேன். நீங்கள் மட்டும் இங்கு தனியாக இருக்க வேண்டாம். என்னுடன் வந்து விடுங்கள்" என்றான் சபேசன்.

"அதற்கென்ன? நீ எப்பொழுது புறப்படுகிறாய்? நானும் கிளம்பத் தயார்!" என்றார் வேதரத்தினம்.

"அப்பா! இங்கு நம் நிலபுலன்களை மேற்பார்வை பார்க்க யாரையாவது ஏற்பாடு செய்ய வேண்டாமா? நம் சொத்துக்களுக்கு ஒரு காரியஸ்தரையாவது ஏற்பாடு செய்ய வேண்டாமா?" என்று தயங்கியபடியே மெதுவாகக் கேட்டான் சபேசன்.

கிழவர் சபேசனைத் தலையிலிருந்து கால் வரை ஒரு நோட்டம் பார்த்து விட்டு ஒரு வறண்ட சிரிப்புடன், "சொத்து! அது எங்கேயப்பா இருக்கிறது! உன்னை வாசிக்க வைத்து ருக்குவையும் கலியாணம் செய்து கொடுத்ததுமே அந்த மூன்று வார்த்தைகளும் கரைந்து போய்க் கடன்தான் மேலோங்கி நின்றது. எந்தக் கஷ்டத்தையும் நானும் உன் அம்மாளுமே பகிர்ந்து கொண்டு அனுபவித்தோம். அவளும் போய் விட்டாள். என்னால் தனியாக இந்தக் கடன் தொல்லைகளைச் சமாளிக்க முடியாது போல் தோன்றியது. குழந்தைகளாகிய உங்கள் இருவருக்கும் இவைகளையெல்லாம் சொல்லி மன வருத்தத்தை உண்டு பண்ணக்கூடாதென்று உன் அம்மாவின் நகைகளையும் நிலம் முதலியவைகளையும் விற்றுக் கடனுக்கும் வட்டிக்குமாகப் பங்கீடு பண்ணிவிட்டேன். எஞ்சியிருப்பது இந்தப் பழைய வீடும் இதிலுள்ள பழைய பாத்திரம் பண்டங்களும்தான். நீயும் ருக்குவும் நல்ல ஸ்திதியில் இருக்கிற சந்தோஷத்தோடு உன் அம்மா என்னையும் அழைத்துக் கொள்ள வேண்டும்!" என்று சொல்லி முடித்தார். சபேசனுக்கு இது ஒரே அதிர்ச்சியாயிருந்தது. பிறகு தன்னைச் சமாளித்துக் கொண்டு, ஒரு விசேஷமும் செய்யாத தனக்கே கடன் வந்திருக்கும் பொழுது அப்பா தங்கள் இருவரையும் ஆளாக்கி முன்னுக்குக் கொண்டு வந்து கலியாணம் செய்ததில் கடனாளியாயிருந்தால் ஆச்சரியம் ஒன்றும் இல்லையென்று தன்னைத் தானே தேற்றிக் கொண்டு அப்பாவையும் அழைத்துக்கொண்டு சென்னைக்கு வந்து சேர்ந்தான்.

ஒரு பழைய பெட்டியைத் தவிரக் கிழவர் ஒன்றையும் தன் சாமானென்று சொல்லிக் கொள்ளக் கொண்டு வரவில்லை. காவேரியின் ஆசைகளெல்லாம் நிராசையாகப் போய் விட்டது. மாமனாரிடம் அவளுக்குச் சப்பிட்டு விட்டது. ஒரு வயதான மனிதரை ரட்சிப்பதென்றால் சாமான்யமல்லவே! காலாகாலத்தில் அவருக்குச் சிசுருஷை செய்வது என்பது ரொம்பவும் கசப்பாகவே இருந்தது.

ஒருநாள் கிழவர் வாசலில் கடைக்குட்டிப் பேரனுடன் விளையாடிக் கொண்டு உட்கார்ந்திருந்தார். அப்போது உள்ளே இருந்தவாறே காவேரி தன்னுடைய அடித் தொண்டையில், "ஏ ராமு! வாசலில் என்னடா சொகுசான உட்காரல்! வேளா வேளைக்கு உள்ளே வந்து காப்பியோ சாப்பாடோ கொட்டிக் கொண்டு போவது தானே! நான் வாசலில் வந்து உனக்குக் கொடுக்கணுமோ? வச்ச வரிசைக்கு இது நடப்பதே பெரிசு!" என்று ஆத்திரம் பொங்கக் கத்தினாள்.

குழந்தை ராமு இந்தத் திடீர் தாக்குதலினால் நடுங்கிப் போய்த் தாத்தாவிடம் ஒட்டிக் கொண்டு, "தாத்தா! நான் அப்பவே சாப்பிட்டு விட்டுத் தான் வந்தேன். அம்மா இப்போ ரொம்ப திட்டறா! முன்னெல்லாம் கூட ரொம்ப இந்த மாதிரி வைய மாட்டான்!" என்றான் கண்களில் நீர் ததும்ப, கிழவர் பேரனை அணைத்தவாறு, "கண்ணே! அவன் உன்னைச் சொல்லவில்லையடா! என்னைச் சொல்கிறான். நீ அழாதேடா!" என்று பெருமூச்சு விட்டுக் கொண்டு எழுந்து சென்றார்.

அன்று சாயங்காலம் சபேசன் கோர்ட்டிலிருந்து வந்தவுடன் காவேரி, "நான் ராமுவைக் கோபித்துக் கொண்டால் கூடத் தன்னைச் சொன்னதாகக் குழந்தைகளிடம் எல்லாம் சொல்லுகிறார் உங்கப்பா!" என்று சொல்லி நீலிக் கண்ணீர் விட்டாள்.

நாளாக ஆக இந்தச் சில்லறைத் தகராறுகள் முற்ற ஆரம்பித்தன. சபேசனுக்கே தகப்பனார் இருப்பது பெரும் பாரமாகத் தோன்ற ஆரம்பித்து விட்டது. கிழவர் வேதரத்தினத்திற்கு இரண்டு மூன்று நாளாக ஜலதோஷமும் இருமலுமாக இருந்தது. அதோடு கிழவர் குளிக்கும் போது அண்டாவில் வெந்நீர் இல்லாமல் அடுப்பை அணைக்கும் கைங்கரியத்தைப் பார்த்துக் கொண்டாள் காவேரி. கிழவர் வாயைத் திறக்காமல் பச்சைத் தண்ணீரில் குளித்துவிட்டு வந்து கொண்டிருந்தார். அவருக்கே மனசு ரொம்பக் கஷ்டம் தாங்காமற் போனால், "உம்! திரிபுரம்! நீ உத்தமி அதனால்தான் ஜாம், ஜாம் என்று போய் விட்டாய்! என்னை இப்படித் திண்டாடவிட்டு வேடிக்கை பார்க்கிறாய்!" என்று சொல்லிக் கண்ணீர் சிந்துவதைத் தவிர அவரால் வேறொன்றும் செய்ய முடியவில்லை.

பச்சைத் தண்ணீரிலேயே குளித்ததினால் அவருக்கு இருமல் அதிகமாகி ஜுரம் வந்து விட்டது. கிழவர் கண்ணைத் திறக்காமல் படுத்துக் கொண்டு விட்டார். வெகு நாட்களுக்குப் பிறகு அன்று தந்தையைப் பார்க்க வந்தவருக்கு அவருடைய தேக நிலையைக் கண்டு திடுக்கிட்டாள்.



Aryan
Regd.
இந்தியாவிலேயே சிறந்த டூத் பிரஷ்
பிளாஸ்டிக் குழாய்களில் இப்போது கிடைக்கும்.



நாயின் சொந்தக்காரர் :-ஏனய்யா அலறுகிறீர்! என் நாய் உம்மை ஒன்றும் செய்யாது. நீங்கள் வாயில் அசோகா பாக்கு போட்டுக் கொண்டிருக்கிறீரா என்று மோப்பம் பிடித்துப் பார்க்கிறது!

"என்ன அண்ணா! இப்படி உடம்பு அதிகமாகும் வரை எனக்குச் சொல்லி யனுப்பாமல் இருந்து விட்டாயே! எத்தனை நாளாக அப்பாவுக்கு உடம்பு இப்படி யிருக்கிறது? எந்த டாக்டர் பார்க்கிறார்? என்ன சொன்னார்?" என்று சரமாரியாகக் கேள்விகள் கேட்டான். யாராவது டாக்டரிடம் காண்பித்தால் அல்லவா பதில் சொல்வதற்கு? சபேசன் வாயைத் திறக்கவில்லை.

கிழவர் படுத்து ஒரு வாரத்துக்குமேல் ஆகி விட்டது. சபேசன் தகப்பனாருக்கு முதலிலேயே நல்ல சிகிச்சை செய்யவில்லையே என்று அவனுடைய மனச்சாட்சி அவனை வேதனை பண்ணிக் கொண்டிருந்தது. ஏதோ காவேரி பேருக்கு எல்லாம் செய்து கொண்டிருந்தான். ருக்குவுக்கும் சொல்லி யனுப்பி விடவே அவளும் கடைசி நேரத்தில் விரோதம் பாராட்டக் கூடாதென்று நினைத்து, தந்தையின் அருகிலேயே உட்கார்ந்திருந்தாள். டாக்டரும் அன்றைய தினம் தாண்டுவது கடினம் என்று சொல்லி விட்டுப் போய் விட்டார். கிழவர் கண்ணையே திறக்கவில்லை. அவர் விடும் மூச்சு அந்த ஹாலிலேயே பயங்கரமாக ஒலித்துக் கொண்டிருந்தது. திடீரென்று கிழவர் கண்ணைத் திறந்து பார்த்தனர். "என்ன அப்பா வேண்டும்!" என்று ருக்குவும் சபேசனும் ஏக காலத்தில் கேட்டார்கள். ஒன்றும் வேண்டாம். என்றபடி தலையை ஆட்டி ஒருதரம் எல்லாரையும் பார்த்தார். விழிகள் அப்படியே குத்திட்டு நின்று விட்டன. இந்தப் பாப உலகத்தையும், சுயநலமே உருவாயுள்ள சுற்றத்தார்களையும் விட்டு விட்டு மீளா நித்திரையில் ஆழ்ந்து விட்டார்.

கிழவரின் காரியங்களெல்லாம் ஒருவாறு நடந்தேறியது. அவருக்காக ஒருவரும் உருகிப் போய் ஏங்கி விடவில்லை. இந்த மட்டும் ஒரு தொல்லை விட்டதென்றே எல்லாரும் எண்ணினார்கள். பதினைந்து நாட்கள் கிழிஷமாகச் சென்று விட்டன. உள்ளெல்லாம் சுத்தம் செய்து பெருக்கினாள் காவேரி. கிழவருடைய பழைய தகரப்பெட்டி அனாவசியமாக எதற்கு என்று அதை எடுத்துக் கொண்டு சபேசனிடம் வந்து, "இந்தப் பெட்டியை ஓட்டை, உடைசல் சாமான்களோடு கடையில் போட்டு விடட்டுமா?" என்று கேட்டாள்.

"எங்கே! இங்கே கொண்டு வா, அந்தப் பெட்டியை! அப்பா அதில் என்ன வைத்திருந்தார் என்று பார்ப்போம்!" என்று கேட்டபடி அந்தப் பெட்டியைச் சபேசன் காவேரியிடமிருந்து வாங்கிப் பூட்டை உடைத்துப் பெட்டியைத் திறந்தான். மேலாகப் பழைய வேஷ்டிகளில் இரண்டும் ஒரு துண்டும் மட்டும் இருந்தன. சபேசனுக்கு அதைப் பார்த்ததும் அவனையும் அறியாமல் அவனுடைய தந்தையின் நினைவு வந்து அவன் மனசைக் கலக்கிற்று. தானாடா விட்டாலும் தன் சதையாடும் அல்லவா? பெரு மூச்சு விட்டவாறு அந்த வேஷ்டிகளை எடுத்தான். அதில் ஒரு கவரில் சபேசனின் விலாசம் எழுதப் பட்டிருந்தது. தனக்கு என்ன அவர் எழுதி யிருக்கக் கூடும் என்ற ஆவலினால் உந்தப் பட்டவாறு அதைப் பிரித்துப் படித்தான் :—

"என் பிரியமுள்ள சபேசனுக்கு.

சர்வ மங்களமும் உண்டாவதாக. நான் வாழ்க்கையில் எவ்வளவோ கஷ்டப்பட்டவன். உழைத்து உழைத்து முன்னுக்கு வந்தவன். எனக்குப் பணத்தின் அருமை தெரியும். நீயும் காவேரியும் செலவழிக்கும் ஆடம்பரச் செலவுகளைப் பார்த்து மனம் நொந்தேன். நான் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த பணம் இப்படி விரயமாவதை என் கண்கள் பார்க்கச் சகிக்காது. இனிமேல் உனக்கு உன் வாழ்க்கையை வகுத்துக் கொள்ளவும் தெரியப் போவதில்லை. என் சொந்தமான ரூபாய் ஐம்பதினாயிரத்தையும் உன் குழந்தைகள் பேருக்கே தனித் தனியாக உயில் எழுதி "ராமச்சந்திரா பாங்கி"யில் டிபாஸிட் பண்ணி யிருக்கிறேன். உன் பெண்களுக்கு அவர்களுடைய பாட்டியின் நகைகளையும் அவர்கள் பேருக்கு மேற்படி பாங்கியிலேயே தகுந்த மேற்பார்வையாளர் வசத்தில் வைத்திருக்கிறேன். குழந்தைகள் மேஜரான பிறகு அவர்களுக்கு அந்தச் சொத்தும் பணமும் கிடைக்கும். அதிலேயே சௌ. ருக்குவுக்கும் டிபாஸிட் பண்ணி வைத்து இருக்கிறேன். உன் குழந்தைகளுக்காவது, பணம் இருந்தால்தான் ஒருவரை மதிப்பது என்று இருக்கக் கூடாது என்ற புத்திமதியைச் சொல்லிக் கொடு. எனக்கு நீ எப்படி யிருந்த போதிலும் என் குழந்தை.

அப்பா."

கடிதத்தைப் படித்து முடித்தவுடன் "அப்பா!" என்று கத்திய வண்ணம் மேஜை மேல் குப்புறப் படுத்து விட்டான் சபேசன்.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras



# உங்கள் குழந்தைகள்

# கிப்ஸ் உபயோகிக்கிறார்களா?

**கிப்ஸ் உபயோகிக்கும் குழந்தைகள் அதன் ருசியை விரும்புகிறார்கள் –**

*மகிழ்ச்சி தரும் மணத்தை ரசிக்கிறார்கள்!*



**பெற்றோர்கள் அதன் விலையை விரும்பு-கிறார்கள் –**

*அது மிகவும் குறைந்த விலையில் கிடைக்கிறது.*



அழகான

நீலம்,

சிவப்பு,

பச்சை

டப்பிகளில்

**எல்லோரும் கிப்ஸ் தரும் வெண்மையை மெச்சுகிறார்கள் –**

அது பற்களை வெண்மையாக சுத்தம் செய்கிறது. ஈறுகளை ஆரோக்கியமாக வைத்திருக்கிறது!



# கிப்ஸ் டென்டிபிரிஸ்




**பற்களுக்கு சீரிய குணமளிக்கிறது—குறைந்த செலவில்!**

GD. 34-50 TM — டி. அண்டு டபிள்யூ. கிப்ஸ் லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது

REGD. NO. M. 4392

*Registered as a newspaper in Ceylon*





# நாளுக்கு நாள் அதிக தெளிவான, எழிலோங்கும் சருமம்

ரெக்ஸோனுவிலுள்ள **கேடில்** இந்த அற்புத வேலையைச் செய்யட்டும்



தினமும் ரெக்ஸோனு சோப் உபயோகியுங்கள். இதன் கேடில் கலந்த நுரை உங்கள் சருமத்தை நாளுக்கு நாள் அதிக மிருதுவாகவும், தெளிவாகவும் இருக்கச் செய்யும்.




## ரெக்ஸோனு

## கேடில் கலந்த சோப் இது ஒன்றே

* சருமத்திற்கு ஊட்டமளித்து மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர்.

RP. 109-50 TM

ரெக்ஸோனு ப்ரொப்ரைட்டரி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது.